# PARADISE LOST.

## BOOK I.



IN TAMIL VIRUTTAM



BY

V. P. SUBRAMANIA MUDALIAR G. M. B. V. C.,

*Civil Veterinary Department, Madras; Graduate of the Madras Agricultural College and Translator of Veterinary Major J. Mills' Indian Stock Owner's Manual.*

---

ஆங்கிலேய மஹாகவி

ஜான் மில்ட்டனர்

இயற்றிய

# சுவர்க்க நீக்கம் முதற்காண்டம்,

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

விருத்தப்பாவில்

மொழிபெயர்த்தது.

---

சென்னை:

அல்பினியன் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1895.

# CONTENTS.

சென்னைச்

சர்வ கலா சங்க சாமாஜிகர்,

இராயபஹதூர், B.A., B.L.,

யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள்

இயற்றிய

## சிறப்புப் பாயிரம்.



வெள்ளக்காற் பழனியப்பன் வியன்சுதன்சுப் பிரமணிய
விபுதன் றீஞ்சொற்
கொள்ளைக்கோ ருறையுளெனக் குலவுதமி ழினில்விட்ட
குசல னிங்லிஷ்
அள்ளிக்கூட் டணமேனு ளுறைசுவர்க்க நீக்கமதை
அளித்தான் விள்ள
விள்ளக்கா தினிற்கஃது விளைக்குமின்பப் பெருக்கெவர்க்கும்
விளம்பற் பாற்றே.

# PREFACE.

The main portion of this work is a translation of Book I of "Paradise Lost" in Tamil Viruttam, the metre in which "Kambaramayanam" and most of the other great Tamil Epic poems are written. This metre has many varieties suited to many different phases of feeling presented in an Epic poem, and has therefore been adopted in the present work.

The first two books of "Paradise Lost" have been translated by the late Mr. Thomas Vedanayaga Nadar, M. A. in 'Ammanai' metre, the metre as well as the style of the version being more or less adapted to the fair sex of the Tamil reading public. In the present version a high classical style has been imitated from the best Tamil Epic poets with a desire to reach the sublimity of the original as far as lay within the humble means of the translator.

In the opinion of some scholars, a translator's duties end with the mere adoption of the bare facts of the original work, he being expected to set them in as grand and picturesque a frame as his imagination is able to form. Whatever may be the merits of this view, it has not been followed in the present instance. On the other hand, I have spared no pains in rendering the version as faithful as possible—as far as the exigencies of idiom and metre would allow. Foreign ideas will appear foreign, however homely and appropriately they may be expressed in a translation. I would therefore request my readers not to mistake foreignness of ideas for foreignness of style. The translation was undertaken with a purely literary object and my ambition was to transplant some of the beautiful

# சுவர்க்க நீக்கம்.

## மொழிபெயர்ப்பு

## *முகவுரை.

இந்நூல், இங்கிலிஷ் பாஷையில் மில்ட்டன் என்னும் மஹாகவியாற் செய்யப்பட்டுப் பன்னிரண்டு காண்டங்களடங்கியுள்ள பெருங்காவியம்: சகல மனுஷ ஜாதியாருக்கும் மூலபிதா மாதாக்களென்னும் ஆதாம் ஏவாளாகிய ஆதிமக்கள், ஏதேன்தேசத்தில் பலவளங்களும் மலிந்து மனோகரமாய் விளங்கிய ஒரு சிங்காரவனமே சுவர்க்கமாக அச்சுவர்க்கத்தில் இனிது வாழ்ந்தகாலத்திலே, கடவுள் தின்னக்கூடாதென்று விலக்கியிருந்த விலக்குமரக்கனியைச் சாத்தானது வஞ்சச் சோதனையிலகப்பட்டு மயங்கித்தின்று தேவகற்பனையைக் கடந்து பாவஞ்செய்ததனால், நித்தியத்துவம் நீங்கி மரணத்துக்கும் சகலதுன்பங்களுக்கும் (அவர்களும் அவர்கள் மூலமாக அவர்கள் சந்ததியாராகிய எல்லாமனிதரும்) உள்ளாகி, அச்சுவர்க்கத்தினின்று நீக்கப்பட்ட விஷயத்தைக் கூறுவதனால் **சுவர்க்க நீக்கம்** (Paradise Lost) எனப்பெயரிடப்பெற்றது. தேவகுமாரனார், 'சூழவிப்பிணிதீரத் தாய் மருந்துகொள்வதுபோல' மக்களுடையபாவம் நீங்கத் தாம் தண்டனையடைவாராய், யேசுகிறிஸ்துவென்னும் நாமத்தோடு மனுஷாவதாரஞ்செய்து, 'வெள்ளத்தில் விழுந்த பிள்ளையைக் கரையேற்றத் தாயும் அவ்வெள்ளத்தில் வீழ்தல்போல' சாத்தான் சோதனையிலகப்பட்டு மூழ்கியமக்களைக் கரையேற்றத் தாமும் அவன் சோதனைக்குள்ளாகி அதைக்கடந்து அவனைச்செயித்து, பாவ நிவாரணம்செய்து, மனிதர் இழந்திருந்த சுவர்க்கவாழ்வை அவர்களுக்கு மீட்டுக்கொடுத்ததைக் கூறும் **சுவர்க்கமீட்சி**(Paradise Regained) என்னும் காவியமும் மேற்கூறிய மகாகவி செய்ததே.

---

* இம்முகவுரையில் ஒருபகுதி "விவேகசிந்தாமணி" என்னும் மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகையில் வெளிப்பட்டது. அது, அப்பத்திராதிபர் அனுமதியோடு சொற்பபேதத்துடன் இம்முகவுரையிற் சேர்க்கப்பட்டிருக்கிறது.

அங்கிலேய பாஷையிலுள்ள மூலநூலின் பெயர் 'பாரடைஸ் லாஸ்ட்' (Paradise Lost) என்பது, அதன் பதப்பொருள் 'சிங்கார வனம் இழந்தது' என்பதே; ஆனால், மில்ட்டனார் 'பாரடைஸ்' என்பதனால் அதன் பதப்பொருளாகிய சிங்காரவனத்தை வெளிப்படையாக உணர்த்தியதேயன்றி (அச்சிங்காரவனவாழ்க்கை, கேவலம், அடையாளமாகவிருந்த) மனிதரது ஆனந்த பதவியையுங் குறிப்பாகப் புலப்படுத்தினாரென்பது, அவர் சுவர்க்க நீக்கத்துக்கு உபநூலாக இயற்றிய நூலுக்குச் "சுவர்க்கமீட்சி" (Paradise Regained) என்று பெயரளித்ததனால் விளங்கும்; எவ்வாறெனில், "சுவர்க்கமீட்சி" யின் விஷயம் சுவர்க்கநீக்கத்திற் சொல்லப்பட்ட சிங்காரவனத்தையே மீட்டதாயில்லாமல், மனிதர் அதில் வாழ்ந்தபோது அனுபவித்துக்கொண்டிருந்த ஆனந்தபதவியை மீட்டதாயிருக்கின்றது.

சுவர்க்கநீக்கம் சுவர்க்கமீட்சி என்னும் இரண்டுநூல்களும், அங்கிலேய பாஷையின் சிறந்த கருத்துக்களுக்கேயன்றி மற்றும் அநேக யூரோப்பிய பாஷைகளின் சிறந்த கருத்துக்களுக்கும் ஒருங்குவதியும் உறையுளாகிக் கிறிஸ்தவரது வேதசாரத்தையுள்ளடக்கி, அவ்வேதத்தின் பழைய புதிய ஏற்பாடுகளிரண்டுமே சொற்சுவை பொருட்சுவை நிறைந்து பல அலங்காரங்கள் மலிந்து நவரசங்கொழிக்கும் இனியகாவியங்களாக உருவெடுத்தாற்போன்றனவென்று புகழப்பெற்றவைகள். ஆயினும் இவற்றுள், சுவர்க்கநீக்கம் காவியலக்ஷணத்தில் மிகவும் சிறந்தது. சுவர்க்கநீக்கத்திலும், முதலிரண்டு காண்டமே ஆரம்ப முதல் அந்தமளவும் அதி உன்னத கவிசாதுரியங்கள் இடைவிடாது நெருங்கத் தொடுத்தமைக்கப்பெற்ற பேராச்சரியகரமான சிறந்த காவியப்பகுதிகள். மற்றப்பத்துக் காண்டங்களிலும் சுவர்க்கமீட்சியிலும் அவ்வளவு சிறந்த அற்புத வித்துவ சாமர்த்தியங்கள் இடையிடையே தோன்றுகின்றனவேயன்றி எங்கும் ஒப்பக் காணப்படவில்லை. அங்கிலேய காவியங்கள் யாவற்றினும் மேலானதென்று கூறுதல் இச்சுவர்க்க நீக்கத்துக்கொரு சிறப்பன்று; இந்நூல், பரந்த உலகின்கணுள்ள பலபாஷைகளில் சிறந்த காவியங்களெவற்றினும் மேம்பட்டதென்று அநேக வித்துவான்களால் வியந்து கொண்டாடப்பெற்றது.

இக்காவியம், முதலில் லத்தின் பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டுப் பின்பு கிரேக்க, பிராஞ்சிய, இத்தாலிய, உலாந்திய, ஜெர்மானிய, ஸ்பானிய, போர்த்துகீஸிய, ருஷிய, சுவேதேணிய, ஐஸி

லாந்திய பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டதன்றித் தமிழிலும் இதன் கருப்பொருளடங்கிய "ஆதிநந்தவனப் பிரளயம்" என்னும் பெயருடைய நாடகமொன்று வேதக்கண்ணு ஐயர் இயற்றியிருக்கிறாரென்றும், இதன் முதற்காண்டம் யோவான் சாமுவேல் ஐயரால் வசனரூபமாகச் செய்யப்பட்டிருக்கிறதென்றும், தோமாஸ் வேத நாயக நாடார், தாம் இதற்குப் "பூங்காவனப் பிரளயம்" என்று பெயர்கொடுத்துத் தமிழில் அம்மானையாக மொழிபெயர்க்கமுயன்று அச்சேற்றியிருக்கும் முதலிரண்டு காண்டங்களின் மொழிபெயர்ப்படங்கிய புஸ்தகத்தில், கூறியிருக்கிறார். இவ்வளவு பெருமைபடைத்த இவ்வரும் பெருங்காவியம், பலராலும் பலரூபமாக மொழிபெயர்கப்பட்டாலும், அவை யொவ்வொன்றையும் வாசிப்போருக்கு, நூதனம் நூதனமான இனிமைபயந்து மகிழ்விக்கு மென்பதனாலும், ஒரு மொழிபெயர்ப்பில் தோன்றாதொழிந்த வனப்புக்கள் மற்றொன்றில் தோன்றலாமென்பதனாலும், ஹோமர் (Homer) முதலிய மஹாகவிகளாற் செய்யப்பட்டுள்ள சில சிறந்த காவியங்களுக்கு இங்கிலிஷில் பல மொழிபெயர்ப்புக்களிருத்தலானும் யானும் இதை மொழிபெயர்க்கத் துணிந்தேன்.

இந்நூல், கந்தம் இராமாயணம் பாரதம்போன்ற பெருங்காவியமாயிருத்தலால், அவைகள் எழுதப்பட்டுள்ள விருத்தப்பாவே தகுதியுடையதென்று அந்தப்பாவிலேயே இதை மொழிபெயர்க்கலாயினேன். மூலநூல், விஷயத்துக்கேற்க, அதிகெம்பீரமான உன்னத நடையில் எழுதப்பட்டிருத்தலால், அதற்கிணங்க இம்மொழி பெயர்ப்பும், (கம்பர், சிவஞானயோகிகள், சச்சியப்பமுனிவரர், குமரகுருபரசுவாமிகள், அதிவீரராமபாண்டியன் முதலிய உயர்நடைக்கவிஞர் செய்யுட்களை முன்மாதிரியாகக்கொண்டு) எனது புன்சத்திக்கியன்ற அளவு உயர்ந்த நடையில் எழுதப்பட்டிருக்கின்றது.

இம்மொழிபெயர்ப்பில் எனதுநோக்கம் என்னுடைய மனோதருமத்தைக் காட்டுவதாகச் சிறிது மில்லாது மூலநூற்கருத்தை உள்ளபடியே வெளியிடுவதாயிருந்ததனல், சிரமத்தையாயினும் காலதாமத்தையாயினும் கருதாதுழைத்து எனது மனோசத்திக்கும் பயிற்சிக்கும் இயன்ற அளவு, தமிழ்யாப்பமைதியும் நடையமைதியும் இடங்கொடுத்தமட்டும், ஆதிநூலாசிரியர் கருத்துக்களைக் கூட்டலும் குறைத்தலும் மாற்றலும் தவிர்த்து அவற்றின் யதார்த்த நிலையோடு வெளியிட்டிருக்கின்றேன். இவ்வாறன்றி, மொழிபெயர்ப்போன், மூலநூற்

கதாசாரத்தைமட்டும் கைக்கொண்டு, அதைத் தன் சொந்தக்கற்பனை அலங்கார முதலியவற்றோடு கலந்து வெளிப்படுத்தலே தகுதியென்பது சில தமிழ்ப்பண்டிதர் கொள்கை. இம்மொழிபெயர்ப்பில் யான் அவர் கொள்கையை அநுசரித்திலேன்.

தமிழறிந்தோர் அங்கிலேய பாஷையில் பழகுமுன் எழுதப்பட்ட நமது வசனநூல்களில், ஒரு வசனத்தின் முடிவையும் அடுத்த வசனத்தின் துவக்கத்தையும் காட்ட வசனங்களுக்கிடையே முடிப்பிசைக்குறி (Fullstop) யிட்டும் இடம்விட்டும் எழுதலாவது, ஒரு வசனத்தினுள்ளேயே வாசிப்போன் நிறுத்தி வாசிக்கவேண்டிய இடங்களில் உறுப்பிசைக்குறி (Comma) முதலியகுறியிட்டு இடம் விடுதலாவது, வார்த்தைகளொன்றினின் றொன்றைப் பிரித்துக்காட்டலாவது இல்லை. அந்தக்குறை இப்போது இங்கிலிஷ் பாஷையின் வழக்கத்தை அநுசரித்து வேண்டுமிடத்து இடம்விடுதலானும் பல குறியீட்டினானும் நிரப்பப்பட்டுவிட்டது. அவ்வாறு செய்யுள் எழுதும் முறை சீர்திருத்தப்படவில்லை. இப்போது அச்சிடப்பட்டுள்ள சிலநூல்களில் செய்யுட்கள் சீர்பிரித்துப் பதிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் சந்தியும் பிரித்துப் பதிக்கப்பெற்ற நூல்கள் மிகச்சில. செய்யுளைச் சந்திபிரித்துப் பதிக்கக்கூடாதென்பது அனேகர் கொள்கை. சந்திபிரிக்காத செய்யுட்களில் குறியீடு பெரும்பாலும் கூடாததே. சந்திபிரித்துக் குறியீட்டோடு எழுதப்பட்ட செய்யுள், வாசிப்போர்க்கு, அவ்வாறெழுதப்படாத அதே செய்யுளினும், எளிதாகப் புலப்படுமென்பதிற் சந்தேகமில்லை. செய்யுளைச் சந்திபிரித்தெழுதும்போது, "மடங்கொன் றறிவகற்றுங் கல்வி" என்பதை "மடங்கொன்று அறிவு அகற்றும் கல்வி" என்று எழுதினால் வெண்பா இலக்கணம் சிதைதல்போல், யாப்புக்கெடாமலும் சிலேடை யமகம் திரிபு மடக்கு முதலியவை பழுதாகாமலும் பிரித்தல்வேண்டும். சந்தி பிரியாதிருப்பினும் வாசிப்போர் இலகுவாயறிந்து கொள்ளக்கூடிய பாகங்களைச் சந்திபிரித்தெழுதல் ஆவசியகமன்று. சந்தி பிரித்துக்காட்டல் நலமாயும் அதனால் யாப்புக்கேடு வருவதாயும் இருந்தால், சந்திபிரித்துப் பொருள் கொள்ளவேண்டுமென்பதற் கடையாளமாகப் பிரிக்கவேண்டிய எழுத்துக்கு ஒருகுறியிடுதல் உசிதமாயிருக்கின்றது. 'வந்து அகாலத்துக் கண்டான்' எனற்பாலது இவ்வாறு சந்திபிரித்தெழுதினால் யாப்புக் கெடும்படியாகச் செய்யுளில் வருமாயின் யாப்புக்கேடுறாமல் 'வந்த'கா லத்துக் கண்டான்' என் றெழுதலாம்.

அவ்வாறே , ; : . இவை முதலிய குறியிடுதல் வேண்டியதாயிருந்தும் அக்குறியீடு யாப்புக்கெடாமல் அமையாதாயின், எவ்வெழுத்தைப் பிரித்து இடையே எக்குறி இடவேண்டுமோ, அவ்வெழுத்தைப் பிரியாமல் அதன்கீழ் அக்குறி இடுதலும் தகுதியாயிருக்கின்றது. "அட்டாலும்பால்சுவையிற்குன்றாதளவல்ல" என்பதை "அட்டாலும் பால்சுவையிற் குன்றாது, அளவல்ல" என்று பிரித்தெழுதில் யாப்புக் கெடுமாகலின, அவ்வாறெழுதாது "அட்டாலும் பால்சுவையிற் குன்றா̣தளவல்ல" என்று யாப்புக்கேடின்றிக் குறியிடலாம். சந்தி பிரித்தல் சீர்பிரித்தல் குறியீடு ஆகிய இவைகளைப் பற்றி இப்போது கூறிய கருத்துக்களை ஞாபகத்தில்வைத்து இப்புத்தகத்தில் செய்யுட்கள் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன, செய்யுட்களில், மேற்கூறியவாறு, சந்திபிரித்தல் சீர்பிரித்தல் குறியீடு ஆகிய மூவகைச் சீர்திருத்தமும் ஒருங்கே பிரயோகித்து இந்நூல்தான் முதற்கட் பதிப்பிக்கப்பட்டதென்பதில்லை. இதற்கு முன்னமே (சொற்ப பேதத்துடன்) இவ்வாறு பதிக்கப்பட்ட நூலுண்டு.

இங்கிலிஷ் செய்யுட்களில் யாப்பிலக்கணப்படி அடிகளைச் சீர் பிரிப்பதில் பதங்கள் அர்த்தமாகாதபடி சிதைதலும் அவ்வடிகளை அர்த்தமாகும்படி பிரிப்பதில் யாப்பிலக்கணங் கெடுதலும் உண்டு. அவ்வாறின்றித் தமிழ்ச் செய்யுட்கள் விஷயத்தில், பொருளறியும்படி சந்தி பிரித்தலும், யாப்பிலக்கணத்துக் கிணங்கச் சீர்பிரித்தலும் ஒன்றோடொன்று மாறுகொள்ளாது பெரும்பான்மை ஒத்திருக்கின்றன. "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி - பகவன் முதற்றே உலகு" என்பதில் சீர் பிரித்தலும் பொருளுக்காகப் பதம் பிரித்தலும் வேறுபடாமை விளங்குகின்றது. இவ்வாறன்றி இங்கிலிஷ் செய்யுட்கள் அர்த்தமாகும்படி பதம் பிரித்தல் ஒருவகையாகவும் சீர்பிரித்தல் வேறுவகையாகவும் இருப்பது, இவ்வேறுபாட்டை விளக்கும்படி இங்கிலிஷ் செய்யுட்களிற்போலப் பதம்புணர்த்தி யான் செய்த 'திரிபுரமெரித்தவுருத்திரனே—பொருகாமதகனனென்போன்' என்ற குறள்வெண்பாவினால் விளங்கும். இப்பாவைச் சீர்பிரித்துக் காட்டவேண்டில், 'திரிபுரமெரித் தவுருத் திரனே-பொருகா மதகனனென் போன்' என்றும், பொருள் புலப்படக் காட்டவேண்டில் 'திரிபுரம் எரித்த உருத்திரனே பொரு காமதகனன் என்போன்' என்றும் பிரித்தெழுத வேண்டும்.

இப்புத்தகத்தின் சூசீபத்திரத்தில் காணப்படுகிறபடி செய்யுட்பாகமே இப்புத்தகத்துக்கு நடுநாயகமாயுள்ளது. நடுநாயகம், தான் விளங்கும் மாலையில் சிறிது இடமே பெறுவதுபோல, இப்புத்தகத்தின் செய்யுட் பாகமும் சொற்ப இடமே கொண்டிருக்கிறது. செய்யுட் பாகத்தின் இருபுறத்தும் மில்ட்டனுர் சரித்திரம், சுவர்க்க நீக்கக்கதை, சுவர்க்க நீக்க முதற்காண்டவசனம், சுவர்க்க நீக்க வியாக்கியானங்கள் ஆகிய இவைகள் அமைக்கப்பட்டுள்ளன.

ஆகவே இப்புத்தகத்திற் பெரும்பான்மையான பாகம் வசனமாகவிருக்கின்றது. இவ்வசனத்தில் மிகுதியான பாகம், மில்ட்டனுரையும் அவர் நூல்களையும் பற்றிச் சிறந்த பல அங்கிலேய பண்டிதர் கூறியுள்ளவற்றை, முழுதும்எடுத்தும் பிரித்தெடுத்தும் மொழிபெயர்த்து, சுருக்கியும் விரித்தும் வேண்டுழி விகற்பித்தும் என் கருத்துக்கள் இடைப்பெய்தும் எழுதப்பட்டிருக்கின்றது. இக்காலத்தில் அங்கிலேய சிரேட்டர்களின் கருத்துக்களைத் தழுவிய வசன நூல்கள் எவ்வளவெழுதினும் அவ்வளவும் நன்கு ஏற்றுக்கொள்ளப்படுமென்பது கருதி இப்புத்தகத்தின் வசனபாகம் எழுதப்பட்டது. இங்கிலிஷ் பாஷையிலுள்ள சுவர்க்க நீக்கத்தை (Paradise Lost) விளங்கப்படித்து அதன் அருமைபெருமைகளை அறிந்து வியந்து ஆனந்திப்பதற்குதவியாக அப்பாஷையில் எழுதப்பட்டுள்ள நூல்கள் மிகப் பல; தமிழில் அவ்வுதவி இல்லாத குறையை ஒருவாறு நிரப்புவதே இவ்வசனபாகத்தின் முக்கிய உத்தேசம்.

மில்ட்டனுரது சரித்திரம், நம்பத்தகாத விஷயங்களொன்றுமின்றி, நடந்ததை நடந்தவாறே தெரிவிக்கும்படி முயன்றெழுதப்பட்ட சரித்திரங்களுள் ஒன்று. அங்கிலேயபாஷையிலுள்ளஅவரது விஸ்தாரமான சரித்திரத்தில், அவரது படிப்பு விருப்பையும் உத்தம பத்தியையும் உயர்ந்த ஒழுக்கத்தையும் சுவர்க்க நீக்க நூலையும் பற்றிய பாகங்களே, இப்புத்தகத்திலடங்கிய அவர் சரித்திரத்தில், விசேடமாக எடுத்தெழுதப்பட்டவை.

சுவர்க்க நீக்கக் கதை, மூலநூல் முழுதும் விவரிக்கும் கதையைச் சுருக்கமாகக் கூறுகின்றது. இதனை வாசித்தபின் மொழிபெயர்ப்பை வாசித்தால் அது நன்கு விளங்குமென்று கருதியும், யூரோப்பிய காவிய முறைப்படி கதைமத்தியில் ஆரம்பிக்கும் முதற்காண்

டதை வாசிப்போர்க்கு முன்பின் நிகழ்ந்த கதையை அறிய இயல்பாக உண்டாகும் அவாவைப் பூரித்துத் திருத்தி செய்ய உத்தேசித்தும், அம்மொழிபெயர்ப்பின் முன் இது வைக்கப்பட்டிருக்கிறது.

சுவர்க்க நீக்க வசன முதற்காண்டம். செய்யுள் மொழிபெயர்ப்பை வாசிக்கப்போகிய பயிற்சியில்லார் பொருட்டு எழுதப்பட்டது. இதில், மூல நூலிலும் செய்யுள் மொழிபெயர்ப்பிலும் குறிப்பாகவுள்ளவை விரித்து விளங்கக் கூறப்பட்டிருத்தலால், இது செய்யுள் மொழிபெயர்ப்பை வாசிப்போர்க்கும் உதவியாம். இவ்வசன மொழி பெயர்ப்பில், மூலநூலில் இடைப்பிறவரலாகக் கூறியுள்ளவை ( ) இவ்வடையாளமான இருதலைப்பிறைக்குள்ளும், மூலநூற் கருத்தை விளக்கும்படி யான் இடைப்பிறவரலாகக் கூறியவை [ ] இவ்வடையாளமான இருதலைப் பகரத்துக்குள்ளும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

சுவர்க்க நீக்க வியாக்கியானங்கள், சுவர்க்கநீக்கப் பொதுவியாக்கியானங்கள் சுவர்க்க நீக்க முதற்காண்டச் சிறப்பு வியாக்கியானங்கள் என்றிரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவ்விரு பகுதிகளிலும், முறையே சுவர்க்க நீக்க நூல் முழுதையும் அதன் முதற்காண்டத்தையும் விஷயமாகக் கொண்டு பல அங்கிலேய பண்டித சிரேட்டர்களும் எழுதியுள்ள வியாக்கியானங்களினின்று தெரிந்தெடுத்து மொழிபெயர்த்தவற்றை ஏற்றவாறு முறைப்படுத்தி, இந்திய மாணுக்கருக்காவசிகமெனை எனக்குத்தோன்றிய சில கருத்துக்களுடன் கலந்து எழுதியிருக்கின்றேன்.

காந்தம் இராமாயணம் பாரதமுதலிய நூல்கள் ஹிந்துக்கள் பொழுதுபோக்குக் குபயோகமாயிருத்தல்போல, இந்நூல், தென்னிந்தியா யாழ்ப்பாணமுதலான தமிழ் வழங்கும் தேசங்களிலுள்ள அனேக ஆயிரவரான கிறிஸ்தவர்கள் காலக்ஷேபத்திற்கு உதவுமென்பதிற் சந்தேகமில்லை. சிந்தாமணி முதலிய சமணநூல்களை, அவற்றிலுள்ள மதவிரோதங்கருதாது நூல் வனப்பை நோக்கும்படி, மற்றச் சமயத்தவர்கள் விருப்புடன்படித்து மகிழ்தல்போல, இதனை யேசு சமயிகளல்லாதவர்களும் வாசித்தானந்தம் அடைவார்களென்று நம்புகின்றேன்.

இப்புத்தகத்தை வாசிப்போர் தங்களுக்குத் தோன்றும் சீர்திருத்தங்களைத் தெரிவிப்பாராயின், அவர்களைச் சிறந்த நன்றி செய்தாராகச் சிந்தித்து இதனை அடுத்த முறை பதிக்கும்படி வாய்த்தபோது அச் சீர்திருத்தங்களை நன்றியறிவுடன் உபயோகித்துக்கொள்வேன்.

இம்மொழிபெயர்ப்பு முற்றுப்பெற்றபோது சீவந்தராயிருந்து இதனை நான் சமர்ப்பிக்க ஏற்றருளிய எனது பிதா ம-ா-ா-ஸ்ரீ, வெ. அ. பழனியப்ப முதலியாரவர்கள் இதை அச்சிற் பதிப்பித்துப் பார்க்கும் பாக்கியத்தை யான் பெற்றிலேன்.

இம்மொழிபெயர்ப்பை என்னோடிருந்து மூலநூலோடு ஒப்பு நோக்கிச் சீர்திருத்தவேண்டியவை இன்னின்னவையெனத் தெரிவித்துப் பேருதவி புரிந்தோராகிய ம-ா-ா-ஸ்ரீ, P. M. கைலாஸம் பிள்ளையவர்கள் (B. A., District Court Pleader, Tinnevelly) ம-ா-ா-ஸ்ரீ, S. T. கள்ளப்பிரான் பிள்ளையவர்கள் (B. A., formerly Asst. Lecturer, Rajamundry College and now Sub Assistant Inspector of Schools, Ramnad) ம-ா-ா-ஸ்ரீ, A. மாதவய்யரவர்கள் (B. A., Assistant Inspecter, Salt and Abkari Revenue, in charge of Tachanulloor Distillery, Tinnevelly District) இம்மூவருக்கும் யான்மிகவும் கடமைபூண்டுள்ளேன். இவருள் கடைசியாகக் கூறிய கனவான், யான் இப்புத்தகத்தின் பிற்பாகத்தைப் பதிப்பிக்கச் சில ஏதுக்களால் இடையூறு நேர்ந்தவழி, அவ் வேலையைச் சந்தோஷமாக மேற்கொண்டு இனிது நிறைவேற்றிய பேருதவிக்கு யான் செய்யத்தக்க கைம்மாறு யாதொன்றுமில்லை.

இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் அளித்துதவிய இராயபஹதூர் யாழ்ப்பாணம். சி. வை. தாமோதரம்பிள்ளை (B. A., B. L., High Court Vakil and Fellow of the Madras University) அவர்களுக்கு எனது அத்தியந்த வந்தனங்களுரியன.

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

# LIFE OF
# JOHN MILTON.

## அங்கிலேய மஹாகவி,

# ஜான் மில்ட்டனர் சரித்திரம்.

இவர் காலத்தில், பெரும்பாலும் யாவருடைய சரித்திரங்களும் விரிவாக எழுதப்படும் வழக்கம் இல்லை. அச்சரித்திரங்களுள்ளும் கவிஞர் சரித்திரங்கள் மிகவும் குறைபாடுடையவைகளாயிருந்தன. ஆயினும், அதிட்ட ஏதுக்களால், மில்ட்டனருடைய வரலாற்றை விரிவா யெழுதுவதற்கு வேண்டிய உபகரணங்கள் மிகுதியாக விருந்தன. அவற்றைக்கொண்டு, டேவிட் மாஸன் (David Mason) பண்டிதர் மில்ட்டனரது சரித்திரத்தை யெழுதியிருக்கிறார். அது ஆறு பெரும் புத்தகங்களடங்கி நாலாயிரத்துக் கதிகமான பக்கங்களை யுடைய தென்பதனல், மில்ட்டனரது பெருமையும், அங்கிலேயருக்கு அவர்பாலுள்ள மதிப்பும் நன்குவிளங்கும்.

2. மில்ட்டனருடைய பாட்டனர் ரிச்சார்டு மில்ட்டன் (Richard Milton)என்பவர், ஆக்ஸ்பர்டு ஷையர்வமிசம்(Oxfordshire family) என்று பேர்பெற்றதும் ரோஸஸ் யுத்தத்தினல் ("Wars of the Roses") பூர்வ பூஸ்திதி யிழந்ததுமான கவுரவமுள்ள குடும்பத்திற் பிறந்தவர். அவர் ஆக்ஸ்பர்டு (Oxford)க்கு ஐந்து மயிலுக்குள் ஓர் ஊரில் வசித்தார். அவர் கிறிஸ்து மதத்தவர்களில் கத்தோலிகது (Catholic) வகுப்பைச் சேர்ந்தவர். அந்த வகுப்பினரது தேவாலய விதிகளில், அவர் மனச்சாட்சிக்கு விரோதமான சில விதிகளின்படி நடக்க மறுத்ததினிமித்தம் அவருக்கு 60-பவுண் அபராதம் விதிக்கப்பட்டதாகத் தெரிகிறது. அவர் குமாரரும், நமது கவியின் பிதாவுமாகிய ஜான் மில்ட்டன் (Jhon Milton) என்பவர், கத்தோலிக்கு மார்க்கத்தைத் துறந்து, புரோடெஸ்டன்று மார்க்கத்தை (Protestantism)த் தழுவியதனல், தம் பிதாவின் சொத்துக்கு அபாத்தியஸ்தராக்கப்பட்டு லந்தன் நகரத்துக்குச் சென்றார். அங்கு ஒரு

நேசரது சகாயத்தால், வேண்டுவோர்க்கு உடன்படிக்கை முதலிய பத்திரங்கள் எழுதிக்கொடுக்கும் (Scrivener) வேலையிலமர்ந்து பொருள் சம்பாதிப்பாராயினார். அவர் சிறந்த யோக்கியதையும் சாமர்த்தியமும் உடையராதலின், அவருக்குச் சீக்கிரம் திரண்டபொருள் ஈட்டும் இயல்புண்டாயிற்று. அவர் சங்கீதத்தில் தேர்ந்த பாடகராக விருந்ததன்றிக் கானமுறையாகப் பாடுவோர்க் குபயோகமான சிறந்த பதங்கள் செய்தார். அப்பதங்கள் அக்காலத்துத் தெரிந்தெடுத்துக் கோக்கப்பட்ட பதக்கோவையில் இடம் பெற்றன. அவர் ஷேக்ஸ்பீய மஹா கவியால் என்றும் அழியாப் புகழுடம்பு பெற்ற பயிரட், புல், தவுலாந்து (Byrd, Bull, Dowland) என்னும் கீதகவிஞர்களோடு சமமான அந்தஸ்து பெற்று விளங்கினார். அவர் மனைவியைப் பற்றி, அவள் பலவீனமான நேத்திரமும் தருமசிந்தையு முடையாளென்பதைத் தவிர வேறொன்றும் தெரியவில்லை. நமது கவியின் சுயாதீனப் பிரியத்துக்கும் சங்கீத விருப்பத்துக்கும் அவர் பிதா காரணராகவும், என்னகேடு வரினும் மனச்சாட்சிக்கு விரோதமானதைச் செய்யாத உறுதிப்பாட்டிற்கு அவர் பிதாவோடு பிதாமகரும் காரணராகவும் இருக்கலாமென்று தோன்றுகின்றது. அவர் கண்ணிழப்பதற்கு அவரது கடும்படிப்பேயன்றி, அவர் தாயின் நேத்திரத் தளர்ச்சியும் காரணமாக விருந்தது போலும்.

3. சுவர்க்க நீக்க நூலாசிரியராகிய மஹாகவி ஜான்மில்ட்டனார் (John Milton), 1608-ம் வருடம் டிசம்பர் மீ 9-உ காலையிலே லந்தன் நகரத்திலே தம் பிதாவின் கிருகத்திலே பிறந்தார். அவரைப் பள்ளிக்கூடத்தில் படிக்கவைத்ததன்றி அவர்பிதா அவருக்கு வீட்டில் கல்வி கற்பிக்கும்படி ஒரு உபாத்தியாயரை நியமனஞ் செய்திருந்தார். இரண்டு போதகாசிரியர்களும் சிறந்த கல்விமான்கள். கல்விச்சாலைவாத்தியார், அக்காலத்தில், பாலரைப் பயிற்றும் திறமையில் தம்மிற் சிறந்தாரில்லை யெனப் பெயர்பெற்றவர். சொந்த உபாத்தியாயர் மில்ட்டனாருக்கு ஆன்றோர் கிரந்தங்களில் விருப்பம் விளைதற்குக் காரணராக விருந்தாரென்பது அவர் இறந்தபோது மில்ட்டனார் பாடிய சரமகவியினால் விளங்குகின்றது.

4. மில்ட்டனார் பன்னிரண்டு வயதுமுதல் கல்வியை மிகவும் ஆவலோடு கற்கத்தொடங்கிப் பிரதிதினமும் நடு இராத்திரிவரை தூங்காது படித்துவந்தார். அவருக்கு வேண்டும் உதவி செய்யும்

பொருட்டு அவர் தூங்குமளவும் ஒரு தாதியை விழித்திருக்கும்படி அவர் பிதா ஏற்பாடு செய்திருந்தார். தம் மக்கள் சிறந்த வித்துவான்க ளாவதற்கு வேண்டும் சகல உதவியுஞ்செய்து "தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து—முந்தி யிருப்பச் செயல்" என்னுங் குறளுக்கு உதாரணமாகக் காட்டத்தக்க பிதாக்களுள் மில்டனுருடைய பிதா சிறந்த ஒருவராயிருந்தார் என்பதும், "மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை—என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்" என்னுங் குறளுக்கு மேற்கோளாகக் காட்டத்தக்க புத்திரர்களுள் மில்டனுர் சிறந்தவரென்பதும் இப்போது கூறியதனலன்றிப் பின் கூறுவத னுலும் விளங்கும்.

5. மில்டனுர் பதினைந்தாவது பிராயமாகியிருக்கும்போதே தாவீதின் சங்கீதங்கள் (David's Psalms) இரண்டைப் பாட்டாகச் செய்தார். பின்னிரண்டு வருடங்கழிந்தபின் (1626-வது வருஷத் தில்) அவர் சகோதரியின் குழந்தை யிறந்தபோது "ஆற்றவும் அழ கிய பூவே அலர்ந்ததும்—காலமன்றிக் கருகி உதிர்ந்தாய்" என்னும் கருத்துடன் ஆரம்பிக்கும் சரமகவி மாலையொன்று செய்தார். பாலி யத்திலேயே, கவனத்தொழிலைப் பொழுதுபோக்காக மாத்திரம் எண் ணுமல் தமது ஆயுளிற் கைப்பற்ற வேண்டிய முக்கியமான தொழி லாகக் கருதினுர்.

6. அவர் பதினேழாவது வயதாரம்பத்தில் "காலேஜ்" என்ற உயர்தர வித்தியாசாலைக்குப்போகத் தகுதியுடையவராகி கேம் பிரிட்ஜ் சர்வ கலாசாலை (Cambridge University) யைச் சார்ந்த கிறிஸ்து காலேஜில் (Christ's Collge) சேர்ந்தார். பி. ஏ. பட்டம் பெற்ற 21-வது வயதுக்குமுன்னமே (1628-வது வருஷத்தில்) விடு மூறைக்காலப் பயிற்சியாக,லத்தீன் பாஷையிலும் இங்கிலிஷ் பாஷை யிலும் சில வசனங்களும் பாட்டுக்களும் எழுதினுர். சமஸ்கிருத பாஷைபோலவே, நெடுங்காலமாக ஜனங்கள் பேசும் வழக்கமில் லாதொழிந்த லத்தின் பாஷையைத் தாய் மொழியாக உடையவரா யிருந்த "பூர்வாசிரியர்கள் எழுதின சிறப்போடு" அப்பாஷையைத் "தீஞ்சுவைகனிய இழுக்கு வழுக்கில்லாமல் செம்மொழியாய் எழு தின உத்தராசிரியர்களுக்குள் ஆதியானவர் மில்டனே." மேற் கூறிய விடுமுறை அப்பியாசங்களில் இங்கிலிஷ் கவிகள் பின்வரு வதன் கருத்தை ஆரம்பமாகக் கொண்டவை.

வாழிதாய் மொழியே! வருக வருக!
குளற முயன்றவென் குழவி நாக்கை
இதமா அசைத்து முதல்முதற் பேசுவித்
திளமகார்க் கியல்பாம் இடறுத லுடனே
நிரம்பா மொழிகளை நிறையா உச்சரிப்
போடும்என் இளஞ்சிற் றுதடுக ளூடு
நழுவி வெளிப்பட நன்கு மிழற்றுவித்
தோரிரு வருடமுன் புரையிலா ஊமையா
வைகிய மௌனம்அவ் வழிவெளி யோட்டினை.

7. அவர் பி.எ.பட்டம்பெற்ற 21-வது பருவத்திலேயே கிறிஸ்து நாதரது ஜெனனநாட் கீதங்கள் (Hymn on the Nativity) பாடினார். அக்கீதங்களில் ஒன்றே அங்கிலேய கவிவானத்தில் ஒருபுதிய பெருஞ்சோதி உதயமாகப்போகிற தென்பதைக் காட்டப் போதிய தாயிருந்த தென்றால், அக்கீதங்களின் வனப்பைக் கூறவானேன். பத்திரசம் சொலிக்கும்படி பாடிய கீதங்களில் இங்கிலிஷ் பாஷை யில் இக்கீதங்களுக்கு மேம்பட்டவை யில்லையென்பது அனேக சிறந்த பண்டிதர் துணிபு. 1629-ம் வருஷத்தில், கிறிஸ்துநாதர் பிறந்த நாட்காலையில்,இக்கீதங்களைப் பாடுங்கருத்துத் தம்மனத்திற்றோன்றிய தென்று, தாம்பாடிய 6-வது சரமகவி மாலையில் கூறுகிறார். அதே மாலையில், மெய்க்கவிஞரியல்பும் கடமையுங் கூறுமிடத்தில், அற்ப கவிஞர் மதுபானிகளாக விருக்கினு மிருக்கலாமென்றும், தெய்வீக மானவிஷயங்களைப் பாட விரும்புவோருக்குச் சுத்தசலமே தக்கபான மென்றும், அவர்கள் (மாம்ஸ பக்ஷணத்தை விலக்கித்) தாவர பக்ஷணிகளாக இருக்கவேண்டு மென்றும், அவர்களது யௌவன பருவம் குற்றமற்ற ஒழுக்கமுடையதா யிருக்கவேண்டு மென்றும் (கிரேக்க மஹாகவியாகிய) பூர்வீக ஹோமர் (Homer) முதலிய ஆன் றோர்பலர் இவ்விரதங்களை யநுட்டித்தவர்களென்றும் கூறுகின்றார். 1630-1631-வது வருஷங்களில் சில விடுகவிகளியற்றினர். 1632-வது வருஷத்தில் (24-வது வயதில்) எம்-ஏ. பட்டம்பெற்று, தம்மி டத்தில் விசேஷ நன்குமதிப் புடையவர்களாயிருந்த சகபாடிகள் பிரிவாற்றாமையால் மனவருத்தமடைய, அவர்களையும் கேம்பிரிட்ஜ் கலாசாலையையும் நீங்கிப் பக்கிங்காம் (Buckinghamshire) மாகா ணத்திலுள்ள ஹார்ட்டனில் (Horton) தம் பிதா வாழ்ந்துகொண் டிருந்த வீடுவந்து சேர்ந்தார்.

8. அவர் கலாசாலையில் வதிந்த காலத்தில், அவருடைய அபூர்வ விற்பத்தியும், திடசித்தமும், சிறந்த நல்லொழுக்கமும், அவருக்கு முந்தின மாணக்கர்கள் அவர் பால் விசேஷ மதிப்புப் பாராட்டும்படி செய்தன. அவர் சிறந்த அழகுடையவராயிருந்தார். அவர் முகம் நீண்ட வட்டவடிவ முடையதாய் மாதர் முகச்சாயல்போலச் சுமுக மாயிருந்தது. இவ்வடிவத்தினலும், உறுதியான கற்பொழுக்க முடைமையாலும் அவருக்கு அவருடன் கற்றவர்கள் கல்லூரித் துரைமகள் என்று பொருள்படும் "லேடி ஆவ் தி காலேஜ்" (Lady of the College) என்ற பரிகாசப் பெயரிட்டனர். அவர் முகம் வெண்மையும் செம்மையும் மனோகரமாகக் கலந்து திவ்விய தேஜஸோடு விளங்கியது. அவர் தலைமயிர் அற்பமாகச் சிவந்த வருண முடையதாய், (உச்சியில்) இரண்டு பிரிவாக வகிரப்பட்டுத் தோளிற் படியும்படி தூங்கவிட்டிருந்தது. நடுத்தர உயர்ச்சிக்குக் கொஞ்சங் குறைந்த வளர்ச்சியுடையவராய், சுறுசுறுப்பும் மனோதைரியமும் துணிவான விளையாட்டுக்களிற் பிரியமும் உள்ளவராயிருந்தார். அவரது நிமிர்ந்த "ஏறுபோற் பீடுநடை" அவர் ஆண்மையும் அஞ்சாமையும் குடியிருந்த நெஞ்சினரென்பதை விளக்கினது. யாவரும் (தம்மோடு) எளிதிற் சம்பாஷிக்க இயையும் சுசீலத்தினலும், நடிப்பினலன்றி யியல்பாக உள்ள உற்சாக உபசார குணங்களாலும், தடையின்றிச் சல்லாபிப்பதற்குப் பல விஷயங்களும் கடல் மடைதிறந்தது போல இடைவிடாது வந்து உதவும் இயல்பினலும், சந்தோஷமாகக் கூடுஞ் சிநேகர் கூட்டங்களின் சம்பாஷணைகளை உற்சாகப்படுத்தி அவைகளுக் குயிர்போல விளங்கினர்.

9. அவர் கேம்பிரிட்ஜ் கலாசாலையை நீங்கி ஹார்ட்டன் கிராமத்துக்கு வந்தபோது, அவர்மனம் அரிய காரியங்களைச் செய்வதற்குச் சித்தப்படுத்தப்பட்டு அவைகளைச்செய்து முடிப்பதில் முற்றும் பதிந்திருந்தது. பொருளீட்டும்படி பூண்டிருந்த விருத்தியைக் கைவிட்டுப் போதிய செல்வத்துடன் ஏகாந்தமாக வீடடங்கி வாழ்ந்து கொண்டிருந்த அவர் பிதா, தங்குமாரரது மேலான நோக்கத்தையறிந்து, அவரை அவர் மனதுக்கு விரோதமாக வியாபார முதலிய ஜீவனார்த்த முயற்சிகளைக் கைப்பற்றும்படி பலவந்தப்படுத்தாது, அவர் மனமுவந்தபடி செய்யச் சம்மதித்திருந்தனர். ஹார்ட்டனில் அஞ்சு வருடகாலம், பல சிறந்த இலக்கியங்களை ஆராய்ந்தும், கணிதம் பயின்றும், கானம்பழகியும் கழிந்தது. மனதைக் கவரப் புலன்களும்

அறிவும் போராட, அறிவு வெற்றியடைந்து நல்லொழுக்கத்தை நிலை நாட்டும் கோமஸ் (Comus) என்னும் சிங்கார ரசம் கனியும் வேஷக் கூத்து நாடகம், உற்சாகந்தரும் களிப்பையும் சோககரமான சிந்தனையையும் முறையே விஷயமாகக்கொண்ட அல்லிகிரோ (L'Allegro), இல்பென்ஸிராஸோ (Il Pnseroso), கவியின் கல்லூரித் தோழ ரொருவர் பிரயாணமத்தியில் கடலின் மூழ்கி யிறந்ததற்காகப் பாடிய லிஸிதாஸ் (Lycidas) ஆகிய சிறுநூல்கள் அவ்வைந்து வருட மத்தியில் இயற்றப்பட்டன. சுவர்க்க நீக்கம் பாடாதிருந்தாலும், இந்நான்கு பிரபந்தங்களுமே மில்ட்டனரைக் கவிஞர்களில் பிரதம அந்தஸ்துள்ளவர்களுள் ஒருவராக வைப்பதற்குத் தக்க சிறப்புடையவைகள். வேறு தனிப்பாடல்களும் பாடப்பெற்ற இக்காலத்தில் (1635-வது வருஷத்தில்) ஆக்ஸ்பர்டு (Oxford) எம். ஏ. பட்டமும் பெற்றார்.

10. அவர் இவ்வாறு ஹார்ட்டனுக்கு வந்தது முதல் காலமெல்லாம் கல்விப் பயிற்சியிலும் கவன முயற்சியிலுங் கழித்தாரே யன்றி லௌகிக சம்பிரதாயப்படி, விவசாயம் வியாபாரமுதலிய எத்தொழிலிலும் பிரவேசிக்க எத்தினிக்கவில்லை. பேருக்குங் கூட ஒரு விருத்தியுமில்லாமல் (யாரும், வீண்பொழுது போக்கென்று சொல்லும்படி) காலம் கழிப்பதற்குத் தக்க முகாந்தரம் வேண்டியிருந்தது. அவர் அதை யறியாதிருக்க வில்லை. ஆனால் தம்மனதுக்குத் திருத்தியாகத் தாம் அத்தியந்தஞ் செய்யக் கூடியதைச் செய்துவந்தார். கேவலம், சோற்றுக் குழைக்கும் நோக்கத்தினும் பெருந்தன்மையான நோக்கம் அவருக்கிருந்தது. அத்தகைய நோக்கத்தை நிறைவேற்றத் தக்க பயிற்சி யாவசியகமாக நீடித்ததா யிருக்குமென்பது யாவரும் ஒப்புக்கொள்ளக் கூடியதே. அவர் மனம், மிக உயர்ந்த காரியங்களைச் சாதித்ததற்கு ஆக்கப்பட்டு, அம்முயற்சியிலேயே முழுதுங் கவிந்திருந்தது. அவ்வித பெருங்காரிய சாதனைக்கு விசேஷ தகுதி யடைவதில் நெடுங்காலஞ் சென்றதென்பதைப் பிறர் அங்கீகரிக்காரகளென்று தெரிந்திருந்தும், அது தவிரக் காலதாமதம் ஆனதற்கு அவர் சொல்லக்கூடிய முகாந்தரம் யாதொன்றும் இருக்கவில்லை. செலவான காலத்திற்குத் தக்க தேர்ச்சி யடையவில்லையென்று தம் மனத்திற் றோன்றிய அசமாதானத்தை "ஆ! பாலியகாலத்தை யாம் அறியாதபடி எளிதாகத் திருடும் காலத்திருடன் எனது இருபத்து மூன்றுவருட காலத்தையும் கவர்ந்து கொண்டு பறந்தனன். விரை

விற் கழியும் என் நாட்கள் அதிவேகமாகச் செல்லுகின்றன. தாம தித்து வந்த என் வசந்தகாலத்திலோ அரும்பேனும் பூவேனும் இன்னுந் தோன்றவில்லையே'' என்று பொருள்படுகின்ற,

யாமறி யாதெம் மெவ்வன மதனைத்
திருடுங் காலத் திருடன், அந்தோ !
எனதிரு பான்மூன் றெனும்வரு டங்களும்
கவர்ந்து பறந்தனன். கடிதே கழியுமென்
வாழ்நாள் வல்லே வறிதகல் கின்றன.
தாமத மாகிச் சார்ந்தவென் வசந்த
காலத் தரும்போ கமழும் பூவோ
எதுவும் இன்னும் தோன்றிட விலையே.

என்னும் தொடக்கத்தை யுடைய பாட்டில் வெளியிட்டிருக்கிறார்.

11. பிள்ளைப் பருவத்தே பள்ளிக்கூடத்துப் படிப்பிலும் வீட்டுப் படிப்பிலும் கழிந்த காலமன்றி, உயர்தரக் கல்வி பயிலும் கலாசாலையில் எழுவருடமும், தாமே வாசித்த சொந்தப் படிப்பில் ஐந்து வருடமும் அவர் கொண்டிருந்த பெருநோக்கத்துக்கு அதிகமாக விருக்கவில்லை. இது வரை சென்ற காலத்தினும் அதிகமான காலம், அப்பெரு நோக்கம் சுவர்க்க நீக்கமாக உருப் பெறுமுன், எதிர்பாராத ஏதுக்களால் செல்லும்படி நேர்ந்தது.

12. அனேகமாக, கவிஞர்களது பொது உடைமையாகிய தரித்திரம் சிறிது மில்லாமல், போதிய செல்வமும், இடையறாத அவகாசமும் படைத்து, அமரிக்கையும் ஏகாந்தமுமான இடத்தில் வசிக்கும் பாக்கியத்தை மில்ட்டனரைப்போலப் பெற்ற கவிவாணர்கள் அபூர்வமானவர்களே.

13. கல்வியே தொழிலாக உடையவனுக்கு அக்கல்வியே அதன் முடிவாகவும், ஆராய்ச்சியே அதன் சம்மான மாகவும் இருக்கின்றன. மில்ட்டனருக்கோ எல்லா அறிவும், வாழ்வும், இவ்விரண்டினும் மேம்பட்ட ஒழுக்கமுங்கூட, மேற்கூறியவாறுள்ள முடிவுக்கு அப்பாலுள்ள ஓர் முடிவை அடைவதற்குக் கருவிகளாயின. அம் முடிவு லோகோபகாரமான ஓர் பெருங்காவிய நிறைவேற்றமே. அவர் எது உபயோகமோ, அதைமாத்திரம் அறிய முயன்றார். அவர் உபயோகமாகக் கருதியவை கவனத்தொழிற் குபயோகமானவையே.

14. பாடற் றொழிலே தமது தொழிலாக, உண்மையோடும், பத்தியோடும், அதிபாலியத்திலேயே கைக்கொண்டார். இந்தக் கொள்கை அவர் வாழ்க்கை யின்னபடி யிருக்கவேண்டுமென்று தீர்மானிக்குங் காரணமாயிற்று. அவர் "இந்த ஜன்மத்தில் எனக்கேற்பட்ட பகுதி யென்று நான் ஏற்றுக்கொண்டிருக்கும் உழைப்பு, கடும்படிப்பு ஆகிய இவைகளுடன் எனக்கு இயல்பாக உள்ள மனப்போக்கினல், பிற்காலத்தவர் மனதார இறந்தொழிய விடாதபடி யெழுதப்பட்ட நூலொன்றை அவர்களுக்கு வைத்துவிட்டுப் போகக்கூடுமென்று என் மனத்துள் ஆந்தரீகமான ஒருதூண்டுதல் நித்தமும் வளர்ந்து வருகிறது" என்று 1641-ம் வருடத்தில் எழுதியிருக்கிறார். எக்காலத்தும் எந்த மேதாவியும் தன்றொழிலுக் கேற்ற தகுதியடைவதற்கு, மில்ட்டனர் தம் புலமைத் றொழிலுக்காக முயன்ற அளவு முயன்றிருப்பது அபூர்வம். அவர் கருத்தில் எவை உண்மைக் கவிகளுக்குரிய முக்கிய இலக்கணங்களென்று கருதினரோ, அவ்விலக்கணங்களுக் கேற்ப நடப்பதில் சிறிதும் பின்னிடைய வில்லை. "எவன் சிறந்த விஷயங்களை யெழுதுவதில் தவறிப்போகா திருக்கக் கருதுகின்றனே, அவன் தானே ஒரு உண்மையான [சகல இலக்கணங்களும் அமைந்த] இலக்கியமாக இருக்கவேண்டுமென்றும், புகழத்தக்க யாவும் செய்கையிலும் அனுபவத்திலும் தனக்கிருந்தாலொழிய, வீரர்களையும் சிறந்தநகரங்களையும்பற்றிய உயர்ந்த புகழ்ச்சியடங்கிய பாடல்களைப் பாடத் துணியக் கூடாதென்றும் கொண்டிருந்த அபிப்பிராயம் என் மனத்தில் உறுதிப்பட்டது" என்று அவர் கூறியிருப்பது கவிஞர் தொழிலைப்பற்றி அவர் கொண்டிருந்த கவுரவமான அபிப்பிராயத்தை வெளியிடுகின்றது.

15. மனம்போன வழி போகும் இயல்பையுடைய புலவர்களுள் ஒருவராக மில்ட்டனரைச் சிறிதுங் கருதக்கூடாது. அவர்செய்த யாவும் ஒரு குறித்த நோக்கத்துடனும் திட்டத்துடனும் முழுமனத்துடனும் செய்யப்பட்டன. அவர், அறிவை, அறிவினிமித்தமாவது, அதைப் பெறுதற்கு இயல்பாக உண்டாகும் ஆவலினலாவது தேடிக்கொள்ளாமல், தாம் பாவலராதற்கு உரிய சாதனமென்று சம்பாதித்தார். அறிவொன்றை மாத்திரம் பெற்றதனல், அவர் திருத்தியடையாது, அதோடு ஞானமும் ஆவசியகமென்று அதையும் பெறுதற்கு முயன்றார். சன்மார்க்க அபிவிருத்தியும் அறிவு விருத்தியும் ஒருங்கே நிகழவேண்டுமென்பது அவர் கொள்கை. சுத்ததேகத்தில் சுத்த

மனத்துடன் கூடி வாழ்தல் அவர் இடைவிடாது கொண்ட நோக்கம். பின் வருவது அவர் எழுதியிருப்பதன் சாரம். "மாதருக்கே கற்பின்மை அவதூற்றையும் அவமானத்தையும் விளைக்குமென்னில், தேவனது சாயலோடும் மகிமையோடும் சிருட்டிக்கப்பட்டுள்ள ஆடவரது கற்பின்மை (சாதாரணமாக அதிகேவலமானதென்று வெறுக்கப்படாதிருந்தாலும்) மிகவும் நிச்சயமாக மானக்குறைவுக்கும் யோக்கியதா பங்கத்துக்கும் காரணமே. பாவலனியல்பைப் பூரணப்படுத்தக் கல்வி ஒழுக்கம் என்றிரண்டு அமிசங்கள் மாத்திரம் அமையா, தேவபத்தியும்வேண்டும் : ஏனெனில், கடவுளிடத்திருந்தே, பாவலனது கருத்துக்கள் வருகின்றன. சகல அறிவுகளையும் அறிவடங்கிய வசனங்களையும் வளப்படுத்த வல்லவரும், தமக் குவப்பானவர்களின் ஆன்மாக்களைப் பரிசித்துப் புனிதப்படுத்துமாறு, தமது பலிபீடத்துப் பரிசுத்தாக்கினியுடன் தமது பத்திச் சுவாலகதூதர்களை அனுப்பியருள்பவரும் ஆகிய நித்திய ஆவியாரைத் திடபத்தியோடு பிரார்த்திக்கும் வழியாலன்றி வேறுவகையால் [பின்னோர் இறந்து விடாதபடி போற்றும் நூலியற்றத்தக்க உத்தம கவனசத்தியாகிய] இது கிட்டுவதன்று. இப்பிரார்த்தனைக்குத் துணையாக, உழைத்துந் தெரிந்தெடுத்தும் படிக்கும் படிப்பையும், எதையும் திடமாக அவதானித்து நோக்குதலையும், சிறந்த தயாள கிருத்தியங்களையும் காரியங்களையும் பற்றிய நுட்பவுணர்வையும் கைக்கொள்ளவேண்டும். இவ்வளவும் ஒருவாறு ஒருங்கே அமைந்தாலொழிய, நான் கருதிய காரிய நிறைவேற்றத்தை எத்திணிக்க எனக்கு மனயில்லை." அவர் இவ்வாறு கூறிய பத்தியமைந்த பிரதிக்கினையைக்கண்டு, அவர் விஷயத்தில் இயல்பாகக் கடினசித்த முடைய ஜான்ஸன் (Johnson) நூலாசிரியர், "பத்தியும் வைராக்கியமும் விவேகமும் ஒருங்கேயமைந்த இத்தகைய வாக்குத் தத்தத்தின் பயனாக, சுவர்க்க நீக்கம் வெளிப்படல் இயல்பே" என்று எழுதினர்.

16. மில்ட்டனரது பாடல்கள் அவரது குணங்களைத் தெளிவாகப் பிரதிபிம்பித்துக்காட்டும் கண்ணாடி யொத்திருக்கின்றன. அவருடைய பல நூல்களையும் மேற்பார்வையாகப் பார்த்தாலும், மதத்திலும் நல்லொழுக்கத்திலும் ஆழ்ந்த பற்றுடையவரென்பது தெள்ளிதிற் புலப்படும். இங்கிலாந்திற் றோன்றிய மிகச் சிறந்த நீதிமான்களுள் அவர் ஒருவரென்பதை யாவரும் ஒப்புக்கொள்வார்கள்.

20. அவர் நேப்பிள்ஸிலிருக்கும்போது இங்கிலாந்தில் குடிப் பக்கத்தாருக்கும் ராஜபக்கத்தாருக்கும் கலகம் பிறந்த சமாசாரந் தெரிந்தார். தெரியவே, "எனது சுதேசிகள் சுயாதீனத்தின்பொருட்டு முயன்றுகொண்டிருக்கும்போது, நான் அயற்றேசங்களில் இஷ்டப்படி சந்தோஷமாகக் காலங்கழிப்பது இழிவு" என்று கருதி, ஸிஸிலி (Sicily)யையும் கிரீசை (Greece) யும் பார்க்கக்கருதியிருந்த கருத்தைக் கைவிட்டு இங்கிலாந்துக்குத் திரும்பினுர். திரும்பும் மார்க்கத்தில், உரோமபுரியிற் சிலர், அவர் மதக் கொள்கையின் நிமித்தம் அவனை அபாயப்படுத்தும்படி சூழ்ச்சி செய்திருப்பதாகத் தெரிந்தும், அஞ்சாது அந்நகரத்திற் சிலகாலந்தங்கி, கத்தோலிக்கு மதத்தலைவர் (Pope) வாசஸ்தானமாகிய அங்கேயே, குகையினுட் சென்று சிங்கத்தைக்கோபமூட்டியதுபோல, கத்தோலிக்கு மதத்தை மறுத்துத் தம்மதத்தை ஸ்தாபித்து நியாயவாதங்கள் செய்தார்.

21. பின்பு பிளாரன்ஸ் (Florence) நகரத்தையடைந்து, யூரோப்பிய வானசாஸ்திரத்தைத் தற்காலத்திய உன்னத நிலைமைக்குக் கொண்டுவந்த மகாபுருடருட் சிறந்த ஒருவரும், கத்தோலிக்கு மதத்தார் கொண்டிருந்த (பூமியைச்சுற்றிச் சூரியன் முதலிய கிரகங்கள் சஞ்சரிக்கின்றனவென்னும்) பூமி மத்திய சித்தாந்தத்துக்கு விரோதமாகச் சூரியனைச்சுற்றிப் பூமியையுள்ளிட்ட மற்றக்கிரகங்கள் சுழலுகின்றனவென்னும்) சூரியமத்திய சித்தாந்தத்தை நியாயமெடுத்துக்காட்டி ஸ்தாபித்ததற்காக, அவர்களால் சிறையில் வைக்கப்பட்டிருந்தவருமாகிய கலிலியோ (Galileo) வென்னும் கணித சாஸ்திர நிபுணனைக்கண்டார். அவர் கண்ணிழந்து மிகுந்த வயோதிகராயிருந்தும் அறிவு சிறிதுங் குன்றுதவராயிருந்தார். சுவர்க்க நீக்கம் முதற்காண்டத்தில் (௧௦அ-வது பாட்டில்) "தக்கணி நாடன் கலிலியோ வென்னுஞ் சாத்திரி" என்று கூறப்பட்டவர் இவரே. மில்ட்டனுர் முதல் முறை பிளாரன்ஸ் நகரத்துக்குச்சென்றபோது கலிலியோ கத்தோலிக்கு மதத்தரல்லாதார் பார்க்கக்கூடாதென்னும் நிர்ப்பந்தத்துக் குட்பட்டிருந்ததனுல் அவனை அப்போது பார்த்தல் கூடாமையாயிருந்தது.

22. பிளாரன்சு (Florence) நகரத்தினின்று புறப்பட்டு வெனிசு (Venice) நகரத்தையடைந்து அத்துறைமுகத்திலிருந்து தாம் யாத்திரையில் தேடி வைத்திருந்த அருமையான புத்தகங்களைக்

கப்பல்கள் வழியாக இங்கிலாந்துக்கனுப்பினர். அப்புத்தகங்களுள் ஒரு பெட்டி அல்லது இரண்டு பெட்டி நிறைந்த சங்கீதப் புத்தகங்களும் இருந்தன. வெனிசுவிட்டுப் பிரயாணமாகி, கத்தோலிக்கு மதத்தாரது முழுப்பகைமையும், பக்க உதவியின்றி, தனித்தின் றெதிர்த்துத் தாவரித்த ஜெனிவா (Geneva) நகரைப்பார்த்துக்கொண்டு பாரிசு (Paris) வழியாக, 1639 - ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் இங்கிலாந்துக்குத் திரும்பிவந்தார். இவ்வாறு யாத்திரையில் ஒன்றே கால்வருடம் கழிந்தது. இவ் யாத்திரைகாலமுழுதும், "வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்—வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த—எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி—அங்கங் குலைவ தறிவு" என்பதற்கியைய, மனிதர் கண்ணுக்குத் தப்புவது கூடுமாயினும் எங்கும் பிரசன்னராக விருக்கிற கடவுள் கண்ணுக்குத் தப்புதல் கூடாமையான தென்னுங் கருத்தை யிடைவிடா துடையவராயிருந்தார். இவ்யாத்திரை,மில்ட்டனைப்போன்ற பேரறிவும் அரும் பயிற்சியுமுடையார்க்கு இயல்பாகச் செய்யும் நன்மைகளைச் செய்ததன்றிப் பெரிய காப்பிய மியற்றவேண்டுமென்று அவர் நெடுங்காலமாகக் கொண்டிருந்த அவாவை அதிகரிக்கச் செய்தது.

23. அவர் இங்கிலாந்துக்கு வந்தபின் ஹார்ட்ட (Horton)னுக்குத் திரும்பிப் போகாமல் லண்டன் நகரத்தில் ஒரு வீட்டில் அமர்ந்தார். அமர்ந்து அவருடைய ஒரே சகோதரியான ஆன்னீ (Anne) அம்மணியின் புத்திரருக்குக் கல்வி கற்பிப்பாராயினர். கனவான்களாயிருந்த அவருடையநண்பர்கள் சிலருடையபுத்திரரும் அவரிடத்துக் கல்வி பயின்றார்கள். சுயபாஷையுடன் கிரேக்க, லத்தீனிய, இத்தாலிய, பிராஞ்சிய பாஷைகளை யன்றி, சால்டீய, ஸிரியாக்க, எபிரேய பாஷைகளும் அம்மாணாக்கர்கள் பயிற்றப் பெற்றார்கள். எந்த முயற்சியை மேற்கொள்ளினும் அதில்தம் முழுமனத்தையும் ஊக்கத்தையும் செலுத்தும் அவருடைய இயல்பு, இப்போது மேற்கொண்ட பாலபோத முயற்சியிலும் விளங்கியது. தங்களுடைய பிள்ளைப் பருவத்தில் "ஆராய்ந்து அமைவுடைய" வைகளைக் கற்பிக்கும் ஆசிரியரின்றி அனுவசியகமானவைகளை வருந்திக்கற்று அருமையான காலம் வீணேகழிந்தது,படித்த பலருக்கும் ஞாபகத்திற்றோன்றுதல் இயல்பே. அவ்வாறே மில்ட்டனுருக்கும் தோன்றி, கல்வி பயிற்றுமுறையைச் சீர்திருத்தவேண்டுமென்னுங் கருத்துக்கொண்டு,

கூடியமட்டுங் குறைவான காலத்தில், இன்றியமையாத, சொற்ப பிரயாசத்துடன், சகலரும் பூரண அறிவை அடையக் கூடிய போதனை வழிகள் சிறந்தவை யென்றும், பாஷையானது ஒரு முடிவை யடைவதற்குக் கருவியேயன்றித் தானே முடிவாயிருக்கவில்லை யென்றும், மனிதர் பேசும் வழக்கொழிந்திறந்த ஒருபாஷையைக் கற்கும் பழைய பள்ளிக்கூட வழக்கத்தைக் கைவிட்டு அனேக ஜீவபாஷைகளைக் கற்பது உபயோகமென்றும், வார்த்தைகளை யறிவதிலும் பொருள்களை யறிவது முக்கியமென்றும், நம்மைச் சூழ்ந்துள்ள இயற்கைப் பொருள்களையும், அவற்றின் குணங்களையும் அறியும்படி நமது கண்ணையும் காதையும் பழக்குதல் சிறந்ததென்றும், பகுத்தறிவின்றிப் பலவற்றையும் ஞாபகப்படுத்தலினும், சிலவற்றை அறிந்து சிந்தித்தல் விசேடமென்றும் முன்னோர் கருத்துக்களை (ஆதாரமாக)க் கொண்டு "கல்விப்பயிற்சி" என்ற ஒரு சிறுவசன நூலியற்றினார். "சண்டைக்காலத்தும் சமாதான காலத்தும், சொந்தக் கடமைகளையும் பொதுக்கடமைகளையும், நடுவு நிலைதவறாது, சாமர்த்தியமாகப் பெருந்தன்மையுடன் செய்யத் தகுதியாக்குவதே பூரணமும் உத்தமமுமான கல்விப்பயிற்சி" என்று அவர் கல்விப்பயிற்சிக்குக் கூறிய இலக்கணம் தன்னின் மிக்கதில்லாததாய் இன்றும் ஆளப்பட்டு வருகின்றது.

24. அவர் 1643-ம் வருடத்தில் வசந்தகால ஆரம்பத்தில் லந்தன் நகரத்தினின்று சடிதியாகப் பிரயாணம்போனார். அவரையறிந்த யாவருக்கும் எதற்காகப் பிரயாணம் போனாரென்று தெரியாது. உத்தேசமாக ஒருமாதகாலம் வீட்டுக்குத் திரும்பவில்லை. திரும்பிவந்த போது பத்தினி சமேதராக வந்தார். அவள் தனியாயன்றிச் சில உறவினரோடும் வந்தாள். வந்ததும் விருந்து முதலிய சிறப்புடன் உத்தரவிவாகச் சடங்குகள் செய்யப்பட்டன. "எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்-எண்ணுவ மென்ப திழுக்கு" என்னுங் கருத்துக்குமாறாக, வாழ்விலும் தாழ்விலும் சகல இன்ப துன்பங்களையும் பகுந் தனுபவித்தற்குரிய வாழ்க்கைத்துணைவியின் குணகுணங்களை நன்காராயாது அவசரப்பட்டுச் செய்த கலியாணத்தினால், 35-வயதளவும் தம் காலமுழுதும் தம் வசத்தில் உடையவராய்ப் பூரண சுயாதீனராய்த் தட்டுத்தடை சிறிது மின்றிக் கல்வி யின்பத்தை நீங்காதனுபவித்துக் கொண்டிருந்தவர்க்குத் துன்பம் ஆரம்பித்தது. இது முதல் சமுசாரகஷ்டமும், வேலை நிர்ப்பந்தமும், வாதப்பிரதி

வாது ஆக்குரோசமும் மேலிட்டுக் கடைசியாகக் கண்ணிழக்கும் பேரா பத்தும் அடைந்து கழிக்கவேண்டிய காலம் 30 - வருஷத்துக்கதிக மாக விருந்தது. மில்டனூர்போல முற்பாதி வாழ்நாள் அமைதி யுடன் சந்தோஷமாக வாழ்ந்த கவிஞரும், பிற்பாதி வாழ்நாள் பரித பிக்கத்தக்க துன்பமுற்றுக் காலங்கழித்த கவிஞரும் அபூர்வர்.

25. விவிலிய (Bible) நூல் கூறுகிறபடி ஸ்திரிகள், புருஷருக் காகச் சிருட்டிக்கப்பட்டவர்களென்றும், கணவனும் மனைவியும் ஒரு வருக்கொருவர் நேயமுடையாராய் உணர்விலும் ஒழுக்கத்திலும் ஒரு வர் மனத்தோடு ஒருவர் மனங்கலந்து ஒருமைப்பட்டிருக்க வேண்டு மென்றும்,இந்த அந்நியோந்நிய நேயமும் ஒருமைப்பாடும்,ஸ்திரீ, புருஷனுடைய சௌக்கியத்துக்காகச் செய்யும் பணிவிடையிலும் அவன்நோக்கத்துக்கிசைய நடப்பதிலும் சிறந்தவைகளென்றும் அவ ருடையகொள்கைகளிருந்தன. இக்கொள்கைக்கு அவர்மனைவி இசை யாதவளாயிருந்ததனால் இருவருக்கும் பிரிவுநேர்ந்தது. ஆயினும் அப் பிரிவு அவர்பக்கத்தில் ஆரம்பிக்கவில்லை. அவள் தன் பெற்றோரால் தன்னைப் பிறந்தகத்துக்கு அனுப்பும்படி யெழுதுவித்து அவரிடத்து விடைபெற்றுத் தன்பெற்றோரிடம் சேர்ந்தாள். பின்பு பலமுறை மில்டனெழுதியும் அவள் திரும்பிவரவில்லை. கடைசியாக, ஒரு ஆளனுப்பினார். அவன் அவமதிசெய்து அனுப்பப்பட்டுத் திரும்பி னான். அதனால் அவர் கோபாக்கிராந்தராகிப் பொருத்தமில்லாத மணத்துக்குட்பட்டவர்கள் விஷயமாக நான்கு விவாக விமோசனப் பத்திரிகைகளெழுதிப் பிரசுரம்பண்ணினார். ஒருநாள் அவர் ஒரு பந்து வீட்டிற்போயிருந்தபோது, பிரிந்து இரண்டுவருடமாகி,அறிவி லும் வயதிலும் முதிர்ச்சியடைந்து பத்தொன்பது வயதுதான் சென் றிருந்த அவர்மனைவி திடீரென்று அவர்முன்பு தோன்றி முழந் தால்படியிட்டு வணங்கிநின்று தன் குற்றத்துக்குத் தன் மாதா காரண மாயிருந்தாளென்று கூறி மன்னிக்கும்படி பிரார்த்தித்தாள். உட னே அவருக்கு இயல்பாக உள்ள பெருங்கருணைமேலிடப் பழைய குற்றங்களை மறந்து அவளை அன்புடன் ஏற்றுக்கொண்டதன்றி, இன்னுந் தன்குடும்ப சமாதானத்தைக் குலைப்பதற்கு ஏதுவாயிருக்கக் கூடிய தன் மாமியை யுள்ளிட்ட தன்மனைவி குடும்பத்தார் சகலரை யும் அங்கீகரித்து, அவர்கள் அந்தச் சமயத்தில் செல்வங்குறைந்து க்ஷீணதசை யடைந்திருந்ததினால், அவர்கள் குடும்ப பாரத்தையும் தாம் மேற்கொண்டு, அவர்களைத் தம் கிரகத்தில் வைத்துப் பரிபால

ணஞ்செய்தார், அம்மனைவி நாலு குழந்தைகளைப்பெற்றாள். அக்குழந்தைகளுள் முதல் மூன்றும் பெண்குழந்தைகள். நான்காவது குழந்தைப்பேற்றில் தாய் இறந்துபோக அக்குழந்தையும் இறந்துபோயிற்று. மரணகாலத்தில் அவளுக்கு வயது இருபத்தாறுதான். மணஞ்செய்தபின் சென்றவருடம் ஒன்பதே.

26. தமது சுதேசத்தார், சுயாதீனத்தின்பொருட்டுப் போராடிக்கொண்டிருக்கும்போது, தான் யாத்திரைசெய்து களித்துக்கொண்டிருத்தல் தகுதியன்றெனத் திரும்பிய மில்ட்டனர் பாலருக்கு வித்தியாப்பியாசஞ் செய்வித்துக் கல்விப் பயிற்சியைப்பற்றி யெழுதுவதிலும், சமுசார கலகத்தினால் கஷ்டமடைந்து விவாக சம்பந்தமான கடமைகளை விவரிப்பதிலும் காலங் கழித்தது வியப்பாகத் தோற்றும். ஆனால் இப்படிக் கழித்தகாலத்தில் சுயாதீனத்தை நிலைநாட்டும் நோக்கம் அவர் மனத்தில் நீங்காது குடியிருந்தது; அதன் நிமித்தம் நடந்துகொண்டிருந்த கலகத்தை இடைவிடாது கவனித்து அதில் தாம் சேர்ந்து உபகாரப்படக் கூடிய காலத்தை யெதிர்பார்த்துக் கொண்டிருந்தார். குடிப்பக்கத்தாராகிய பூரித்தானியர் பெரும்பாலும் அற்ப கல்வியுடையவர்களா யிருந்ததனால் எதிர்ப்பக்கத்தாருள் அனேக கல்விமான்கள் நெருக்கிச்செய்த வாதப்போருக்கு இடைந்து தத்தளிந்து தடுமாறி நிலைகுலையும் சமயத்தில், அவர்களைச்சேர்ந்து தமது முழு ஊக்கத்தையும் சிறந்த கல்வி யறிவையும் பிரயோகித்து அவர்களை நிலைநிறுத்துவாராயினர். அவரது அரிய சாமர்த்தியமும், தேனீ பல பூக்களினின்றுந் தேன் சேர்ப்பதுபோல அனேகவருடங்களாகப் பல நூல்களினின்றும் அருமையாகத் தேடித்திரட்டியஞானமும், சகல பாஷாவிற்பத்தியும், சகலகாலத் தவர்களுடைய அரிய கருத்துக்களையும் எளிதெடுத்தாளும் வல்லபமும், எக்கருத்துக்களையும் அதி உசிதமாகத் தெரிவிக்க வல்லதாய் அவருக்குப் பூரணமாக வசப்பட்டிருந்த அங்கிலேயமொழித்திறமும் ஆகிய இவையெல்லாம், அவருடைய ஆதிப் பெருநோக்கமாய் எப்போதும் மனத்தை விட்டகலாதிருந்த பெருங் காவிய மியற்றுவதற்கே உதவும்படி ஈட்டப்பட்டவைகளாயினும், (அவருடைய 32 முதல் 52 வயது வரை சென்ற) இருபது வருடம் அதற்குபயோகமாகாது, மத சுவாதீனத்தைக்குருக்கள்மார் கபடத்துக்கும், குடிக்கிழமையை அரசர் கொடுங்கோலுக்கும், அச்சுரிமையை ராஜாங்க நிர்வாககர்த்தர்கள் ஒடுக்கும்ஒடுக்கத்துக்கும், இருக இருத்திய சுதந்தரத்தைக் கிறிஸ்திய திருச்சபையா

ரது கொடு நிபந்தனைகளுக்கும் உள்ளாகாது பாதுகாப்பதில் பிரயோகிக்கப்பட்டன. அவர் மனத்தில், எவற்றிலும் சுயாதீன விருப்பு மேலிட்டு, சமய துரைத்தன சுவாதந்திரியங்களின் பொருட்டுத் தாம் உழைக்கக்கூடு மளவும் கவனத்தொழில் சிறிதும் முக்கியமானதென்று கருதவில்லை. மிக உற்சாகத்தரும் தமது அபார கவித்துவ மனோசக்திகளை யுபயோகித் தடையும் பேரானந்தத்தை யனுபவியாது துறந்து, அக்காலத்தில் அப்போதப்போது சகலர் மனத்துங் குடிகொண்டு மூர்த்தன்னியமாக விருந்த விஷயங்களைப்பற்றி, அவரது எதிர்ப்பக்கத்து வாதிபரது அறிவின் தரத்துக்குத் தக்கபடி தம்மறிவைக் குறைத்து, வாதப் பிரதிவாதங்க ளடங்கிய தற்காலோபயோகமான பத்திரிகைகளெழுதும் இணங்காத உழைப்பில் அவருடைய வித்துவ சக்தியெல்லாம் பிரயோகிக்க நினைத்தது பெரும் பரித்தியாகமே. இவ்வாறு கடமையின் கற்பனைப்படி மேற்கொண்ட உழைப்பு, அருவருப்பானதா யிருந்தும் தம்முடைய பூரண சக்தியையும் அதிற் பிரயோகித்து முழுமனத்துடன் அதை நிறைவேற்றினார்.

27. மேற் கூறிய இருபது வருடத்தில் இருபத்தைந்து சிறு வசன நூல்கள் இயற்றப்பட்டன. அவற்றில் இருபத்தொன்று இங்கிலீஷ்பாஷையிலும் நான்கு லத்தீன்பாஷையிலும் எழுதப்பட்டன. ஒன்று கல்விப் பயிற்சியைப் பற்றியது. நான்கு விவாகவிமோசன (Divorce) விஷயத்தைக் குறித்தவை. (இவ்வைந்தும் முன்பே கூறப்பட்டன.) மற்ற நூல்களிற் சில, கிறிஸ்திய திருச்சபை நிர்வாகச் சீர்திருத்தத்தைப் பற்றியும், வேறுசில தேசகலகத்தில் அப்போதப்போது முக்கியமாக விருந்த விஷயங்களைப்பற்றியும், பின்னுஞ் சில பிறவிஷயங்களைப்பற்றியும் எழுதப்பட்டன. ஆயினும் அவ்விஷயங்கள யாவும் ஒரு பெரு மூலத்தின் பலன்களாகவே. அம்மூலம் சுயாதீன விருப்பமே. அவ்விருப்பம் இருந்தவர்களிடம் திடப்பட்டு மேலிடவும், இல்லாதவர்களிடம் உண்டாகவும், அது தளர்வுற்றவர்கள் பால் உறுதிப்படையவும், அதை யெதிர்த்தோர் கலங்கி யொடுங்கவும், அவ்வசன நூல்களெழுதப்பட்டன. அவற்றுள் அறியப் பகுதிகா (Areopagitica) என்னும் ஒரு நூலொழிய மற்றவையாவும் அவை யெழுதப்பட்ட காலத்து மாத்திரம் பிரயோசன முடையவைகளாயிருந்தன. அறியப்பகுதிகாவோ, என்றும் உபயோகமுள்ளதாய், உருவினிற் சிறியதாயினும், ஆழ்ந்த கருத்துக்க ளுடைமையால்

மிருந்தபெருமையுள்ளது; அச்சுச் சுதந்தரத்தை விசேடமாகப்பாராட்டிக் கூறுவது; உண்மை, யாவற்றிலுஞ் சிறந்து அழியாத்தன்மையுடையதென்று அதில் மில்ட்டனார் வைத்திருந்த விசேஷ விசுவாசமும், அம்மெய்மைக்குச் செயற்கையாலன்றி இயற்கையாக வலியுள்ளதென்று அவர் கொண்டிருந்த உறுதிப்பாடும், அவ்வலியுடைமையால் கடைசியில் சத்தியமே செயம் அடையுமென்று அவர் மனதில் ஊன்றிப்பதிந்திருந்த திடபத்தியும் ஆகிய இவை, பல சீர்திருத்தங்களின் விஷயமாக அவர் கூறியவைகள் அநுட்டானத்துக்குக் கொண்டுவரச் சாத்தியப்படாதவைகளென்று சிலர் கூறிய ஆட்சேபனைகளை மறுத்து நிவர்த்திக்க, அவருக்குக் கைகொடுத்துதவினதை நன்கு விளக்குவது.

28. சகல லௌகிக வியாபாரங்களையும் முற்றத்துறந்து பூரண மன அமைதியோடு வீட்டடங்கி, கனவிலும் விசாரமின்றி, கடவுளடியில் நீங்காத பத்திமையுடையராய், தமது அருமைத் திருக்குமாரரோடு இனிதாக வாழ்ந்து கொண்டிருந்த் முதிய மில்ட்டன் 1647-வது வருடத்தில் தேகவியோகமானதைத் தவிர, (நாம் முற்கூறிய தேசகலகத்தில்) முதலாம் சார்லஸ் (Charles) அரசன் மரணத்தினையடையும்படி நேர்ந்த 1649-ம் வருடம்வரை வேறு விசேடமான சம்பவங்கள் நிகழவில்லை.

29. அரசன் இறக்கவே, இராச்சிய பரிபாலனம் மில்ட்டனார் சார்ந்து நின்ற பக்கத்தார் வசமாயிற்று. அச்சமயத்தில், அவர் கடமையின் கற்பனைப்படி மேற்கொண்ட சுவாதீனஸ்தாபன வேலை முடிவு பெற்றதாகவும், அவரது ஆயுள் உத்தேசமாகிய பெருங்காப்பியம் இயற்றுங்காலம் வந்து விட்டதாகவும் கருதலாம். ஆயினும், அவர் அவ்வாறு நினையாது துரைத்தன காரியாதிகளில் ஊடாடிப் பழகும் பழக்கமும் கவிஞன் கல்வியைப் பூரணப்படுத்த ஆவசியகமானதென்று கருதினரென்று, அவர் அப்போது அங்கிலேய துரைத்தனத்தாருடையலத்தீன் காரியதரிசி உத்தியோகத்தை ஏற்றுக்கொண்டதனால், தோன்றுகின்றது. அங்கிலேய துரைத்தனத்தாரிடமிருந்து பல பாஷைகள் வழங்கும் பல தேசதுரைத்தனத்தார்களுக்கும் அப்பல துரைத்தனத்தாரிடத் திருந்து அங்கிலேய துரைத்தனத்தாருக்கும் போக்குவரவாகும் கடிதங்களின் மொழிபெயர்ப்பு அவ்வுத்தியோகத்தின் முக்கிய கடமையாக விருந்ததனால் அதனை வகித்தற்கு அவரிற் சிறந்தோர் அபூர்வமாயிருந்தனர்.

30. ராஜநியாயதீபகம் என்று பிரசுரமான ஒரு நூலுக்கு எதிராக, துரைத்தனத்தாருடைய ஆஞ்ஞைப்படி, பிரஜாநியாயம் என்னும் ஒருநூல் 1651 - ம் வருஷத்தில் எழுதினர். அதற்காகத் துரைத்தனத்தார் சம்மானஞ் செய்யப்பெறுதற்குப் பதிலாக எவ்வெகுமதியும் ஈடாகாத நஷ்டமடைந்தார். அந்நூலியற்றும் முயற்சியில் கண்ணிழத்தலாகிய நஷ்டம் நேருமென்று தெரிந்தும், அதனை மேற்கொண்டாராதலால், உள்ளபடி கண்ணிழந்தபோது அவர் வருத்தமடையவில்லை. நீங்காத தலைநோவும், (இரவில்) நெடுநேரம் விழித்திருந்து படித்தலும், பார்வையைப் பாதுகாக்கு நோக்கத்துடன் அடிக்கடி பேதிமருந்து உட்கொள்ளுதலும் ஒன்றுசேர்ந்து கண்ணிழக்கும் ஆபத்து துரிதமாக நேரும்படி செய்தன. அவ்வாபத்து நேரும் அடையாளங்கள், பன்னிரண்டு வருஷத்துக்குமுன் தோன்றி, வரவரப் பலப்பட்டு,1650-ம் வருஷத்தில் இடக்கண்பார்வை முற்றும் ஒழிந்தது. அவருடைய வயித்தியர், நூலெழுது முயற்சியை விட்டு விடாது பிடிவாதமாக மேலும்மேலும் செய்தால், குறைப்பார்வையும் இழக்கும்படி நேருமென்று எச்சரித்தும் அதை மில்ட்டனர் கவனிக்காமல் "மேலான கடமையை நிறைவேற்ருது கைசோரவிடுதல் பார்வையிழத்தல் ஆகிய இரண்டில் எனக்குவப்பான ஒன்றைத் தெரிந்து கைக்கொள்ளவேண்டியவனுக இருந்தேன். அவ்விதமான விஷயத்தில் வயித்தியர் கூறுவதைக்கேட்பது தகுதியாயிருக்கவில்லை. *தன்வந்திரியே வெளிப்பட்டுவந்து புத்தி சொல்லியிருந்தாலும் அதற்கும் செவிகொடுத்திருக்கேன். எனக்கு இவ்வாறென்று தெரியாதபடி,பரமண்டலத்திலிருந்து என் மனத்துள்வந்து கற்பித்த அந்தரங்கப்போதகருடைய கற்பனையை மறுக்க அசத்தனுயினேன். வெறுங் கீர்த்திக்காக உயிரையுங்கொடுப்பார் கிடக்க; அனேகர் என் நஷ்டத்திலும் அதிகக்கேடான நஷ்டமடைந்து யான் குறித்த நன்மையிலும் குறைவான நன்மையைப் பிரதிபலமாக அடைவதைப்பற்றி என் மனத்துள்ளே சிந்தனைசெய்து, போனது போக எஞ்சியிருந்த பார்வையைப் பொதுநன்மை விஷயமாக என் சத்திக்கு இயன்றவாறு முயற்சிக்கும் உயர்வொப்பற்ற சிறந்த முயற்சியில் உபயோகிக்கத் துணிந்தேன்." என்னுங் கருத்துக்களடங்கிய வசனங்களை யெழுதியிருக்கிருர்.

* இங்கிலிஷிற் கூறப்பட்ட ஓர் புராணிக வைத்திய தெய்வத்துக்குப் பதிலாக இங்கு தன் வந்திரி என்று கூறப்பட்டது.

31. நெடுங்காலமாகத் தொடர்ந்து வளர்ந்துகொண்டிருந்த இந்த நேத்திரவியோகப் பெருவிபத்து 1652 - வது வருஷாரம்பத்தில் பூரணமாயிற்று. நிரந்தரமான அந்தகாரம் அவரைச் சூழவும் நிறைந்தபோது அவருக்கு வயது நாற்பத்துமூன்று. மனிதருக்கு நேரக்கூடிய அதிகொரோமான துன்பங்களுள் ஒன்ருகிய அந்தகத்துவம், நூல்கள் மத்தியில் (நூல் முயற்சியிலே) காலங்கழிப்போருக்கு விசேஷ வருத்தத்தை விளைக்கிறது. இழக்குமுன் அதிக உடைமையாளராகவிருந்தவர்களே இழந்தபோது அதிகநஷ்டமடைந்தவர்களாகிருர்கள். "ஸர்வேந்த்ரியாணாம் நயநம் ப்ரதாநம்" என்று சொல்லியபடி பஞ்சேந்திரியங்களுள்ளும் சிறந்த நேத்திரம் யாவருக்கும் பொதுவாகச் சிறந்த உபயோகமுள்ள தென்னினும், ஆன்ருேர் திரட்டிவைத்திருக்கும் அறிவுநிதிகளடங்கிய நூற்பேழைகளுக்குத் திறவுகோலாக, அந்நேத்திரத்தை யுபயோகிக்கும் வழியை நெடுங்கால முயற்சியினுல் தெரிந்தவர்களுக்கு நேரும் நேத்திரவியோகப் பேராபத்து அதிகதுக்ககரமானது. கண்டுகளிக்கும் சகல இன்பங்களையும், கண்ணிழப்பதனுல் யாரும் இழந்துவிடுகிருர்கள். விற்பன்னரோ, அவ்வின்பங்களேயன்றி, சாலத்தேர்ந்த பெரியோர், அதிக அருமையான கருத்துக்களை, மிக உசிதமான நடையில் எழுதிவைத்திருக்கும் சிறந்தநூல்களை வாசித்தலையும் பேரானந்தத்தையும் இழந்துவிடுகிருர்கள். மில்ட்டனர் இவ்வாறு கண்ணிழந்தபோது அவருடைய பெருங்காப்பியம் ஆரம்பமும் ஆகவில்லை.

32. அவர் முதல் மனைவியிறந்து நான்கு வருடமானபின் 1658-வது வருடத்தில் இரண்டாவது விவாகஞ்செய்தார். இரண்டாமனைவி ஒன்றேகால்வருடம் அவருடன் வாழ்ந்தபின் தேகவியோகமாயினுள். அவளுடைய ஞாபகத்தை நிலைநிறுத்திய அவருடைய பாட்டொன்றினுல் அவள் அன்பும் இனிய நற்குணங்களும் நிறைந்த உத்தமி என்பது விளங்குகின்றது.

33. 2-வது சார்லஸ் அரசனுக்குப் பட்டமானபோது, குடியரசுக் குதவியாகவிருந்த சகலரும் இடுக்கண்செய்யப்பட்டு மரணக்கினையடையும் பிராணுபாயத்துக்குட்பட்டார்கள். அவ்வபாயத்தினின்றும்

மில்ட்டனுர் தப்பியது அருமை. * அடியிற்குறித்திருப்பது உண்மை யென்பதற்குத்தக்க ஆதாரங்காணப்படவில்லை. ஆயினும் சில காலம் அவருடைய இஷ்டர் ஒருவருடைய கிரகத்தில் மறைந்திருக்கும்படி நேரிட்டதன்றி 1660-ம் வருடத்தில் சிலகாலம் சிறையில் வைக்கப்பட்டிருந்தாரென்றுதெரிகிறது. அவர் மரணுக்கிணையினின்றுந் தப்பியது அவர் இஷ்டர் சிலருடைய முயற்சியினுலென்று சொல்லப்பட்டிருக்கிறது. அது எவ்வளவு உண்மையென்று நிச்சயிக்கவழியில்லை. பலர் பலவாறு கூறினும், அவர் கண்ணிழந்து ஆதரவற்றிருந்த சிறுமையும் தீங்குசெய்யும் ஆற்றலின்மையுமே அவர் உயிர்தப்புவதற்கு ஏதுவாயிருந்தனவென்று ஊகிப்பாரும் உண்டு. பிராணுபாயம் நேரும்படியிருந்த சமயத்தும் தம்முடைய சுதந்தரங்களைக் கைவிடாது நிலைநிறுத்த அவர் அஞ்சாது முயன்றது வியக்கத்தக்கது.

* "இராஜதுரோகிகளைப் பிடிக்கிறதற்கு வாரண்டு புறப்பட்டதென்று கேட்டவுடனே இவர் ஒருதந்து பண்ணினுர். எப்படியெனில் தமது உற்றுர் உறவினரை வரவழைத்து, தாம் இறந்துபோன பாவனையாக ஒரு பொய்ப்பாடை கட்டச்சொல்ல அப்படியே [செய்து] சுற்றத்தாரும் சிநேகிதரும் அழுது தொழுது பின்நடக்க, பிரேத பூசைக்காரர் பொய்மை மில்ற்றனை

மெய்யுயிர் உலகத்தாக விதியையும் வலித்து விண்மேல்
பொய்யுடல் கொண்டு செல்லும் நமனுடைத் தூதர்போல

சவப்பெட்டியோடு கொண்டுபோய் சமாதிசெய்துவிடவே, ஊரெங்கும் மில்ற்றன் இறந்துபோனுர் என்று பெரும்பேராய்க்கிடந்தது. ஆகவே வாரண்டுச்சேவகருக்கு மில்ற்றனைத் தேடிப்பிடிக்கவேண்டும் என்கிற புத்திதோன்றவில்லை.

"இப்படியாக மில்ற்றனுர் ஒருவர் தவிர மற்றனைவரையும் இழுத்துப்பறித்துக் கழுத்தைத் தறிக்கிறதும் கழுவில்போடுகிறதுமாய்க் காலங்கழிந்தபின் ஊடே ஒரு பேச்சு ஊசலாடத்தொடங்கி, 'மில்ற்றன் இன்னம் சாகவில்லை; செத்தது வைக்கோற்புரி மில்ற்றன்; இருக்கிறது ஜான்மில்ற்றன்' என்று சத்தம்பரவி, இருந்திருந்து இந்தச்சத்தம் அரமனைக்கும் எட்டி அரசன்காதிலும்பட்டது. அந்த அரசன் ஒரு சோமாளிக்கூத்தன். இதைக்கேள்விப்பட்டவுடனே குலுங்கக் குலுங்க நகைத்து, தலைபிழைக்கும்படி மில்ற்றனுர் பண்ணின சம்பிரதாயத்தை மெச்சி, அவர் அச்சமயத்தில் கண்தெரியாத விருத்தராய் இருந்தபடியால், கொல்லுவதைவிட கொல்லாமல் விடுவதே கொடிய தண்டனையாயிருக்குமென்று சொல்லி அவரை உயிர் பிழைக்கவிட்டாரும்."

34. 1660-ம் வருடத்தில் நிகழ்ந்த துரைத்தன மாறுதலால், குடிப்பக்கத்தாருள் அனேகருக்கு மிகுந்த கஷ்ட நஷ்டங்கள் நேர்ந்தன. அக்கஷ்ட நஷ்டத்தில் மில்ட்டனார் பாகம் மிகப்பெரிதாயிருந்தது. அவர் கட்சியாரடைந்த பொது அழிவில் அவருக்குள்ள பாகத்தை அவசியமாக அடைந்தார். லத்தீன் காரியதரிசி வேலையிழந்தாரென்பது சொல்லாமலே விளங்கும். அவர் ஆரம்பத்திலேயே ஒரு கட்சியையும் சாராதிருந்தால், அது உத்தமமாயிருந்திருக்கும். அப்படியன்றி ஒரு கட்சியைச்சார்ந்தாராகவே அதனால் வந்தபயன்களை மனங்கோணாமலேற்றுக்கொண்டார்.

35. அவருடைய மனத்துக்கு ஆதாரமும் ஆகாரமுமாகி, அவருடைய நம்பிக்கைகளுக்கும் ஆசைகளுக்கும் பற்றுக்கோடாகநின்று இருபதுவருட காலமாக அவரை இடைவிடாது உழைக்கச் செய்த துரைத்தன மதாசாரச் சீர்திருத்த முயற்சி இனித் தலையெடுக்காதபடி முற்றும் அழிந்து போனது, அவர் பொருளிழந்தும் கண்ணிழந்தும் அடைந்த கஷ்டத்திலும், மிக அதிகமாக அவருக்கு மனக்கவலையுண்டாக்கியது. அவர் கட்சியார் பலர், நிகழ்ந்ததுரைத்தனமாறுதலுக் கிசைய நடந்தும், சிலர் அம்மட்டேயன்றிப் புதுத் துரைத்தனத்தில் உத்தியோகம் பெற்றும், காலங்கழிப்பது கூடியதாயிருந்தது. மில்ட்டனாருக்கோ, அவ்வாறு காலத்துக்கேற்ற கோலம் வகிக்குங்குணம் சிறிது மிருக்கவில்லை. அவர் கட்சியார் அவரை நீங்க, அவர் தனியாகித் தாம் ஒருவரே தங்கட்சியாயினார். அவர் அழிவடைந்த நாசகாலமே அவர் மகத்துவம் விளங்கு நற்சமயமுமாகியது. அவருடைய நஷ்டம் அங்கிலேய கவிஞருக்கு லாபமாயிற்று. இரண்டாவது சார்லஸ்அரசன் சிங்காதனமேறவே, மில்ட்டனார் சமய துரைத்தன சுயாதீன நிமித்த மியற்றும் சகல முயற்சியும் சிறிதும் பயன்படுவன வல்லனவாயின. மன்பதைக் கூட்டத் தொரு சிறுபகுதியாராகிய தஞ் சுதேசத்தார் பொருட்டுச் செய்த சீர்திருத்த முயற்சி பயனின்றிக் கெடவே, அதினின்றுந் தம்மனத்தைத் திருப்பி, அகில உலகத்து மனிதருடைய ஆன்மாக்களும் பந்தயமாகத் தீதும் நன்மையும் போராடுவதும், கடவுளது பெருங்கருணை யிடையீட்டினால் நன்முடிவு சந்தேகமின்றித் தெரியப்பெற்றதுமாகிய பெரும் போரை விஷயமாகக் கொண்ட காவியப் பெருமுயற்சியில் தமது அத்தியந்த மனோசத்திகள் யாவற்றையும் ஒரு முகமாக்கிப் பிரயோகிக்கலாயினார். ராஜ கெம்பீர நடையோடு நிகழும்

சுவர்க்க நீக்கச் செய்யுட்களில் உள்ளடங்காது சீறிக் கொதித்து வெளிக்குதித்தாரவாரிக்கும் அவருடைய உத்தண்ட மனோசக்தியானது, சஞ்சலத்தின் தூயவொலி சற்றுமில்லாததாய், நிர்ப்பாக்கியத்தையே நேராக நோக்கி "எனது தைரியத்தையாவது, நம்பிக்கையையாவது அணுவளவுங்குறைக்கும் ஆற்றல் உனக்குண்டாயிற் குறைப்பாயாக" என்று அறைகூவுந் தீர வைராக்கியப் பேரொலியிருந்ததாயிருக்கின்றது.

36. அவர் 1658-ம் வருஷத்தில் சுவர்க்க நீக்கத்தைப்பாட ஆரம்பித்து ஐந்துக்குக்குறையாமல் ஏழுக்கு அதிகப்படாத வருடகாலத்தில் அதை முற்றுப்பெறச்செய்தார். அந்நூல் பாடியகாலமுழுதும் அவர் அந்தகராயிருந்ததனால், அவர் அந்நூல் முயற்சியில் அடைந்த கஷ்டமிவ்வளவென்று திருத்தியாகச் சொல்லுதலரிது. அந்நூல் பாடுவதற்கு நல்லநூல்களை வாசித்தல் ஆவசியகமாயிருந்தது. நூல்களைத் தமக்கு வாசிக்கும்பொருட்டு வாசகனொருவனை நியோகித்தார். அவன் அங்கிலேய நூல்களைமாத்திரம் வாசித்தான். அதுவும், அவருக்குத் திருத்திபுண்டாகும்படி போதியதாயிருக்கவில்லை. அந்நூலுக்கு அங்கிலேய நூல்களேயன்றி, பூர்வீக எபிரேய கிரேக்க லத்தீனிய நூல்களும் யூரோப்பிய கண்டத்துத் தற்காலத்திய பாஷை நூல்களும் வாசித்தல் ஆவசியகமாயிருந்தது. ஆதலால் தம்மைப்பார்க்கவந்து கொண்டிருந்த பலவிற்பன்னர்களையும் பலபாஷை நூல்களையும் வாசிக்கவும் தாம் பாடியதை எழுதவும் செய்துவந்தார்.

37. அவர் தாயில்லாத மூன்றுபெண் மக்களைப் பாதுகாக்கும் கடமையோடு அந்தகத்துவமும் உடையவராயிருந்ததனால், தம் நிமித்தமேயன்றி அம்மக்களினிமித்தமும் கலியாணஞ்செய்வது ஆவசியகமாயிருந்தது. தமது இஷ்ட ரொருவருடைய உதவியால் மூன்றாவது மனைவியைத் தெரிந்தெடுத்து 1663-ம் வருஷத்தில் விவாகம்பண்ணினார். அம்மனைவி முயற்சியும் சாமர்த்தியமுமுடையாளாய், விவாகமானது முதல் அவர் இறக்குமளவும் பதினொருவருடம் இடையறாத கவனத்தோடு அவருக்குவேண்டும் பணிவிடைசெய்து அவருடைய இறுதிக்காலத்தைச் சந்தோஷகரமானதாகச் செய்தாள். அவர் இறந்தபின், அவள் நெடுங்காலஞ் சீவித்திருந்து, அவர் ஹோமரையும் (Homer) வர்ஜிலையும் (Virgil) அடிக்கடி வாசிக்கவில்லையாவென்று சிலர் கேட்டபோது, அக்கவிஞர்களிடத்திருந்து அவர் திருடினா

ரென்பதையுட்கொண்டு சொன்னார்களென்று தெரிந்து, அவர் அவரு டைய வாகீசை(Muse)யைத்தவிர வேறொருவரிடத்திருந்துந் திருட வில்லையென்று சொன்னுரென்று சொல்லப்பட்டிருக்கிறது.

38. மில்ட்டனுரைக் காணவரும் விற்பன்னர்களும் இங்கிலிஷ் மாத்திரந்தெரிந்த அவருடைய வாசகனும் வாசிப்பது, மிகுந்த வாசிப் பாலுந் திருத்தியடையாத அவருடையபடிப்பாவலாகிய பசியைத் தணிக்கப் போதாததாயிருந்ததனுல், அழகுடையாளாயினும் அங்க வீனமும் பேச்சுத் தடுமாற்றமுமுடையாளாயிருந்த முதற்புத்திரி தவிர மற்றப் புத்திரிகளிருவரையும் வாசிக்கும்படி செய்தார். அங்கி லேய பாஷையொழிய அவர்கள் (அவருக்கு உபயோகமாகும்படி) வாசித்த அஞ்சு அல்லது ஆறுபாஷைகளிலும் அர்த்த விற்பத்தி யடையும்படி அவர் அவர்களைப் பயிற்றவில்லை. அதனுல் சிலகாலம் அவருக்காகப் பல பாஷைநூல்களையும் வாசித்துவந்தார்களாயினும், அந்த அர்த்தந்தெரியாத வாசிப்பு வரவர வெறுப்பை விளைத்துக் கடைசியாக அவர்கள் வாசிக்கமாட்டோமென்று மறுத்துவிடும்படி செய்தது. அப்பால் அவர்கள் யாதொரு முயற்சியுமில்லாதிருப்பது சரியன்றென்றும் அவர்கள் ஒரு கைத்தொழில் தெரிந்திருப்பது நல மென்றுங் கருதி, சித்திரத் தையல்வேலை பழகும்படி செய்தார்.

39. அவருடைய யௌவனகாலத்தில் இரவில் நெடுநேரம்படிப் பது வழக்கமாயிருந்தது. கண்ணிழந்தபின் அவ்வழக்கத்தை மாற்றி இராத்திரி ஒன்பதுமணிக்கே படுக்கைக்குப் போகும் வழக்கத்தை அநுசரித்தார். பின்கூறும் அவருடையதினசரி நடப்பு அவருடைய சிறந்த முயற்சியையும் ஒழுங்கையும் நன்குவிளக்கும். கோடைகாலத் தில் நாலுமணியானபோதும் மாரிகாலத்தில் அஞ்சுமணியானபோ தும் எழுந்து முதலில் எபிரேய விவிலிய (Hebrew Bible) நூலை வாசிக்கக்கேட்பார். பின்பு கேட்டதைச் சிந்தனை செய்வார். எழு மணியானதும் அவருடைய வாசகன் திரும்பவந்து பகற் போசன சம யம்வரை வாசித்தலும் (அவர் பாடியதை) எழுதுதலும் செய்வான். வாசிப்பதில் எவ்வளவு நேரம் சென்றதோ அவ்வளவு நேரம் எழுது வதிலும் சென்றது. போசனமானபின் ஒரு தோட்டத்தில் மூன்றல் லது நாலுமணிநேரம் உலாவுவார். தம்மைக் காணவந்தவர்களோடு உல்லாசமாகச் சம்பாஷித்தலன்றிச் சங்கீதப்பயிற்சி யொன்றே அவ ருக்குப் பொழுதுபோக்காயிருந்தது. கிறிஸ்திய ஆலயங்களிலிருக்

கும் சுரமண்டலம் (Organ) போன்ற ஒரு வாத்தியத்தையும் வீணை போன்ற வேறொரு வாத்தியத்தையும் அவர் வாசிப்பது வழக்கம். அவைகளிலும் முந்தியதை விசேஷமாக வாசிப்பார். சிலவேளை தாமே பாடியும், சிலவேளை, இராகபேதமறியும் காதில்லாளாயினும் இனிய கண்டமுடையாளென்று அவர் சொல்லப்பெற்ற அவர் மனைவியாளைப் பாடுவித்துக் கேட்டும் விநோதமாகக் காலங்கழிப்பார். பின்பு தம் படிப்பறையுட் சென்று ஆறுமணிவரையும் வாசிக்கக் கேட்பார். ஆறுமணிக்குப்பின், இஷ்டர்களுடைய வரவேற்று அவர்களுடன் எட்டு மணிவரை பொழுதுபோக்குவார். எட்டுமணியானபோது இராப்போசனம் செய்வார். அதிகக் கொழுமையும் ருசிகரமுமான பதார்த்தங்களை விலக்கி, (ஆகாராதிகளில்) அளவு கடவாமையை விரதமாக அநுட்டித்து வந்தார். மட்டான இராப்போசனத்துக்குப் பின், படுக்கைக்குப் போகுமுன், சுத்த சல பானஞ் செய்வதும், அவர் வழக்கமாயிருந்தது.

40. கண்ணிழந்ததன்றி அதற்கு முன்னும் பின்னும் சூலைநோய் அவரைப் பீடித்துக்கொண்டிருந்தது. அது பல சந்துகளிலும் நின்று துன்பஞ் செய்ததன்றி அவர் கண்ணிழத்தலுக்கும் ஒரு காரணமாயிருந்தது. அதனால் வருந்தும்போதும் மிகுந்த களிப்போடு பாடினாரென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த நோயினாலே 1674-ம்-ஆ நவம்பர்மீ 8உ, கொஞ்சங்குறைய 66 வயதாயிருந்த போது, தேகவியோகமாயினார். அவர், தம் வாழ்நாளை மாணாக்கராகத் துவக்கி, மாணாக்கராகவே முடித்தார்.

41. பின்வருவது காலரிச்சு (Coleridge) என்பவர் கூறுவதன் சாரம்:—இந்த மகானுடைய அந்தியகால நிலைமையைச் சிந்திப்பதினும் மகத்துவமான சிந்தனை என் மனோசத்திக்கு மிஞ்சியதாகவிருக்கிறது. எதிர்த்த கட்சியார் போலவே சார்ந்த கட்சியாரும் தம்மியல்பறியாத காலத்திலே, அறிவில் மற்றவர்களுக்கும் தமக்கும் இடையே நெடுந்தூரம் இருந்ததனால் தம் (அறிவுப்) பேருருவம் (அவர்களுக்குச்) சிற்றுருவாகத் தோன்றி, எளிமைக்கும் அந்தகத்துவத்துக்கு முன்னாகி நிந்தனையும் இடுக்கணும் செய்யப்பட்டும், தம்மனத்திலெழும் ஆனந்தக் கருத்துக்களிலேயே கவனஞ்செலுத்தி, தெய்வச் செயலுக்கும் சித்தத்துக்கும் எதிராக விவாதிக்கவாவது

தம்மனத் திரத்தையும் நம்பிக்கையையும் அணுவளவுங் குறைக்கவாவது செய்யாமல், எப்பொழுதும் எதுநேர்ந்தாலும் அதைப் பொறுத்துக்கொண்டு, நன்னெறியி லொழுகினார்.

# THE STORY

## OF

# PARADISE LOST.

# சுவர்க்க நீக்கக் கதை.

* சிருஷ்டி காலத்துக்கு முன், மஹாகாசம் அல்லது பெருவெளி யானது (Universal Space), பரமண்டலம் (Heaven, or the Empyrean) †மூலப்பிரகிருதி (Chaos) யென்று, இரண்டு பெரும் பிரிவா யிருந்தது. அம் மஹாகாசம் எந்தத்திசையிலும் மனோபாவனைக் குங்கூட எல்லையற்றதா யிருப்பது போலவே, அவ்விருபெரும் பிரிவும் ஒன்றையொன்று சந்திக்குமிடத்தன்றி மற்றெந்திசையிலும் முடிவில்லாதவைகளே. ஆயினும், அவைகள் புலப்படுமாறு அடியிற் குறித்த படத்தைத் துணையாகக்கொண்டு மனத்திஞல் பாவித்தல் வேண்டும்.




* இங்கே சிருஷ்டிகால மென்றது ௩௩-ம் பக்கத்திற் கூறிய சிருஷ்டி காலத்தை.

† மூலப்பிரகிருதி எனினும் சமட்டி எனினும் பொருந்தும்.

மரஞ் செடி யற்ற மைதானத்திலாயினும் நடுக்கடலிலாயினு மிருந்து சூழவும் நோக்குவோர்க்கு உண்மையில் முடிவற்றதேயாயினும் பார்வையில் முடிவுடையதுபோலத் தோன்றும் வானத் தெல்லைபோலவே, இந்தப்படத்தின் விருத்தவரி, உண்மையாக இல்லாததும் மனது அப்பாற் செல்லமாட்டாததுமான தோற்ற எல்லையைக்காட்டும் அறிகுறியேயன்றி வேறன்று.

2. மேற்பாகமாகிய பரமண்டலமானது, மனத்தால் வரையறுக்கக்கூடாத ஒளி, சுவாதீனம், ஆனந்தம், மகத்துவம் ஆகிய இவற்றுக் கிருப்பிடமாயுள்ளது. அது தன் கீழுள்ள மூலப்பிரகிருதியினின்றும் தன் பளிங்குத்தளத்தினுல் பிரிக்கப்பட்டுள்ளது. அந்தத்தளத்தில் மூலப்பிரகிருதியினின்றும் பரமண்டலத்துக்கு வழிவிடும் பெரியவாசல் ஒன்று உண்டு. அவ்வாசலினின்று நட்சத்திரங்கள் சிதறிப் பரப்பப்பெற்றுப் பொற்சுண்ணமே தூளாகவுடைய விஸ்தாரமான ஓர் பாதை தேவசிங்காதனத்தை நோக்கிச் செல்லுகின்றது. அச்சிங்காதானம், பரமண்டலத்தின் மத்தியில் உள்ள பரிசுத்த பருவதத்தின் (Sacred Hill) உச்சியில் உள்ளது. அப்பருவதத்தைச் சூழ்ந்து, பசுமையாகவும் புஷ்பங்கள் மலிந்ததாகவும் விளங்கி, ஜீவவிருக்ஷங்களின் (Trees of life) இடையே ஓடுகின்ற ஜீவ நீரோட்டம் அமைந்து, ரமணீயமான அளவற்ற விஸ்தாரமுடைய ஓர் மைதான மிருக்கின்றது.

3. தேவன் சர்வவியாபகராயினும், விசேஷ பிரசன்னத்தோடு மேற்கூறிய சிங்காதனத்தின்மேல் கட்புலனுக வீற்றிருக்கின்றார். பலகோடியரான தேவதூதர்கள் வந்தனை செய்யவேண்டியபோது அவர் சிங்காதனத்தைச் சூழ்ந்து வந்தித்து ஆனந்தமடைகின்றார்கள்; மற்றக்காலங்களில் அங்குள்ள பல இடங்களிலும் பரவி வாசஞ்செய்கின்றார்கள். அவர்கள் தனித்தனியே அவரவர்களுக்குக் கடவுள் அமைத்தருளிய ஸ்தானம், அந்தஸ்து முதலியவை வழுவாமல் வாழ்வோராயினும், அவர்கள் பற்பலர் வெவ்வேறாகக்கூடி அமைந்த பலபிரிவுகள் அவர்களுள் உண்டு. அவற்றுள் முக்கியமானவை சேராபியர் (Seraphim) கேருபியர் (Cherubim) என்னும் பிரிவுகளே. எந்தத்தூதரும், விசேடநட்பம் பாராட்டிக் கூறப்படாத. போது, இவ்விருபிரிவுள் யாதாயினுமொன்றைச் சார்ந்தவரெனப் பெறுவர். உள்ளேயிருப்பதைத் தெளிவாயறியாதபடி செய்யும் சோதிமயமேகம் ஒன்று தேவசிங்காதனத்தை அடுத்துச்சூழ நிறுத்

தப்பட்டிருக்கிறது. ஆயினும் தேவதூதர்கள் இடைஇடையே அம் மேகத்தினுட்சென்று தேவசாக்ஷாத்கார தெரிசனம் செய்து தேவ வாக்கைச் செவிமடுக்கிறார்கள். பரிசுத்த பருவதமும் அதைச்சூழ்ந்த மைதானமு மன்றிப் பரமண்டத்தில், வேறு குன்றுகள் சமநிலங்களோடு, பள்ளத்தாக்குக்களும் உள்ளன. அங்கெல்லாம் பல அந்தஸ்துக்களுடைய தேவதூதர்களும் சஞ்சாரஞ்செய்து ஆனந்தமாகப் பொழுதுபோக்குவர்.

4. கீழ்ப்பாகமாகிய மூலப்பிரகிருதியும் பரமண்டலம்போலவே மனோபாவனைக் கடங்காததே. ஆயினும், அதனைப் பின்வருமாறு பாவிக்கலாம். அது, வரம்பற்ற பிரமாண்டமான சமுத்திரம், அல்லது அகண்டபாதாளம், அல்லது அபாரமான சதுப்புநிலமாய், பேரிருள் எங்கும் நீக்கமின்றி நிறைந்ததாய், உயிருள் பொருளொன்று மில்லாததாய் உள்ளது. அதில், பூதங்களின் உருவமற்ற மூலப்பொருள்கள் தாறுமாறாக ஒன்றோடொன்று மயங்கிக் குழம்பிக் கொந்தளித்துப் புரண்டுகொண்டு கிடக்கின்றன. அது, நிலம் நீர் வாயு தீ ஆகிய இவை யொன்றும் இன்றி, உருவமில்லாத பொருள்களா லாகிய ஒரு வகைக் குழம்புமயமா யிருப்பது; பரமண்டலத்தின் தளமாகிய அடிச்சுவரினின்றும் பிரிக்கப்பட்டுள்ளது.

5. இவ்வாறு, எல்லையற்ற பெருவெளி, இரண்டு பிரிவுடையதாய், தேவதூதர்களுக்கும் ஞாபகத்துக் கெட்டாத நெடுங்கால மிருந்தது. அப்படி நீண்ட காலமாக மாறாதிருந்த இந்த ஏக நிலைமை, கடைசியாக, மாறும்படியான காலம் வந்தது. பரமண்டலத்தின் வருடத்தில் நிகழ்கின்ற நாள்களிலே ஒருநாள், சகல தேவதூதர் சங்கமும் தேவாக்கினையின்படி அழைக்கப்பட்டு எல்லாம் வல்ல தேவனது சிங்காதனத் தெதிரிலே வந்து கூடினார்கள். தேவனுக்கருகே பரமானந்த பரிதராய்த் தேவகுமாரரும் வீற்றிருந்தார். அவர்கள் பின்வரும் தேவ கற்பனையைக் கேட்க லானார்கள் :—

"பல்வகைத் தேவீர்! பணிப்பது கேண்மின்,
என்றும் மாறா இயல்பிற் றாக
வகுக்கும் இக் கற்பனை மன்னுமால். இத்தினம்
இவனை ஈன்றனென்; எனதோர் மகன் இவன்
என்பதை அறிகுமின். இப்பரி சுத்த
பருவதத் திவற்குப் பட்டாபி டேகம்
புரிந்தனன். என்வலப் புறத்திவன் உறைதல்

நோக்குமின் நீரால்; நமக்கிவன் தலைவனென்
விதிக்கின் றனென்;இவ் விண்ணுளார் யாரும்
படியில் முழந்தாள் படத்தொழு திவனை
கருத்தனென் றங்கீ கரிக்கக் கடவர்கள்
ஆமென ஆணையிட் டறைந்துளேன் இவற்கே."

இப்பாட்டின் கருத்தாவது:— தேவதூதர்கள், அரசர்கள், அதிபதிகள் முதலான பலவகைப்பட்ட தேவர்களே! யான் கூறுவதைக் கேட்பீராக. யான் இப்போது பிறப்பிக்கும் தீர்ப்பு என்றும் மாறாததாகும். இன்று இவனைப்பெற்றேன். இவன் என் ஒரே குமாரனென்று நீங்களெல்லாம் அறிவீர்களாக. இந்தப் பரிசுத்த பருவதத்தின்மேல் இவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்திருக்கிறேன். இவன் இப்போது எனது வலப்புறத்தில் இருத்தலைப் பார்க்கின்றீர்களன்றோ. இவனை உங்கள் தலைவனாக நியமிக்கின்றேன். 'பரமண்டலத்துள்ளார் யாவரும் இவனை முழந்தாள்படியிட்டு வணங்கிக் கருத்தனென்றொப்புக்கொள்ளக் கடவர்கள்' என்று யான் இவனுக்கு ஆணையிட்டு வாக்குக் கொடுத்திருக்கின்றேன்.

6. இந்தத் தீர்ப்பு, தேவசங்கத்தில், ஒருபாக மொழிய, மற்றெங்கும் சந்தோஷமாக வணக்கத்துடன் ஏற்றுக்கொள்ளப் பட்டது. அப்பாகத்தில் தலைமையான தூதன், தேவதூதர்களின் தலைவர்களுக்கெல்லாந் தலைவனே அல்லனெனில், அத்தலைவர்களுள் ஒருவனும், மிகாவேல் (Michael) காபிரீல் (Gabriel) ராபேல் (Raphael) முதலிய அத்தியக்ஷ தூதர்களுள் முதல்வனே யல்லாவிடில், அவர்களோடு சமானாதிகார முடையவனும் ஆகியவன். அவன், பின்பு, சாத்தான் (Satan) என்ற பெயரினால் அறியப்பட்டவன். அவனுடைய ஆதிப்பெயர் பரமண்டலத்தில் வழங்கா தொழிந்து போய்விட்டது. அவன் மட்டில், அத்தீர்ப்பு, கோபத்தையும் பொறாமையையும் அகந்தையையும் விளைத்து, அவன் கலகஞ் செய்வதற்குக் காரணமானது. அவன் தனக்கு அடுத்த அந்தஸ்தும் அதிகாரமு முடைய, பிற்காலத்தில் பெயல்செபு (Beelzebub) என்று பெயர் வழங்கப் பெற்றவனோடு துராலோசனை செய்தான். அவ்விருவராலும் கக்ஷியேற்பட்டு, அக்கக்ஷியில் தேவ சைனியத்தில் மூன்றிலொரு பகுதி சேர்ந்து, பரமண்டலத்தில் யுத்தம் ஆரம்பித்தது. மிகாவேலும் தேவபத்தி நீங்காத மற்றத் தூதர்களும்,சாத்தானையும் அவனுடைய கலக தூதர்களையும் எதிர்த்துப் போராடினார்கள். அதனால் பரலோகம் இரண்டு

தினம் யுத்த கோஷத்தில் மூழ்கியிருந்தது. மூன்றும் நாளில் (தேவகுமாரராகிய) மேசியா (Messiah), பல்லாயிர இடிப்படையோடு அதிகாரத்தேரூர்ந்து சென்று, தமக்கும் தம் அக்கினிப் படைகளுக்கும் முன்பு அக்கலக தூதர்கள் தாவரிக்காமல், பகுத்தறியக் கூடாத ஒரு கூட்டமாம்படி மிதியுண்டு குழப்பமடையும் வரையும், அவர்கள் அணிகளூடு தந்தேரைச் சாரிபோக்கினார். ஆனால் அவருடைய நோக்கம், அவர்களை முழுதும் நாசமடையச் செய்வதா யில்லாமல், பரமண்டலத்தினின்றும் அப்புறப் படுத்துவதா யிருந்தது. ஆகையால், அவர்கள் காலின்கீழ், பரமண்டலத்தின் பளிங்குத் தரையாகிய அடிச்சுவர் அகலமாகப் பிளந்து, மூலப் பிரகிருதிக்குச் செலுத்தும் ஒரு பெரு விடருண்டானது. உடனே திடுக்கென்று பயந்து அவர்கள் பின்னோக்கிக் குதித்தார்கள். ஆனால் [அவ்விடர் வழியே கீழே விழுவதைக்காட்டிலும்] அதி நாசகரமான இடிப்படைகள் பின்னே தாக்கின. அவர்களுக்கென்று ஆயத்தஞ் செய்து வைக்கப்பட்டிருந்த இடத்துக்கு, மூலப்பிரகிருதி யூடாக, மேலும் மேலும் கீழே செல்லும்படி துரத்திக்கொண்டு தேவனது நித்திய கோபாக்கினியானது சுவாலித்துப் பின் செல்ல, அவர்கள் தலைகீழாக விழுந்தார்கள்.

7. அவர்களுக்காகச் சித்தப்படுத்தி வைக்கப்பட்ட இடம், மூலப்பிரகிருதியின் அடியில் ஒரு பகுதி, சுபாவநிலைமை யிழந்து, வரையறுக்கப்பட்ட ஒரு பெருங்கண்டமாக மாற்றப்பட்டு அமைந்த இடமே. அந்த இடம் நரகமே. மாறுபட்ட இப்போதுள்ள பிரபஞ்ச நிலைமைக்கேற்க முன்குறித்த மஹாகாசத்தின் படத்தை வித்தியாசப்படுத்திக் காட்டுகின்றோம்.



8. மேற்கூறிய நரகம், ஒரு விஸ்தாரமான அக்கினித் தலமாய், எரிகின்ற திரவரூபமான கந்தகமே நீராக உடைய கடலும் சுவாலிக்கின்ற கட்டிக்கந்தகமே தரையாக உடைய சமநிலமும் அக்கினி மலையும் உடையதாய், கொடிய உஷ்ணத்துக்கும் கடுங்குளிருக்கும் காரணமான தீயினாலும் பனியினாலும் தன்னை அடைந்தவர்களை வருத்தும் இயற்கையுடையதா யுள்ளது. இந்த, அதிபாதாளத்தினுள்ள,பெரிய இருட்சிறைக்கூடம் போன்ற,இடத்தில், மேற்கூறிய நிலைவழுவிய தூதர்கள் தள்ளப்பட்டார்கள். அவர்கள் இந்தப் புதிய வாசஸ்தலத்தை யடையுமுன், ஒன்பது நாள், இரவும் பகலுமாக மூலப்பிரகிருதியூடு வீழ்ந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் நரகத்தில் விழுந்த உடனே, அதன் முகடு அவர்கள் மேலே மூடி அவர்களை அடைத்தது. இதன் மத்தியில், மேசியா பிதாவிடம் திரும்ப, நிலைவழுவிய தூதர் துரத்துண்டதைக் குறித்துச் சந்தோஷம் கொண்டாடப்பட்டது.

9. இப்போது கூறியபடி மஹாகாசமானது, பரமண்டலம், மூலப் பிரகிருதி, நரகமென்று மூன்றுபிரிவுடையதாய் அந்தநிலைமையில் அதிசொற்பகாலமே யிருந்தது. வெகுசீக்கிரம் நான்காவது பிரிவொன்று அமைக்கப்பட்டது. நிலை அழிந்த தூதர் பரலோகத்தினின்று நரகத்தை யடைய மூலப்பிரகிருதியி னூடு வீழ்ந்ததில் ஒன்பது நாள் சென்றதேயன்றி, அவர்கள் நரகத்தையடைந்து அது அவர்களை மூடி அடைத்தபின்பு அவர்கள் அறிவு கலங்கிப் பிரமையடைந்து தீக்கடலிற் கிடந்ததில் வேறு ஒன்பது நாள் கழிந்தன. இந்த இரண்டாவது ஒன்பது நாளிலே தான், மஹாகாசம் நான்காவது பிரிவுடைய தாயிற்று. அழிவடைந்த தூதர்கள் நரகத்தில் மூண்டு, இடிகளால் துரத்துண்ட அவர்கள் பெரும்படை வீழ்ந்த அதிர்ச்சி மூலப்பிரகிருதியில் நீங்கிய உடனே, தேவபிதா தங்குமாரனை நோக்கிப் பரமண்டலத்துக்கு நேர்ந்த நஷ்டத்தை நிவர்த்திக்கும்படி முன்னமே தீர்மானிக்கப்பட்டிருந்த மனிதசிருட்டியும் மனுஷ உலகசிருட்டியும் இப்போது செய்யக்கடவனவாக என்று கூறினர். பிதாவின் சித்தத்தை நிறைவேற்றுவது குமாரனைச் சார்ந்ததாகவே, குமாரர் உடனே சிருட்டித்தொழிலை முடிக்கும்படி புறப்பட்டார். அவருக்கு வழிவிட்டுப் பரமண்டலத்தின் நித்திய கபாடங்கள் திறந்தன. செய்யப்போகின்ற பெருமித நிருமிதத்தொழிலை நோக்கும் ஆவலுடையவராய்ப் பல்லாயிர சேராபிய

கெருபீம்கள் உடன்செல்ல, சகல தூதர்கள் ஊடுருவி வீழ்ந்த தும் பரமண்டலத்துக்கும் நரகத்துக்கும் இடையே உள்ளதும் ஆகிய மூலப்பிரகிருதியினுள்ளே அவர் சென்றார். சென்று, தம் அதிவேக மான தேஜோகிறுத்தி, ஓர் பொற்கவராசத்தை யெடுத்துக் கையிற் பிடித்து, அதன் ஒரு முனையைத் தாம் நின்ற இடமே மையமாக ஊன்றி, மற்றமுனையை இருண்ட அளவற்ற பேரிடத்தூடு விருத் தாகாரமாகச் சுற்றினார். இவ்வாறு மூலப்பிரகிருதியினின்று எல்லை குறிக்கப்பட்டு, பூமியை உள்ளிட்ட மனுஷ உலகம் வரையறை அடைந்தது. இந்த உலகம், எத்திசையை நோக்கினும் அளவற்ற தாகத் தோற்றுவதும், சூரியன் சந்திரன் முதலிய கிரகங்கள் நட்சத் திரங்கள் ஆகியவைகள் அடங்கியதுமான அண்டமே. முடிவில்லாத தாகத் தோற்றினும், இவ்வுலகம், மூலப்பிரகிருதியினிடையே, அதி னின்றும் பிரத்தியேகப்படுத்தப்பட்டு,பரமண்டலத்தின் அடியில்ஒரு துளிபோலத் தூங்கும் அழகிய நீல உருண்டையே. இவ்வாறு அதி சீக்கிரமாக மனுஷ உலகம் எல்லை குறிக்கப்பட்டதாயினும், அதன் சிருட்டி, பூரணமாக முடிய ஆறுநாட்காலம். சென்றது. ஆறாம் நாளில், சிருட்டியின் மகுடமென்று சொல்லத்தக்க **ஆதாம் ஏவாள்** என்னும் பெயருடைய பிரதம நாயக நாயகிக ளிருவரும் படைக்கப் பட்டார்கள். அவர்கள், சிருட்டிக்கப்பட்ட நூதன உலக முழுவ துக்கும் அதிபதிகளாக நியமிக்கப்பட்டு, ஏதேனில் (Eden) உள்ள சிருங்கார வனமாகிய பூலோக சுவர்க்கத்தை வாசஸ்தலமாகப் பெற்று அங்கே,அவர்கள் பத்திசோதிக்கும்படி கடவுள் கட்டளையிட்டருளிய, 'விலக்குமரக் கனி தின்னக்கூடாது'. என்ற ஏககற்பனையைப் பெற் றார்கள். அங்கிருந்து தங்கள் உடைமையாகிய உலகத்தைப் புதிதா யுண்டாகிய ஆவலோடு உற்றுநோக்கிக் களித்தார்கள். அவர்கள் இவ்வாறு களித்திருக்க, மேசியா(Messiah) தம் வேலைவிட் டிளைப் பாறி, தாம் படைத்த சகலமும் நல்லவைகளாயிருப்பதைப் பார்த்துக் கொண்டு, தம் பிதாவிடத்துக்குத் திரும்பி, நூதன உலகத்தின் உச் சிக்கு நேர்மேலாக உள்ளதும் அவ்வுலகம் தொடருண்டு தூங்கும் விளிம்புடையதுமாகிய பரமண்டல வாசல்வழியே ஏறிச்சென்றார். ஏழாம் நாளாகிய ஓய்வுநாள், சகல பரலோகவாசிகளும்; முடிவுபெற்ற நூதன உலகத்தைக்குறித்துப் புகழமைந்த கீதங்கள் பாடுவதிலும், அவ்வுலகம் பரமண்டலவாசலுக்குத் தூரத்திலே யன்றிச் சமீபத்திலே வேறொரு பரமண்டலம் போலத் தூங்கும் விசித்திரத்தை வியந்து

நோக்கிச் சிந்திப்பதிலும், செலவிடப்பட்டது. இப்போது மஹாகாசத்தின் தோற்றம் பின்வரும் படத்தின்படி யிருந்தது.




10. முன்போலவே பரமண்டலம்,மூலப்பிரகிருதி,நரகம் ஆகிய மூன்றிடங்கள் இருக்கின்றன. ஆனால், அவற்றுடன், இப்போது பரமண்டலத்திற் றொடுப்புண்டு ஓர் துளிபோலத் தூங்கும் நான்காவது இடமொன்று சேர்ந்திருக்கின்றது. இந்தப்புதிய உலகம், தூரதிருட்டிக் கருவியின் உதவியால் மனிதர் கண்ணுக்குத் தோன்றக் கூடியதும் சூரிய சந்திராதி கிரகங்களும் நட்சத்திர கோடிகளும் அடங்கியதுமான அண்டமே. ஆயினும் மேற்கண்ட மொத்தப் படத்தில் அடங்கிய இடத்தின் சிலபாகங்களுக்கும் இந்தப் புதிய உலகத்துக்கும் இடையே உள்ள தூரமும், இந்த உலகத்தின் பரிமாணமும் இவ்வளவென்று மில்டனார் துணிவாகத் திட்டப்படுத்திக் கூறுகின்றார். பமண்டலத்திலிருந்து நரகத்தில்விழ, நிலைநீங்கிய தேவதூதர்க்குச் சென்றகாலம் ஒன்பது நாளிரவும் பகலுமென்றதனால், நரகம் பரமண்டத்திலிருந்து ஒன்பதுநாள் விழுந்தடையும் தூரமுள்ளதென்பது கூறியதாயிற்று. இந்த அண்டத்தின் கீழ்க் கடைசியான அடிப்பாகத்துக்கும் நரகத்தின் மேற்கடைசியான உச்சிக்கும் இடையே உள்ளதூரம்,பூமியை உள்ளிட்ட இந்த உலகத்தின் மேற்கடைசி உச்சிக்கும் கீழ்க்கடைசி அடிக்கும் மத்தியிலுள்ள தூரத்திற் பாதியே; வேறொரு வகையாகக் கூறினால்,இந்த உலகத்தின் உச்சி தொடருண்டிருக்கிற பரமண்டலவாசலுக்கும் நரகத்தின் உச்சியிலுள்ள நரகவாயிலுக்கும் ஊடே உள்ளதூரம், இந்த உலகத்தின் உச்சிக்கும் அடிக்கும் நடுவேயுள்ள தூரம் ஒன்றனைப் பங்குகொண்டது.

11. மஹாகாசத்தின்படம் இந்தப்பேருலக சிருஷ்டியினால் கடைசிப் பெரு மாறுபாடு அடைந்தபோது, நரகத்திலே சாத்தானும் அவன் பரிசனங்களும் பிரமை நீங்கி யெழுந்தார்கள். அவர்களுள் முதலில் எழுந்தவன் சாத்தான். மற்றவர்கள், அவன் கூவி எழுப்ப எழுந்தவர்கள். சாத்தானால் முதலி லெழுப்பப்பட்டவன், அவனுக் கடுத்த அந்தஸ்தும் அதிகாரமு முடைய பெயல்செபு (Beelzebub) என்ற தூதர்தலைவன். அவ் விரு பெருந்தலைவரும் தாங்கள் வீழ்ந்ததைப் பற்றிப் பேசியபின்பு, சாத்தான் மற்றவர்களை யெழுப்பி, அவர்கள் முன்பு, பிரசங்கஞ் செய்யத் தொடங்கி, திரும்பப் பரமண்டலத்தை யடைய நம்பிக்கை யிருக்கின்றதென்று அவர்களைத் தேற்றி, ஒரு நூதன உலகமும் ஒரு நூதன ஜாதியாரும் சிருட்டிக்கப் படுவதாக ஒரு வதந்தி பரமண்டலத்தில் நிகழ்ந்ததுண்டென்று தெரிவித்து, அந்த வதந்தியின் உண்மை யறியவும் அதன்மேல் தீர்மானிக்க வேண்டியதைத் தீர்மானிக்கவும் சகல தேவதூத தலைவரும் கூடி ஆலோசிக்க வேண்டுமென்று கூறிப் பிரசங்கத்தை முடித்தான்.

12. அந்த ஆலோசனைச்சபை கூடும்படி சாத்தானது அரமனையாகிய சர்வ பைசாச மாளிகை (Pandemonium) நிருமிக்கப்பட்டது. அங்கு நரகத்தலைவ ரெல்லாரும் ஆலோசனை செய்யும்படி கூடினார்கள். அவ்வாறு கூடிய சபையில், சாத்தான் சபாநாயகனாக உயர்ந்த சிங்காதனத்தின் மீது வீற்றிருந்து சபையாரைநோக்கிக் கூறியதாவது:—

"பரமண்டல தேவதைகளே! நாம் நிர்ப்பந்திக்கப்பட்டுத் தாழ்த்துண்டதனால் இங்கு சேர்ந்திருக்கின்றோம். என்றும் அழியாத ஆற்றலுடைய நம்மை இப் பாதலம் சாசுவதமாக வைத்திருத்தல் அசாத்தியமே. ஆகையால் நான் இன்னும் 'பரமண்டலத்தை யிழந்து விட்டோம்' என்று கைவிடவில்லை. நாம் தள்ளுண்ட இத் தாழிடத்திருந்து, நம்முடைய தாழாது உய்ரும் தெய்வீக சுபாவத்தினால் கிளம்பி விண்ணடைந்து, இத்தோல்வியினால் குறைவடையாது [புடமிட்ட தங்கம்போல] முன்னிலும் அதிக மேன்மையாக விளங்கி (முன்னையதோல்வி யநுபவ முடைமையினால்)இரண்டாவதுதோல்வி யடையமாட்டோம். பரமண்டலத்தில் எனக்கு நியாயமாகவிருந்த சுதந்தரத்தினால் நான் தலைமை பெற்றிருந்தேன். பின்பு அத்தலைமை, நீங்கள் என்னை மனஸ்கரித்துத் தலைவனாகத் தெரிந்தெடுத்ததனாலும்,

அத்துடன் ஆலோசனைச் சபையிலும் யுத்தகளத்திலும் நான் காட்டிய சாமர்த்தியத்தினாலும், உறுதிப்படுத்தப்பட்டது. பரமண்டலத்தில் உயர்ந்தோர்களுடைய வாழ்வைநோக்கித் தாழ்ந்தோர் பொறாமையடைவது சுபாவம். இங்கோ, பதவி உயர உயர அதற்குரிய அபாயமும் அதிகரிப்பதனால், உயர்ந்த பதவியுடையானை நோக்கித் தாழ்ந்த பதவியுடையார் பொறாமை அடைதல் இல்லை. முதல் தானத்திலிருக்கிற நான், இடிப்படையாளனான நமது பகைவனுக்கு முதல் இலக்காக நின்று, அவனுடைய தாக்குதலை முதலேற்கக் கடவேனாக இருக்கின்றேன். இவ்வாறான முதல் தானத்தை யார் விரும்புவார்கள்? யார், தங்களுக்கிருக்கிற துன்பங் குறைவா யிருக்கிறதென்று அதிகத் துன்பத்தைத் தேடுவார்கள்? இவ்வாறு இங்கு மேற் பதவியி லுள்ளாரை நோக்கிக் கீழ்ப்பதவியி லுள்ளார் பொறாமையடைதல் இல்லையாகவே, நம்முள் சிறந்த ஐக்கியம உள்ளதாகின்றது. பரமண்டலத்தில் உண்டாகக் கூடாத இந்த ஐக்கியத்தின் உதவியினால் நம்முடைய பூர்வ சுதந்தரத்தை மீட்க முயல்வோமாக. அதற்குப் பகிரங்கமான யுத்தம் ஏற்றதோ, மறைவான சூது ஏற்றதோவென்று நாம் இப்போது பேசி முடிவு செய்தல் வேண்டும். அதற்கு யார் யார் யோசனை சொல்லக் கூடுமோ அவர்கள் சொல்வார்களாக."

13. இவ்வாறு சாத்தான் கூற, அதி மூர்க்கனான மோளொகு (Moloch) எழுந்து "பகிரங்க யுத்தம் செய்வதே தகுதியென்பது என் அபிப்பிராயம். சர்ப்பனைசெய்து கொண்டிருப்பதற்கு இது காலமுமன்று, இடமுமன்று. சிலர் சர்ப்பனைசெய்துகொண்டிருக்கும்போது மற்றவர்களெல்லாம் (யாது செய்வார்கள்? சும்மாவிருந்து) துன்படைந்துகொண்டு தானே யிருக்கவேண்டும். நம்முடைய யாதனைகளை அவ்யாதனை செய்தோன்மேற் பிரயோகித்து இந்த நரக சுவாலைகளைக் கொண்டு பரமண்டலத்தைத் தாக்குவோமாக. சிலர், வானம் நோக்கி யேறுதல் கஷ்டமானதென்று (என் யோசனைக்கு) ஆக்ஷேபனை கூறலாம். அதற்கு என்மறுமொழி, தாழாது கிளம்புதலே நம்முடைய சுபாவ இலக்ஷணம் என்பதே. நாம் கீழே வீழ்ந்தபோது அது நம்முடைய சுபாவத்துக்கு எவ்வளவு விரோதமாகவும் கடினமாகவும் இருந்ததென்று நம்முள் உணராதாருண்டோ? நமது முயற்சியில் சித்தியடையே மானால், முன்னிலும் கொடிய தண்டனைக்குள்ளாக லாமேயென்று சொல்லக்கூடிய வேறோர் ஆக்ஷேபனையு

மூண்டு. அதற்கு விடை, நம்முடைய தற்கால நிலைமையினும் கெட்ட தோன்றும் இருத்தல் கூடாமை யென்பதே: ஏனெனில், இப்போதுள்ள துன்பத்திலும் அதிகத் துன்பம் அடைவதனால், நாம் மரணம் அடையவேண்டும்; அது கூடாதாகில், நாம் என்றும் அழியாத்தன்மையுடையே மென்று அறியும் திருப்தியாவது அடையவேண்டும். [இவ்விரண்டில் எதுவும் தற்கால நிலைமையிற் கெட்டதன்று.] நமக்கு எதிர்க்குஞ் சக்தி யிருக்கின்றதென்று உணர்கின்றோம். எதிர்த்தலினால் வெற்றியடைவோம், அன்றேல் வயிரஞ் சாதித்தவர்களாகவாவது ஆவோம்” என்றான்.

14. இதைக்கேட்டு மிகுந்த போதனாசக்தி யுடையானாயினும் இழிவான பயமும் பொய்ம்மையும் உள்ள பேலியாள் (Belial) கூறிய மறுமொழியாவது:—

“என் அபிப்பிராயம் மோளோகு கூறிய அபிப்பிராயத்தினின்றும் பேதப்படுகின்றது. அதற்குக்காரணம் நமது பகைவன் விஷயத்தில் யான் குறைந்த பகைமையுடையேனா யிருப்பதன்று. அவன் யுத்தத்துக்கு அநுகூலமாயிருக்கின்றன வென்று கூறும் நியாயங்கள் அதற்கெதிரிடையாகச் சமாதானத்துக் கநுகூலமானவைகளென்று எனக்குத் தோன்றுகின்றன. அவன் ‘நாம் சலஞ் சாதிப்போமாக, அதனால் நாசமடையினும் அடைவோமாக’ என்று சொல்கின்றான். இதை நன்றாக யோசிப்போம். முதலில் சலஞ்சாதிப்பது கூடியதன்று. நமது சத்துரு எப்போதும் அதி சாக்கிரதையா யிருப்பதனால் அவன் அறியாதபடி அவனைத் தாக்குதல் சாத்தியமன்று. அவன் என்றும் அழியாத கெடுத்தற்கரிய தன்மையனாக யிருக்கின்றமையினால் நேராக எதிர்ப்பதனால் அவனைவெல்வதும் கூடாது. ஆகவே [பகிரங்க யுத்தத்தில்] நாம் நாசமடைவதே நமது ஒரே நம்பிக்கையாகின்றது. ஆனால், நம்முடைய தற்கால வாழ்வு, துன்பமுடையதாயினும் அதை யிழந்து அதற்கு மாறாக முழுநாசமடைய எவன்தான் விரும்புவான்? அப்படி எவனாவது விரும்பினும், எல்லாம் அறிந்த நம்பகைவன் அவன் விருப்பத்தை நிறைவேற விடுவானோ? நமது யாதனை நித்தியமானதாயின், நாம் அழிந்துவிட இச்சிப்பதும் (அவ்வழிவை யெதிர்பாராது பகிரங்கயுத்தம் செய்வதும்) நியாயமாகும். அது நித்தியமான தென்று நான் நினைக்கவில்லை. நாம் இப்போ தடைந்திருக்கும் நிலைமையினும் கெட்ட நிலைமையை எவ்வாறு அடைவோம் என்று கேட்கிறான். அதற்கு, நமது தற்கால நிலைமை, இதனினும்

தில்லையென்று சொல்லத்தக்க கெட்ட நிலைமையாக இல்லையென்று மறுமொழி கூறுகின்றேன். நாம் வீழ்ந்தபோது (இப்போதுள்ள துன் பத்தினும்) அதிகமான துன்பமடைந்தோம். இனி அதினும் அதிகத் துன்பத்தை யடைதலும் கூடும். ஆதலால் வெளியான போராதல், மறைவான கலகமாதல் செய்யாதிருக்க வேண்டுமென்பதே எனது யோசனை. நம் பகைஞன் எல்லாம் வல்லா னாதலால் வெளியான போர் பயன்படாது: சர்வஞ்ஞனாதலால் மறைவான கலகமும் பயன்படாது. ஆயின் நாம் இந்த இழிந்த அடிமைத் தன்மையில் சாதுக்களாய் அடங்கி யிருக்கவோ வேண்டுமென்று நீங்கள் கேட்பீர்கள். அதற்கு ஆம் என்றே மறுமொழி கூறுகின்றேன். ஏனெனில், நாம் அவ்வாறு செய்யாவிடில் தற்கால கதியினும் துர்க்கதி யடைவோம்; அன்றி அவன் சித்தத்துக்கு நாம் அடங்கி நடக்க வேண்டுமென்றே ஊழின் அமைப்பும் இருக்கிறது. நாம் யுத்தம் செய்யத் தொடங்கியபோது அதில் சம்பவிக்கக்கூடிய தீய முடிவையும் யோசித்திருக்கவேண்டும். நாம் இப்போது தோல்வியடைந்து விட்டபடியால் அத்தோல்வி யின் பயனாகிய தண்டனைக்குள்ளாகோமென்று மறுப்பது வீரர் செய்கையன்று. அன்றியும், நமக்கு விதித்திருக்கிற தண்டனையை நாம் பொறுத்துக்கொண்டால், அதனால் நம்முடைய நிலைமை சீர்ப் படலாம்: அவனுடைய கோபம் குறைந்து அவன் இரங்கலாம்: நாமும் இந்த இடத்தில் வசிக்க வழக்கப்பட்டு விடலாம். காலக்கிர மத்தில் நமக் கநுகூலமான நூதன சம்பவங்களும் நிகழலாம்.''

1௫. பேலியாள் இவ்வாறு பிரசங்கித்த உடனே மம்மோன் (Mammon) எழுந்து பின்வருமாறு பேசலானான்.

''நாம் போர் செய்யப் போதற்கு இரண்டு உத்தேசமுண்டு: ஒன்று பரமண்டலாதிபனைச் சிங்காதனத்தினின்றும் அகற்றுவது, மற்றொன்று நம்முடைய பூர்வ ஸ்தானத்தைத் திரும்ப அடைவது. இவற்றுள், முதலாவது நம்பிக்கையற்றது; அதனால் இரண்டாவதும் அதுவே. [முதலாம் உத்தேசம் நம்பிக்கை யற்றதனால் இரண்டாவது உத்தேசமும் நம்பிக்கை யற்றதென்றபடி.] ஏனெனில், அவன் பரமண் டலத்தினின்றும் எப்போதும் அகலாதிருந்தால், அந்தப் பரமண்டலம் நமக்கும் பரமண்டலமாயிருத்தல் பொருந்தாது. அவன் இரங்குவா னாயினும் அவன் இரக்கத்துக்குப் பாத்திரராக நாம் அடிமைத் தன்மை யோடிருப்பது சகிக்கத் தகாததே. ஆகையால், நமக் கமைந்த விதி

யை நாம் மனப்பூர்வமாக அங்கீகரித்து, நமக்கு நன்மைசெய்யும்படி பிறர் உதவியை நாடாது, நாமே நமக்கு உதவி செய்வோராகி, நமது தற்கால நிலைமை துன்பமானதே யாயினும் அதை யெவ்வளவு சீர்ப்படுத்தக் கூடுமோ அவ்வளவு சீர்ப்படுத்த முயல்வோமாக. பரமண்டல ராசன் அனேக சமயங்களில் தன்னை இருண்டமேகஞ் சூழச்செய்து அதினின்றும் இடிபோன்ற பயங்கரமான கர்ச்சனை செய்வதனால் பரமண்டலம் பயப்படத்தக்கதாய் நரகம்போலாகப் பார்த்திருக்கிறோமன்றோ? அவ்வாறு அவன் நமக்குரிய இருளைத் தன்னதாக்கியது போல நாம் அவனுக்குரிய ஒளியை நம்மதாக்கக் கூடாதா? இப் பாழ் நிலத்தில் தங்கமும் இரத்தினங்களும் புதையுண்டு மறைவாய்க் கிடக்கின்றன. அவற்றினின்றும் சிறந்த நிருமிதங்கள் இழைக்க நமக்குக் கைத்தொழிற் சாதுரியமும் இருக்கிறது. இவற்றினும் விசேடமாகப் பரமண்டலத்தில் யாதிருக்கிறது? இவ் யாதனைகள், நாம் நெடுங்காலம் அனுபவிப்பதனால் நமக்கு வழக்கமானவைகளாய்த் துன்பஞ் செய்யாதவைக ளாய்விடும். எல்லாவற்றையும் சேர்த்தாலோசிக்குமிடத்தில், போரைப்பற்றிய எண்ணம் யாவற்றையும் கைவிட்டு, அமைதியான வாழ்க்கையை நாடவேண்டுமென்பது சிறப்புடைத்தன்றது.''

16. இதைக் கேட்ட தூதர்கள் முன் பரமண்டலத்தில் நிகழ்ந்த யுத்தத்தில் தங்களை உக்கிரமாகத் தாக்கிய, இன்னும் தங்கள் நெஞ்சை விட்டகலாத, இடிகளின் அச்சத்தினாலும் பரமண்டல ராச்சியத்துக்கெதிரிடையாக பாதாளராச்சியம் ஸ்தாபிக்கவேண்டுமென்று உண்டாகிய ஆசையினாலும் சமாதானமே நல்லதென்று கருதுவாராயினர்கள். இதைச் சாத்தானுக் கடுத்த உயர்ந்த ஆதனத்திலிருந்த பெயல்செபு நோக்கி எழுந்து,

''ஓ சிங்காதனாதிபதிகளே! தேவராசரே! இனித் தேவராசரென்று அழைப்பதை நிறுத்திவிட வேண்டும் போலும். நரகத்தில் ராச்சியம் ஸ்தாபிக்கக் கருதுவதனால் நரக ராஜர் என்னும் நாமந்தானே இனித் தகுதியானதாகும். மெய்யாகவே, நீங்கள் இந்த நரகத்தில் தங்கி இங்கு ஓர் இராச்சியத்தை ஸ்தாபிக்கக் கருதுகின்றீர்களா? நமது பகைவன் இவ்விடத்தைச் சிறைச்சாலையாக நியமித்திருக்கிறானேயன்றி நாம் சௌக்கியமாக வாழ்தற்குரிய இடமாகச் சமைக்கவில்லையென்றும் அவனுடைய இராச்சியம் பரமண்டலத்

தெல்லையில் நின்றுவிடாது இங்கும் வியாபிக்குமென்றும் தெரிவீர்களாக. சண்டையைப்பற்றியாவது சமாதானத்தைப்பற்றியாவது யோசனை செய்வதில் பிரயோசனமில்லை. சண்டையிலோ, திரும்பப் போர்செய்யத்தக்க சக்தி இனியென்றும் உண்டாகாதபடி தோல்வியடைந்து விட்டோம். சமாதானமோ, அடிமைகளோடு அவன் செய்யக்கருதான், சத்துருவோடு நாம் செய்யச் சம்மதியோம். அன்றிக் கைவசப்படுத்தக்கூடாத பரமண்டலத்தைத் தாக்கவேண்டிய அவசியமு மில்லை. வேறெளிதாகச் செய்யத்தக்க காரியமொன்றிருக்கிறது. ஒரு புதிய உலகத்தையும் ஓர் புதிய சாதியாரையும் படைப்பதாகப் பரமண்டலத்தில் ஓர் வதந்தி நிகழ்ந்த துண்டு. அவ் வதந்தியின்படியே அவ்வுலகம் உள்ளதாகியிருந்தால், அதையும் அதற்கிறைவராகிய அச் சாதியாரையும் கெடுத்து அவர்களை நரகத்துக்கு இழுக்க உபாயங்கள் அமையலாமே? சருவ வல்லவனுடைய நூதன சிருட்டியை அதன் துவக்கத்திலேயே அவ்வாறு கெடுப்பது அவன் மனதை மிகுதியாக வருத்தக்கூடிய சலஞ்சாதிப்பாகாதா? அது பகிரங்கமாக யுத்தஞ்செய்வதிலும் எளியதன்றோ? அவ்வித செயத்தை ஆரம்பமாகவும் ஆதாரமாகவுங்கொண்டு அதற்குமேற் செயமடையாவிட்டாலும் நமது தற்கால நிலைமையைச் சீர்ப்படுத்தி நரகத்தை யுள்ளிட்டதும் அதற்கு அதிக விஸ்தாரமுடையதுமான இராச்சியத்தைச் சுவாதீனப்படுத்திக் கொள்ளலாமே? இம்முயற்சி தக்கதோ அன்றோ வென்று கூறுவீர்களாக." என்று தன் பிரசங்கத்தை இடையே நிறுத்திச் சபையாரது அபிப்பிராயத்தை எதிர்பார்த்து நின்றான்.

17. அவர்களெல்லாரும் ஒருமனப்பட்டு இப்போது கூறிய முயற்சியே தக்கதென்று ஏற்றுக்கொண்டார்கள். உடனே பெயல்செபு அவர்களைநோக்கி "நீங்கள் செய்த இந்தத் தீர்மானம் உங்களுடைய சிறந்த தகுதிக் கேற்றதே. ஆயின் இத்தீர்மானத்தை நிறைவேற்ற இன்னும் ஒரு விஷயம் தீர்மானமாக வேண்டியதாக விருக்கிறது. அது இந்தவேலையில் யாரை நியோகித் தனுப்பலா மென்பதே. வழியோ கடினமானது: தடைகளோ அனேகம்: காரியமும் மிகமுக்கியமானது. நமது கடைசிப் பெருநம்பிக்கை கைகூடுமோ கைகூடாதோ என்பது நாம் தக்கவனைத் தெரிந்தெடுப்பதைச் சார்ந்ததாயிருக்கின்றது." என்று சொல்லி உட்கார்ந்தான்.

18. தூதர்களெல்லாம் இதைக்கேட்டு ஸ்தம்பம்போல மௌனமாய்க் குறித்த காரியசாதனையில் நேரிடக்கூடிய பயங்கரமான அபாயங்களைச் சிந்தித்துக்கொண்டிருந்தார்கள். அத்தூதருட் பெருந் தலைவருட் சிறந்தவர்கள் யாரும் தனியாக வாயினும் துணையோ டாயினும் அப்புதிய உலகத்தைத் தேடிச் செல்லத் துணிய வில்லை. இவ்வாறு சிறிது போது செல்லக் கடைசியாகச் சாத்தானே ராஜகெம்பீரத்துடன் எழுந்து தான் தனியே துணையின்றி மூலப்பிரகிருதி வழியாக மேலே செல்லும் அபாயமான பிரயாணஞ் செய்து, அப்புதிய உலகத்தைத் தேடிக் கண்டுபிடிக்கிறேனென்று சொல்ல, அவனுக்கு அவர்களெல்லாரும் பயபத்தியோடு வணங்கி மிக்க நன்றிபாராட்டிப் புகழ்மொழி வழங்க, அவன்சொல்லியவாறே துணிந்து புறப்பட்டான்.

19. புறப்பட்டவன் நரகவாயிலைச் சமீபித்து அதைக் காத்துக் கொண்டிருந்த பயங்கர விரூபிகளாகிய பாவ மரணங்களால் அங்கே சிறிதுபோது தடைப்பட்டு நின்றான்; பாவமரணமென்பார் யாவர்? அவர் வரலாறு யாதோ? என்றால், கூறுவோம். சாத்தான் பரலோகத்தில் கடவுளுக்கு விரோதமாகக் கலகஞ் செய்யக்கொண்ட கருத்தே பாவமாக, அக்கருத்துற்பவமான அவன் மனமே பாவம் கருவாகிய கர்ப்ப ஸ்தானமாக, அக்கருத்து வளர்ந்து பூரணமாய் வெளிப்பட்டதே பாவம் திரண்டு உருக்கொண்டு பெண்ணாகப் பிறந்ததாயிற்று. சாத்தான் தன் மனத்திற்றோன்றிய தீக்கருத்தை இனியதென்று பாராட்டிக் கைக்கொண்டதனால் தீயபயன் உண்டாகத் துவங்கியதாக, அவன் பாவ மகளை மோகித்துத் தழுவியதனால் மரணமகன் கருவானான். அதன்பின், துன்மனசுத் தூதர் பரமண்டலத்தினின்று துரத்துண்டு நரகத்தில் வீழ்த்துண்டபோது, பாவமகளும் கூடவே அங்கு வீழ்த்தப்பட்டாள். அப்போது நரக கபாடங்களின் திறவுகோல் அவள் கைவசம் ஒப்புவிக்கப்பட்டு அவ்வாயிலைக் காக்கும்படி நியமிக்கப்பட்டாள். பின்பு, கருவாயிருந்த மரணமகன் வலாற்காரமாகத் தாயின் குடல்கிழித்து, எய்யப்பட்டார் மாளாது மீளாத காலபாணத்தைக் கையேந்தி வெளிப்பட்டான். அவன், பாவ மகள் தடையை நிராகரித்து நரகவாயிலைக் கடக்க முயல்வோரைத் தடுக்கத் துணையாய் நின்றான். இருவரும் நரகவாயிலின் இருபக்கத்தும் காவலாக இருந்தார்கள். (செய்யும் போது இனிமையாயிருக்கும் பாவம், செய்தபின் வெறுப்பாவதை

விளக்கி) பிறந்தபோது அழகிய வடிவுடையவளாயிருந்த பாவமகள், இப்போது அருவருக்கப்படுமாறு உருமாறி யிருந்தாள்.

20. சாத்தான் நரகவாயிலைச் சமீபிக்கவே, மரணம் எதிர் சென்று தடுக்க, இருவருக்கும் யுத்தம் நிகழத் துவங்கியது. அப்போது பாவமகள், அவ் விருவ ரிடையே விரைந்து சென்று நின்று, சாத்தானை நோக்கி "ஏ பிதாவே! யாது செய்யக் கருதினை? இவன் உன் ஒரே குமாரனன்றோ?" என்று கூறி, மரணத்தைப் பார்த்து "ஆ குமாரா! உனது கொல்லாது நில்லாத பாணத்தை உன் தகப்பன் மீதே பிரயோகிக்கக் கருதினாயே" என்று சொல்லிப் போர் நிகழாது தடுக்க, சாத்தான் அவள் உருமாறி யிருந்ததனால் அவளை யறியானாய்த் திகைக்க, அவள் பூர்வ வரலாறு முழுதுந் தெரிவிக்கத் தெளிந்து, அவ்விருவர் பாலும் அன்புடையான் போல நடித்து, அவளுக்குத் தான் செல்லுங் காரியத்தை அறிவித்து, அது சித்தியானால் அதனால் அடையும் பயனை மூவரும் பகுந் தனுபவிக்கலாமென்று கூற, அவ்விருவரும் மிகவும் களிப்புடைந்தார்கள். உடனே, தன் நன்மைக்கு விரோதமாக நியமிக்கப்பட்டுள்ள காவல் வேலையைத் தான் செய்யக் கடமைப்பட்டவள் அல்லள் என்று கூறிப் பாவமகள், மற்றியாவராலும் திறக்க லாகலாத நரக கபாடங்களைத் தன் கையிலிருந்த திறவுகோலால் திறந்துவிட்டாள்.

21. திரும்ப என்றென்றும் அடையாதவைகளாய் அக்கதவுகள் திறக்கப்பட, சாத்தான் தலைக்குமேலிருந்த பயங்கரமான மூலப்பிரகிருதியினுட் பிரவேசித்தான். மேல்நோக்கிச் செல்லும் அவன் பிரயாணம் கஷ்டமாயிருந்தது. அவன், காலையும் தலையையும் கையையும் சிறகையும் தொழிற்படுத்தி வழிகடப்பானாகி, பலதிண்ணமுடைய குழம்பிய சேறுபோன்ற இடங்களூடு எறியும் நீந்தியும் நீரூடு நடப்பதுபோல் நடந்தும் காற்றூடு பறப்பதுபோற் பறந்தும், ஒரு சமயத்தில் ஈயக்குண்டு (புதைமணலூடு இறங்குவது) போலப் பல்லாயிர யோசனை கீழேவிழுந்தும், மற்றொரு சமயத்தில் சூறை வேகத்தாலாயினும் வெடிக்கும் இயல்புடைய பொருள்கள் வெடிக்கும் விசையினாலாயினும் தூக்கப்பட்டு மேலே சென்றும், கடைசியாக, பிரயாணமத்தியில், உருவத்தை அதிட்டித்து மூலப்பிரகிருதியும் (Chaos) ஆதிப்பேரிருளும் (Old Night) வீற்றிருக்கும் மத்திய சிங்காதனத்துக்கு வந்து சேர்ந்தான்.

இங்கே, தான் தேடிச் சென்ற புத்துலகம் உள்ளபடியே சிருட்டிக்கப் பட்டிருக்கிறதென்று நிச்சயமாக அறிந்தான். அதனால் தேற்றம் அடைந்து வழிகாட்டப் பெற்று இன்னம் மிகுந்துள்ள மூலப்பிர கிருதியூடு மேல் நோக்கிச் செல்வானாகித் திரும்பவும் கஷ்டத்தோடு பிரயாணஞ் செய்து கடைசியாக மூலப்பிரகிருதியின் மேற்பாகத் தை அடைந்தான். அங்கே அவன் எளிதாகப் பறந்துலாவும்படி மூலப்பிரகிருதியின் பொருள்கள் இலேசானவைகளாகத் தோன்றின. அன்றி மேலிருந்து மங்கலான ஒளி தோன்றத் தொடங்கியது. தனக் குப் புதிதாகத் தோன்றலாகும் காட்சியைச் சாவகாசமாகப் பார்க்கும் படி அவன் அந்த இடத்தில் சிறிதுபோது [தண்ணீரில் இடம் பெய ராது நீந்தி நிற்பார்போல] இடம் பெயராது பறந்த வண்ணமாக நின்றான். அப்போது அவன் கண்டகாட்சி என்ன காட்சி! ஒரு காலத்தில் தனக்குச் சுதேச வாசஸ்தலமாயிருந்ததும், பன்னிற மணிகளாலமைந்த கோபுரங்களும் நீல மணிகளாலங்கரிக்கப் பெற்ற கொத்தளங்களும் உடையதும், வட்டமானதோ சதுரமானதோ என்று தீர்மானிக்கப்படாததுமான மிகு விஸ்தாரமுடைய பரமண்டலம் மிக நீண்ட தூரத்தே தோன்றியது. அதற்கு அதிசமீபத்தே இந்த லம்பமான உலகமானது ஒரு தங்கச் சங்கிலியால் தொடுப்புண்டு தூங்கிப் பரிமாணத்தில் சந்திரன் அருகுள்ள மிகச்சிறிய நட்சத்திரம் போ லிருந்தது. இங்கே உலக மென்றது பூமியை யுள்ளிட்ட அண் டத்தை.

22. இந்த அண்டத்தை நோக்கிப் பறந்து கொண்டிருந்த சாத் தான் கடைசியாக இந்த அண்டத்தின், ஒளி ஊடுருவாத் தன்மை யுடைய சுவரின் வெளிப்புறத்தில் இறங்கினான். அவன் அதைச் சமீ பிக்கவே, முன், கேவலம், ஒரு நட்சத்திரம்போலத் தோன்றின அண் டம் விஸ்தாரமான கோளமென்று தெரியப்பட்டது. இறங்கினவன் அச்சுவர்மேல் நடக்கத் தொடங்கியபோது இந்தக் கோளம், பார் வைக்கு எல்லையற்ற கட்டித் தரையுடைய ஒரு பெருங்கண்டமாயும் நட்சத்திரமின்றி யிருண்டதாயும், கொந்தளித் தாரவாரிக்கும் மூலப் பிரகிருதியினால் மேலும் கீழும் எத்திசையிலும் மோதப்பட்டுக் கொண் டும் இருந்தது. இந்த அண்டச் சுவரின் உச்சிமூலையில் மட்டும், பர மண்டலச் சுவரினின்று பிரதிபலித்த ஒளி சிறிது காணப்பட்டது. சாத்தான் முதலில் இவ்வண்டச் சுவரில் எங்கிறங்கினா னாயினும் கடைசியாக உச்சி மூலையை அடைந்தபின் தான், அவன் கருதிவந்த

காரிய நிறைவேற்றம் ஆரம்பிக்கக் கூடியதாயிருந்தது. எப்படியெனில்,இவ் வுச்சிமுனையிலே தான், இவவண்டத்தின் உள்ளே பிரவேசிக்கும் துவாரம் இருந்தது. அந்த முனையை ஒழிந்த சுவர்ப்புற முழுதும் கடினமானதாயும்,[விளக்கொளி ஊடுருவி வெளியே தோன்றச் செய்யும் விளக்குகளின் கண்ணாடிக் கோளங்கள் போல] அண்டத்தகத்தே உள்ள ஒளியை வெளியே காட்டுதல் இல்லாததாயும்·பரமண்டலத்தின் ஒளி பிரதிப்லிப்பதனாலாகிய ஒளி யன்றி வேறு ஒளி சிறிது மில்லாததாயும் உள்ளது. பரமண்டல வாசலினின்றும் இந்த அண்டத்துள் இறங்கவும், இங்கிருந் தங்கேறவும், உபயோகமாக இருந்த, இன்ன விதமாகச் சமைக்கப்பட்டது, இன்ன தன்மையது என்றறியக்கூடாத படிக்கட்டிலிருந்து வீசப்பட்ட ஒளியினால் அந்த அண்டத் துச்சிமுனைக்குச் செல்லக் கருத்துண்டாகிச் சென்றான். அந்தச் சோபானம் சில சமயங்களில் பரமண்டலததினுள்ளே இழுக்கப்பட்டுத் தோன்றாது மறைந்திருப்பதுண்டு. ஆனால் இந்தச் சமயத்தில் அது இறக்கப்பட்டிருந்ததனால் அதன் கீழ்ப்படியில் நின்று தனக்கு நேர் கீழாகவிருந்த மேற்கூறிய துவாரவழியாக இந்த அண்டத்தின் உள்ளே, மேலும் கீழும் சுற்றும் நோக்கினான். பூமி வெகுதூரத்திலிருந்ததனால் அது அவனுக்குத் தோன்றவில்லை.

23. பின்பு சாத்தான் இந்த அண்டத்தை நோக்கிப் பறந்தான். அவனைச் சிங்காதனத்தின்மேலிருந்து கடவுள்பார்த்து, தமது வலப்புறத்தே சரியாதனத்திருந்த தங்குமாரருக்குக் காட்டி, அவன் மனிதனைக் கெடுத்து விடுவதில் சித்தியடைவானென்று முன்னறிவித்துப் பின் வருமாறுசொன்னார். "யார் குற்றத்தினால் மனிதன் கெடுகின்றான்? தன் குற்றத்தினாற்றான்.அவன் பெறக்கூடிய சகலமும் யான் கொடுத்திருந்தும் நன்றி மறக்கின்றான். யான் அவனை நீதிமானாகவும் நிலைகெடாதிருக்கப் போதிய சத்தியுடையானாகவும் படைத்தேன். ஆனால் அவனாக நிலையினின்று வீழ்வதைத் தடுக்காமல் சுவாதீனமுடையவனாக அவனைப் படைத்தேன். அப்படியே நிலையினின்றவர்களும் நிலை வழுவியவர்களுமாகிய தேவதூதர்களையும் சிருட்டித்தேன். நிலையினின்ற தூதர்கள் சுவாதீனராகவே நின்றார்கள்: நிலையினின்று தவறியவர்களும் சுவாதீனராகவே தவறினார்கள். அவர்கள் சுவாதீனராகப் படைக்கப்படாமல், அவர்கள் செய்ய விரும்புவதைச் செய்யாமல், செய்யாதிருக்கக் கூடாததைச் செய்வார்களானால், தங்கள் உண்மைப் பத்தியும் மாறாத அன்பும் உடை

யவர்களென்று அவர்கள் எவ்வாறு ரூபித்தல் கூடும். பகுத்தறியும் அறிவும் அறிந்ததைச் சிந்தித்துத் துணியும் சித்தமும், சுவாதீனமில்லாமையால், செயலற்றவைகளாகப் பெற்றவர்கள், ஆவசியகத்துக்குத் தொண்டு செய்வோரே யன்றி எனக்குத் தொண்டு செய்வோராகார். அத்தன்மையோர்களுடைய வணக்கம் அவர்களுக்கு என்ன புகழைக் கொடுக்கக் கூடியது, எனக்கெப்படிப் பிரீதியாகும்? நான் முன்னறியாவிடினும் நிச்சயமாக நிகழ்வதாகிய அவர்கள் குற்றத்தை நான் முன்னறிவதனால் அம்முன்னறிவு அக்குற்றத்துக்கு ஏதுவாக வாவது உதவியாக வாவதில்லை. ஊழ் காரணமென்றாயினும், மாறக் கூடாத வண்ணமாக யான் முன்னறிந்தது காரணமென்றாயினும், கூறச் சிறிதும் இடமின்றி, அவர்கள் நிர்மாணிக்கும் எல்லாவற்றுக்கும் அவர்கள் தெரிந்தெடுத்துச் செய்யும் யாவற்றுக்கும் அவர்களே கர்த்தர்களாக விருக்கிறார்கள். அவர்கள் தங்கள் வீழ்ச்சியைத் தாங்களே திர்மாணித்துத் தங்கள் நிலையினின்றும் வீழ்ந்தாராவர். முதல் வீழ்ந்தவர்கள் [ஆகிய தூதர்கள்] வேறு கெடுப்பாரின்றித் தாங்களே தங்களை விரும்பபடி தூண்டித் தாங்களே தங்களைக் கெடுத்து வீழ்ந்தார்கள். மனிதன் முதல் வீழ்ந்தவர்கள் வஞ்சனையினால் வீழ்கின்றான். ஆகையால் மனிதன் அருள் பெறுவான். மற்றவர்கள் பெறமாட்டார்கள்." இவ்வாறு, 'நிலை வழுவி வீழ்வது கூடாமையாம்படி என் கடவுள் மனிதனைப் படைத்திருக்கக் கூடாது?' என்போர் சந்தேகத்தை நீக்கியதன்றி, 'நிலைவழுவவும் வழுவாதிருக்கவும் சுயாதீனனாகப் படைக்கப்படும் மனிதன் நிலைவழுவவே செய்வானென்று தெரிந்திருந்தும் கடவுள் என் அவனைச் சிருட்டித்தார்?' என்போரும் திருத்தியுறும்படி அவர் தம்முடைய நீதியும் ஞானமும் எவ்வித தோஷாரோபத்துக்கும் இடமற்றவைகளென்பது விளங்கக் கூறினார். மனிதனுக்கு அருள் செய்வதாகக் கூறியதற்காக, குமாரர் பிதாவைப் புகழ்ந்தார். ஆனால் கடவுள், தேவ நீதி திருத்தியடையத்தக்க பிராயச்சித்தம் நடந்தாலன்றி மனிதனுக்கு அருள் செய்தல் முடியாதென்றும், கடவுட்டன்மை யடைய விரும்பித் தேவனது தெய்வீக மகத்தவத்துக்கு விரோதமாக மனிதன் அபராதம் செய்தவனாகியதனால், அவனுடைய குற்றத்துக்குப் போதிய பரிகாரஞ் செய்யத்தக்க யாராயினும் அவன் அடையவேண்டிய தண்டனைக்குள்ளானாலன்றி, அவன் அவனுடைய சகல சந்ததியாரோடும் மரணத்துக் கொப்புவிக்கப்பட்டுச் சாகக்கடவன் என்றும் கூறியதைக்கேட்டுத்

தேவ சந்நிதானத்தினின்றவர்களுள் அத்தண்டனை யடைந்து மனிதரைமீட்கத் துணிந்தவர்கள் ஒருவருமின்றி யெல்லாரும் அஞ்சி நிற்கத் தேவகுமாரன் மனிதரை மீட்கத் தாமே மனஸ்கரித்துப் பிணைப்பட்டார். தேவபிதா அவரைப் பிணையாக அங்கீகரித்து அவருடைய அவதாரம் நிகழ்வதாக என்று கற்பித்து அவர் பரலோகத்திலும் பூலோகத்திலும் உள்ள எல்லாரினுஞ் சிறந்தவரென்று பிரசித்தஞ் செய்து சகல தேவதூதர்களும் அவரைவணங்கும்படி ஆஞ்ஞாபித்தார். அவர்கள் வணங்கி ஸ்தோத்திர கீதங்கள் பாடிப் பிதாவையும் குமாரரையும் வந்தித்துக் கொண்டாடினார்கள்.

24. இவ்வண்டத்தை நோக்கிப் பறந்துவந்த சாத்தான், மற்றெல்லாக் கிரகங்களும் தன்னெதிர் மழுங்கத் தானே இவ்வண்டத்துக்குச் சிரேட்டாதிபதி யென்று மதிக்கும்படி விளங்கும் சூரியனது மண்டலத்தில் இறங்கினான். அங்கே காவலாளனாக விருந்த சோதிமான் (Uriel—The Light of God) என்னும் தேவதூதனைக்கண்டு, தன் சுய நிலையை அவன் அறியாதபடி ஒரு சாமானிய சன்மனசுத் தூதன்போல வடிவெடுத்து, நூதனமாகச் சிருட்டிக்கப்பட்டுள்ள உலகத்தையும் அதில் கடவுளாற் குடியேற்றப்பட்டிருக்கிற மனிதனையும் பார்க்க ஆவல்கொண்டு பரமண்டலத்திலிருந்து வந்ததாக நடித்து அச்சோதிமானிடம் பூமண்டலத்துக்குச் செல்லும் வழியைத் தெரிந்துகொண்டு, சூரிய மண்டலத்தைவிட்டுப் பூமியைநோக்கிப் பறந்து சென்று, அங்கே ஆதாமும் ஏவாளும் வாழ்கின்ற பூலோக சுவர்க்கமான சிங்காரவனத்தைத் தன்னிடத்தேயுடைய ஏதேன் தேசத்தருகே நேபேத் (Nephates) தென்னும் மலையுச்சிமேல் மத்தியானநேரத்தில் இறங்கினான்.

25. 'தான் குடிகொண்டும் தன்னிற்குடிகொண்டும்' உள்ள நரகத்தை நீங்கியும் நீங்காதான சாத்தான், ஏதேனைப் பார்க்கக்கூடியதும், கடவுளுக்கும் மனிதனுக்கும் விரோதமாகத் தான் தனியே சாதிக்கும்படி மேற்கொண்ட துணிவான காரியத்தை எத்தனிக்கவேண்டிய இடத்துக்குச் சமீபித்தது மான தானத்தில் இருந்தபோது, அவன் மனத்தினுள்ளே அனேக சந்தேகங்களும் பயம், பொறாமை, நம்பிக்கையின்மையினால் உண்டாகும் ஏக்கம்ஆகிய மனோவிகாரங்களும் நிகழ்ந்தன. கடைசியாகத் தீங்குசெய்வதைக் கடைப்பிடித்துப் பூலோக சுவர்க்கமாகிய சிங்காரவனத்தை நோக்கிச்சென்று அதன்வாசல்வழியே செல்லாது அதன் வேலிகள் மேலே தாவி உள்ளேகுதித்து, மத்தியில் நின்ற

ஜீவ விருக்ஷத்தின் மேல் சூழவும் பார்க்கும்படி ஒரு பறவை வடிவ மாகி உட்கார்ந்தான். பின்பு முதல்முறையாக, சாயந்தர சமயத்தில், ஆதாமையும் ஏவாளையும் பார்க்கவே, அவர்களுடைய மனோகரமான வடிவத்தையும் சந்தோஷமான வாழ்க்கையையும்பற்றி ஆச்சரிய மடைந்து, நிரபராதிகளாகிய அவர்களைக் கெடுக்க நினைவதில் வருத்த முற்றானாயினும், தன்னோடு அழிவடைந்துள்ள தேவதூதர்களின் பொது நன்மையின் பொருட்டு அவர்களைக் கெடுத்த லாவசியக மென்று கருதி, அவர்களை நிர்ப்பாக்கியராக்க உறுதியான தீர்மானஞ் செய்தான். அவ்விருவரும் தங்களுக்குக் கடவுளால் கிடைத்துள்ள அளவிறந்த நன்மைகளையும் எடுத்துக்கூறி, அந் நன்மைகளைத் தாங்கள் இழவாதிருப்பதற்கு வெகு லகுவான ஏக நிபந்தனை ஏற்படுத்தியிருக்கும் பெருங்கருணையைப் புகழ்ந்து நன்றி பாராட்டிப் பேசிக்கொண்டிருந்த சம்பாஷணையை அவர்களறியாமல் கேட்டு அச்சம்பாஷணையினால், அறிவு விருட்சத்தின் கனியைத் தின்னக்கூடாதென்றும் தின்றால் மரணத்துக்குள்ளாவது நிச்சயமென்றும் கடவுள் அவர்களுக்கு விதித்திருப்பதையறிந்து அவர்களை அக்கட்டளையைக் கடக்கும்படி வஞ்சனையால் தூண்டி மோசப்படுத்தக் கருதினான். மற்ற வகைகளால் அவர்கள் நிலையை இன்னும் அதிகமாகத் தெரிந்து கொள்ளக்கருதி, அவர்களைச் சிறிது நேரம் விட்டுப் போயினான். இதன் மத்தியில், சோதிமான் சாயங்காலம் ஓர் சூரியகிரணத்தின் வழியேயிறங்கிப் பூலோகசுவர்க்க காவலாளனாகிய காபிரீல் (Gabriel) என்னும் தேவதூத தலைவனைக் கண்டு, நரகத்தினின்றும் தப்பிய ஓர் துன்மனசுத் தூதன் சன்மனசுத் தூதன்போல வடிவங்கொண்டு மத்தியானம் சூரியமண்டல வழியாகச் சுவர்க்கத்துக்கு வந்தானென்றும் அவன் துன்மனசுத் தூதனென்பது அவன் நேபேத்து (Nephates) மலையிலிருந்தபோது அவன் நெஞ்சில் நிகழ்ந்த கெட்ட எண்ணங்கள் அவன் முகக்குறியாற் றோன்றியதனால் அறியப்பட்டதென்றும் சொன்னான். மறுநாட் காலைக்குள் அத்தீய தூதனைக் கண்டு பிடிப்பதாக காபிரீல் வாக்களித்தான். இராத்திரி வரவே, ஆதாமும் ஏவாளும் இளைப்பாறும்படி துயிலிடஞ் செல்லவேண்டுமென்று பேசி அங்கே சென்றார்கள். காபிரீல, சுவர்க்கத்தைச் சுற்றிச் சென்று காக்கும்படி இராவிற்காப்போராகிய தூதர்கணத்தையழைத்து, அவர்களுள் பல்சாலிகளாகிய இருவரைச் சாத்தான், நித்திரைசெய்யும் ஆதாம் அல்லது ஏவாளுக்கு, யாதயினும் தீங்குசெய்யாதபடி, ஆதா

முடைய பூஞ்சோலையைக் காக்கும்படி நியமித்தான். அவர்கள், ஏவாளுடைய காதருகே சாத்தான் ஒரு தேரைபோலக் குந்தியிருந்து அவளுடைய சொப்பனத்தில் அவளுக்குத் துர்ப்போதனை செய்வதைக்கண்டு, ஈட்டி முனையினால் அவனைத் தொடவே, ஒரு தீப் பொறி பட்ட வெடிமருந்துக் குவியல்போல, திடீரென்று தன் சுயரூபத்தோடு குதித்தெழுந்தான். அவன் காபிரீலிடம் போக மனமில்லாதவனாயிருந்தும் அவர்கள் அவனைக் கைதியாக்கிக் காபிரீல் முன்பு கொண்டுவந்து விட்டார்கள். காபிரீல் கேட்ட கேள்விகளுக்கு இகழ்ச்சியாக மறுமொழிகூறி எதிர்க்க ஆயத்தப்பட்டான். அப்போது வானத்திற்றோன்றிய, தனக்கு அபஜெயவிளைவைக் காட்டிய அடையாளத்தைக்கண்டு சுவர்க்கத்தைவிட்டு விரைவா யகன்றான். அவனோடு இருளும் அகனறு விடியற்காலம் வந்தது.

26. அவன்போனபின் ஆதாம் அதிகாலையில் எழுந்து ஏவாள் கூந்தல் குலைந்து கண்ணுஞ்சிவந்து இரவிற் சுகமான நித்திரையில்லாத அடையாளங்களோடு படுத்திருப்பதைக் கண்டு எழுப்ப, அவள் "என்னை ஒருவன், சென்ற இராத்திரி உன்குரலோடு கூவி அழைத்தான். நான் எழுந்து நோக்க உன்னைக் காணவில்லை. ஆயினும் உன் குரல் கேட்ட திசையை நோக்கி உன்னைத் தேடிச்சென்றேன். சென்று, அறிவு விருட்சமாகிய விலக்குமரத்தைச் சமீபிக்கலானேன். அது பகலிற் றோன்றுவதினும் அதிக அழகுடையதாகத் தோன்றியது. நான் ஆச்சரியப்பட்டு அம்மரத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும் போது, அதனருகே ஒரு தேவதூதன் நிற்கக்கண்டேன். அவனும் அந்த அறிவு விருட்சத்தை உற்றுநோக்கி, 'மிதமின்றிப் பழுத்துள்ள அழகிய விருசட்சமே! தேவராயினும் மனிதராயினும் உன் சுமையைக் கழித்து உன் கனியை அருந்துவாரில்லையோ? அறிவு அவ்வளவு இகழ்ச்சியானதா? மனிதருண்ணுதபடி கடவுள் உன்னை விலக்கியதற்குக் காரணம் பொறாமையோ, வேறெதுவோ? விலக்குவோர் விலக்குக, நீ உன் கிளைக்கை நீட்டிக் கொடுக்குங் கனிகளை நான் கைக்கொள்ளாதபடி எவர் தடுப்பினும் தடைப்படேன். உன் கனிகள் தின்னக்கூடாதாயின், எதற்காக நீ இங்கு வைக்கப்பட்டிருக்கிறாய்?' என்று சொல்லி அவனுடைய அஞ்சாத கைகளால் சில கனிகளைப் பிடுங்கித் தின்று மிகுந்த சந்தோஷமடைந்தான். பின்பு 'ஓ தெய்வீக கனியே! இனிமையே நீயாயிருக்கிறாய். நீ தேவர்கள் மாத்திரம் உண்ணத்தக்காயென்று, மனிதர்கள் தின்னுதபடி விலக்கப்பட்

டிருக்கின்றாய் போலும். ஆயினும் மனிதனைத் தேவராக்கும் சத்தி யுடைத்தாயிருக்கின்றாய். அறிவு பிறருக்குக் கொடுக்கப்படுதலினால் விருத்தியடைகின்றது. கொடுப்போன் குறைவடையாமல் அதிக கவு ரவமடைகின்றான். ஹே! தெய்வீக அழகுபடைத்த ஏவாளே! பாக்கிய வதி! நீயும் இதை அருந்துவாயாக. நீ இப்போதே பாக்கியமுடையா ளாயினும் அதிக பாக்கிய முடையவளாவாய். இதைத்தின்று இனித் தேவருள் ஒரு தேவியாக வாழ்வாயாக' என்று அக்கனியை என் வாயருகு கொண்டுவந்தான். அதன் நறுமணத்தினால் அதை உருசிபார்க்க அடங்காத ஆவலுண்டாகித் தின்றேன். உடனே கிளம்பி அவனோடு மேகங்களின் மத்தியில் பறந்து இந்தப் பூமண்ட லம் விஸ்தாரமாகப் பரந்திருப்பதையும் மற்றக் காட்சிகளையும் கண்டு ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கும்போது என்னோடிருந்தவன் திடீ ரென்று போய்விட்டான். நான் கீழேயிறங்கி நித்திரை செய்வாளா னேன்; ஆ! நான் விழித்தபோது இவ்வளவும் சொப்பனமே யென்று தெரியவே எவ்வளவு சந்தோஷமுண்டாயிற்று." என்று ஆதாமுக்குச் சொன்னாள். அக்கனவைக்கேட்டு ஆதாம், மனத் தில் வருத்தமுற்றானாயினும் "தேவர் மனத்திலும் மனிதர் மனத் திலும் தீய எண்ணங்கள் அங்கீகரிக்கப்படுதலின்றி வந்துபோகலாம். அப்படிவந்து போகின்றவைகள் யாதொரு களங்கமாயினும் குற்ற மாயினும் பின்தங்காமல் அகல்கின்றன; அதனால், நீ கனவாகக் கண்டே வெறுக்கும் குற்றத்தை விழித்திருக்கும்போது ஒருக்காலும் செய்யச் சம்மதியாய் என்று, என்மனத்தில், நம்பிக்கையுண்டாகின் றது" என்றுசொல்லி அவளைத்தேற்றினான்.

27. பின்பு அவர்கள் வழக்கமான பயிர்வேலை செய்யும்படி தாங் கள் படுத்திருந்த பன்னசாலையை விட்டு வெளிப்பட்டு அப்பன்ன சாலை வாயிலில் காலைச்செபஞ் செய்து முடித்தார்கள். அப்பால் இனிய பனியுடும் மலர்ந்த மலர்களுடும் சென்று, தங்கள் வேலைத்தல மடைந்து, மரங்களில் பழம் உண்டாகாதபடி மிகுந்து கிளைத்துள்ள கிளைகளைத் தறித்துக் களைந்தும், கொழு கொம்படையாது செழிப் பற்றிருந்த முந்திரிகைக் கொடிகளைத் தக்க கொப்புக்களின் மேலேற் றிப் படர்வித்தும், தங்கள் வேலையைச் செய்துகொண்டிருக்கும் இருவரையும் பார்த்து, அவர்களுக் கிப்போதுள்ள ஆனந்த நிலையை யும் இனிவரும் துர்ப்பாக்கிய நிலையையும் கருதி, இரக்கத்துடனே கடவுள், சுகபோதகன் (Raphael—The Health of God என்னும்

அத்தியக்ஷ தூதனை அழைத்து, மனிதர் பேயின் வஞ்சனைக்குள்ளா காதபடி அவர்களுக்கு அறிவுறுத்தி விலக்குமரக் கனி புசிக்கக்கூடா தென்ற முந்திய கட்டளையைப்பற்றி ஞாபகமூட்டி வரும்படி ஆஞ் ஞாபித்தார். அவ்வாக்கினையைச் சிரமேற் கொண்டு அத்தூதன் மத் தியான காலத்தில் சுவர்க்கத்தை நோக்கிவர அவனைத் தன் பன்ன சாலை வாசலி லிருந்த ஆதாம் நெடுந்தூரத்தே கண்டு எதிர்கொண்டு வரவேற்றுத் தன்னிருப்பிடத்துக்கு அழைத்துவந்து, பூலோக சுவர்க் கத்தின் சிறந்த கனிகளால் விருந்து செய்தான். அவர்களெல்லாரும் சிறிதுநேரம் சல்லாபித்துக்கொண்டிருந்தார்கள். பின்பு தூதன் தான் வந்த காரியத்தைச் சொல்லத் தொடங்கி, ஆதாமின் நிலைமையை யும் கடமையையும் கூறி, பகைவன் சுவர்க்கத்துள் வந்திருப்பதை யும் தெரிவித்து எச்சரித்தான். அதன் பின்,ஆதாம் வேண்டிக்கொண் டபடி, அப்பகைவன் யார் என்றும், எப்படிப் பகைவன் ஆனுனென் றும், சாத்தான் பரமண்டலத்தில் கலகம் செய்ய ஆரம்பித்தது முதல் நாளது வரையுள்ள அவன் விருத்தாந்தத்தைச் சொன்னான். பின் னும் ஆதாம் வேண்டுகோளின்மேல் இந்த அண்டம் எதற்காக, எவ் வாருக, படைக்கப்பட்ட தென்பதை விவரமாகக் கூறினான். சூரி யன் முதலிய வானஜோதிகள் எவ்வாறு இயங்குகின்றன என்று ஆதாம் வினவ,அவ்வினவுக்கு ஒருவாறு விடைகொடுத்து வானசாஸ் திரத்தின் விஷயங்களினும் தாழ்ந்தவைகளும் அவற்றினும் அதிக உபயோகமுள்ளவைகளுமான விஷயங்களை ஆராய்தல் நலமென்று சொல்ல, அத்தூதனை அதிகமாகத் தாமதித்திருக்கும்படி செய்ய விருப்பங்கொண்டு, ஆதாம், தான் படைக்கப்பட்டது முதல் நிகழ்ந்த தன் அனுபவங்களைச் சொன்னான். இவ்வளவில் மாலைக் காலம்வர, அத்தூதன் திரும்பவும் எச்சரித்துவிட்டுப் போனான்.

28. அவன் சென்றபின் ஆறுநாள் ஆதாமும் ஏவாளும் தங்கள் வழக்கமான தினசரி வேலைகளைச் செய்துகொண்டு சந்தோஷமாக வாழ்ந்தார்கள். சுவர்க்கநீக்கக் கதை, பரமண்டலம் மூலப்பிரகிருதி நரகம் ஆகிய இவற்றில் நிகழும் காலம் போக, இந்தப் பூமியில் நிக முங்காலத்தில், முதல் நாள் மத்தியானம் நேபேத்து மலையில் இறங் கிப் பின்பு ஏதேன் தேசத்தைப் பார்த்துக்கொண்டு, அத்தேசத்தி லுள்ளதாகிய பூலோக சுவர்க்கமென்ற சிங்காரவனத்தையடைந்து, சாயந்தரம் ஆதாம்ஏவாளைப்பார்த்து, அவர்கள் சம்பாஷணையைக் கேட்டு, சூரியாஸ்தமயன சமயத்தே அவர்களை அகன்று சுவர்க்கமெ

கும் உலாவி, இராத்திரி அவர்களிருப்பிடத்துக்குத் திரும்பி, ஏவாள் காதருகே தேரைபோலுட்கார்ந்திருந்து அவளுக்குத் துர்க்கனவு நிகழ்வித்துக் கொண்டிருந்தபோது கண்டு பிடிக்கப்பட்டு, காபிரீல் முன் கொண்டுவரப்பட்டு அவனை எதிர்க்க முயன்று தனக்கு அபசெயம் நேரும் குறி வானத்தில் தோன்றக்கண்டு, விடியற்காலத்தே சுவர்க்கத்தை விட்டு ஓடிப்போன சாத்தான், அது முதல் பூமியை அகலாதவனாய், அவ்விருவரையும் சமீபிக்கத்தக்க காலம் எது வென்று சிந்தித்துத் திரிந்தான். எட்டாம் நாள் இரவு வரையும் திரும்பவில்லை. இடையே நிகழ்ந்த ஏழுநாளும், முன் ஒரு முறை தன்னால் வஞ்சிக்கப்பட்டதனால் பின்பு சாக்கிரதையாயிருக்கும் சூரியமண்டலத்துத் தூதனாகிய சோதிமானுடைய பார்வையிலகப்படாமல் தப்பும்படி, ஒரு பாதியில் இரவும் ஒரு பாதியில் பகலுமாக இராப்பகல் மாறி மாறி நிகழும் பூமியில், இரவு நிகழும் பாதியிலேயே சஞ்சரித்துக்கொண்டு, பூமியைத் திரும்பத் திரும்ப இடைவிடாமல் சுற்றிக் கொண்டிருந்தான்.

29. எட்டாநாளிராத்திரி, சுவர்க்கத்தில் கெருபியர்கள் காவல் நின்ற வாயிலுக்கு எதிர்த்திசையில் ஒருவரும் சந்தேகிக்காதவழியைக் கண்டு பிடித்தான். அங்கே, முதல் மாறுபாடு, காலத்தாலன்றிப் பாவத்தாலடைந்ததும், இப்பொழுதில்லாததுமாகிய ஓரிடமிருந்தது. அவ்விடத்திலே தைகிரீஸ் (Tigris) என்னும் நதி, சுவர்க்கத்தின் அடிவாரத்திலே, தரைக்குள்ளே சென்று ஒரு குடாக் கடல் போல நிறைந்து, அதன் ஒருபாகம், ஜீவ விருட்சத்தருகே, ஊற்றாகக் கிளம்பிக்கொண்டிருந்தது. அந்த நதியோடு முழுகி, அது எழுமிடத்திலே அதன் நீர்த்தூவலுள் மறைந்து எழுந்தான். அகண்ட பூமண்டல முழுதும் பலமுறை சுற்றியலைந்தபோது தான் அதிட்டித்து நின்று மாயசர்ப்பனை செய்யத்தக்க பிராணி எதுவென்று கவனமாகப் பார்த்து வருகையில்,தன் கருத்துக் கிசைந்தது சர்ப்பமே என்று தீர்மானித்திருந்த அவன், தலை நடுவேயுற மண்டலமாகப் படுத்துக் கொண்டிருந்த சர்ப்பத்தைக் கண்டான். அது, இன்னம் தீங்குள்ளதாகவாயினும் பயங்கரமான நிழலடர்ந்த மறைவான இடங்களில் ஒளித்துச் சரிப்பதாகவாயினும் ஆகாததனால், புல்லின்மேல் அஞ்சுதலும் அஞ்சப்படுதலும் இன்றிப் படுத்துறங்குவதைக்கண்டு, அவன், அதன் வாய்வழியே அதனுள்ளே பிரவேசித்து,அதன் நித்திரைக்குப்

பங்கஞ்செய்யாமல் விடியற்காலம் எப்போது வருமென்று எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்.

30. ஒன்பதாநாள் விடியற்காலம், பனிதங்கிய மலர்களின்மேல் உதய கிரணங்கள் தீண்ட ஆரம்பித்தபோது, அம்மலர்கள் காலைத் தூபமிடுதல்போல வாசனை வீச, சகல பிராணிகளும் பூமியாகிய பலி பீடத்திலிருந்து மௌனமாகச் சிருட்டிகருக்குத் தோத்திரஞ்செய் பவைகள்போலக் களிப்படைய, அவர் அந்த நன்றியறிவோடு செலுத்தும் வாசனை தூபத்தையும் மௌனஸ்தோத்திரத்தையும் ஏற்றுக்கொள்ளும்போது, ஆதாம்ஏவாளிருவரும் வெளியேவந்து வாயில்லாது வந்தனை செய்யும் கூட்டத்தோடு சேர்ந்து இனிய வார்த்தைகளால் துதித்துத் தாமும் வழிபட்டார்கள். பின்பு அன் றைய வேலையை எவ்வாறு செய்யவேண்டுமென்று யோசித்தார்கள். 'நம்முடைய வேலைகளைப் பிரித்துக்கொண்டு தனித்தனியே செய் வோம்' என்று ஏவாள் சொன்னாள். சர்ப்பனை செய்யக்கருதிப் பொ றாமையிருந்த பகைவன் சமீபத்தில் வந்திருக்கிறானாதலால் பிரி தல் நலமன்றென்றும் அபாயகாலத்தில் மனைவியாயுள்ளாள் புருஷன் பக்கத்தில் இருப்பதே தகுதியென்றும் ஆதாம் சொன்னான். ஏவாள், அவ்வாறு சொல்லியதற்கு வருத்தமுற்று "அவ்வித விரோதி நமது நாசத்தைக் கருதி வந்திருக்கிறான் என்பதை உன்னால் நேராயறிந் திருக்கிறேன். அன்றி, இப்போது உன்னை அகன்றுபோகிய தூதன் உனக்குச் சொல்லியதைக் கேட்டிருக்கிறேன். ஆனால், நம்மை ஒருக் கால் மோசப்படுத்தக்கூடிய பகைவனிருக்கிறானென்ற காரணத்தைக் கொண்டு, எனக்குக் கடவுளிடத்தும் உன்னிடத்தும் உள்ள உறு தியைப்பற்றி நீ சந்தேகங்கொள்வாயென்று நான் எதிர்பார்க்க வில்லை. நம்முடைய இப்போதுள்ள நிலையில் மரணமும் துன்பமும் நம்மைப் பிடிக்கும் சக்தியில்லாதிருப்பதனால் அவைகளை நாம் அடைவதுகூடாமையானதன்றி அவைகள் நம்மை அணுகவந்தா லும் நிராகரித்துத் துரத்திவிட வல்லமையுடையோமாதலால், அவ னுடையவலாற்காரத்தைக் குறித்து நீ பயப்படவில்லை. அவன் வஞ்சனையே உன் பயத்துக்குக் காரணமாயிருக்கவேண்டும். அந்தப் பயம், எனக்கு உன்பாலுள்ள உறுதியான விசுவாசமும் அன்பும் அவனுடைய வஞ்சனையினால் சலனமடையும், அல்லது மோசம்போம் என்று கருதுவதை நன்கு விளக்குகின்றது. ஆதாமே உனக்கு மிகப் பிரியமாக உள்ளவளைப்பற்றி இவ்வித எண்ணங்கள் எவ்வாறு

உன்னெஞ்சில் இடம்பெற்றன?" என்றுசொன்னாள். சொல்லவே, ஆதாம் "நீ என்னை விட்டு அகலக்கூடாதென்று சொன்னது, உன்னுடைய உறுதியைப்பற்றிய சந்தேகத்தினாலன்று, எதிரி மோசஞ்செய்ய எத்தனிக்கும் எத்தனமும் நிகழக்கூடா தென்ற கருத்தினாலேயே. மோசம் செய்ய எத்தனிப்போன் சித்திபெறக்கூடாதாயினும் அவ்வெத்தனத்தினால் எத்தனிக்கப்பட்டோர் ஒருவாறு இகழ்ச்சியடைவதனால் கிருத்தியடைகின்றனன்றே? ஆகையால் அவ்வெத்தனத்துக்கே இடமில்லாதபடி செய்யக்கருதியதை நீ தப்பாகக் கொள்ளாதே; நாம் இருவரும் பிரியாதிருக்கும்போது அவன் அவ்வாறு நிந்தனைப்படுத்தும்படி எதிர்க்க முயலமாட்டான்; முயன்றாலும் முதலில் என்னை எதிர்க்கவேண்டும். அன்றியும் அவனுடைய வஞ்சனைவல்லபத்தை நீ இகழ்ச்சியாக எண்ணக்கூடாது. தேவர்களையும் மோசப்படுத்தியவன் சூட்சும வஞ்சகனாகவே யிருத்தல் வேண்டும். ஆகையால் உதவி அனாவசியகமென்று கருதுவதும் சரியன்று." என்று மறுமொழிகூறினான்.

31. ஏவாள் அம்மொழியால் திருத்தியடையாது "எதிரியினால் நிர்ப்பந்திக்கப்பட்டு, குறித்த சுருக்கமான இடத்திலே வாழக்கட்டுப்பட்டு, தீங்கு வருமென்று எப்பொழுதும் பயத்தில்முழுகிவாழும் வாழ்க்கையுடையோ மென்றால், நாம் சுகமாக வாழ்கின்றோம் என்பது எவ்வாறு பொருந்தும்? தனிநின்றெதிர்க்கப்படாமலும் வெளியுதவியின்றி நிலைபெறாமலும் உள்ள விசுவாசம், அன்பு, ஒழுக்கம் ஆகியவைகளாற் பிரயோசனம்யாது?" என்று கூறினாள். ஆதாம் "அபாயம் தேடாமலே வரும். அதைத் தேடிக் கொள்ளாதே, அதை விலக்குவதே நலம். நீ என்னைப் பிரியாதிருந்தால், அது வராமலே அனேகமாக விலகலாம். நீ என் பால் உறுதியான பத்தியுடைய பதிவிரதை யென்பாயானால், முதலில் என் சொற்கேட்டுக் கீழ்ப்படிவாயாக. மற்ற உறுதி, இதுவரை சோதிக்கப்படாததனால், நிச்சயமானதென்று யார் அறிவார்? சாவதானத்தோடு சோதனையைத் தேடிச்சென்று அதற்குள்ளாகும்போது ஆயத்தமாயிருப்பதிலும் அது தேடாமல் வரும்போது குறைந்த ஆயத்த முடையவர்களாயிருப்போமென்று நீ நினைத்தால், போவாயாக. மனமின்றி நீ என்னோடிருப்பது இல்லாமையினும் அதிகமான பிரிவே." என்று சொல்ல, அவள் தான் கொண்ட எண்ணத்தை விடாதவளாய்க் கீழ்ப்பணிவோடு "அப்படி ஆனால் உன் அநுமதிபெற்றுப் போகின்றேன்.

நமது சத்துரு, மிக்க பெருமையுடையவனாகத் தோன்றுகின்றானாதலால், நம்முள் மெலியாரைத் தேடி வருவானென்று நான் அதிகமாக எதிர்பார்க்கவில்லை." என்றுசொல்லித் தன் நாயகனைப் பிரிந்து போனான்.

32. சர்ப்பத்தில் ஆவேசித்திருந்த சாத்தான் அவளைப்பார்த்து அருகே போய் அவள் பார்த்து மகிழவேண்டுமென்று பலவாறு விநோதமாக அவள் கண்ணெதிரே வளைந்து நகர்ந்து விளையாடினான். அவள், வேலைஞாபகமாகவிருந்ததனால் அவனைப்பார்க்கவாவது அவன் நகர்ச்சியால் உண்டாகிய இலைகளின் சரசரப்பைக் கேட்கவாவது இல்லை. அவன் அதிகத்துணிவுகொண்டு அவளெதிர் நின்று நோக்கி அதிசயித்தான். அடிக்கடி தலை வணங்கிப் பணிந்து அவள் மிதித்த தரையை நக்கி அவளைத் தான் மதித்துத் துதிப்பதைக் குறிப்பாகக்காட்டினான். அவன் இவ்வாறுதன் கருத்தை மௌனமாகவெளியிட்டது, கடைசியாக, அவளை அவன்விளையாட்டைப்பார்க்கும்படி செய்தது. அதனால் அவன் சந்தோஷங் கொண்டு அவளுடைய சௌந்தரியத்தைப்புகழ, அவள், அவன் எவ்வாறு பேசுஞ்சத்தி பெற்றானென்றுகேட்க, அவன் "இந்த அழகிய உலகத்தின் சக்கரவர்த்தினியே, நீ சொல்லக்கட்டளையிடுவதை நான் சொல்வது எளிதே. யாவரும் உன்கற்பனைப்படி கீழ்ப்படிந்து நடக்கக் கடவர்களே. மற்றப்பிராணிகளைப்போலவே, என்னுடைய கேவலமான ஆகாரத்துக்கேற்ற கேவல எண்ணங்களையுடையவனாயிருந்தேன். ஒருநாள் புலங்களில் திரிந்து கொண்டிருந்தபோது, சிவப்பும் பொன்வருணமும் கலந்தமைந்த அதி மனோக்கியமான பல வருணக் கனிகள் பழுத்திருந்த ஓர் அழகிய மரத்தைத் தற்செயலாகக்கண்டு, அதன் கனிகளைத்தின்றேன். அதனால் என்னுள்ளே அற்புதமான மாறுதலுண்டாகி மனுஷ அறிவும் பேச்சும் அடைந்தேன். ஆயினும் என் வடிவம் மாத்திரம் மாறுபடவில்லை." என்று சொல்ல, அம்மரம் எங்கே வளர்கின்றது? எவ்வளவு தூரத்திலிருக்கிறது? என்று கேட்டாள். அவன் "உலக நாயகியே, வழி சித்தமாயிருக்கிறது; தூரமுமல்ல. யான் வழிகாட்டுவதை அங்கீகரிப்பாயானால் அம்மரம் நிற்குமிடத்திற்கு உன்னைக்கொண்டு போய் விடுகிறேன்" என்று சொல்ல, அவள் சம்மதிக்க, அம்மரத்தருகு கொண்டுபோய் விட்டான்.

33. சகல துன்பங்களுக்கும் ஆதிமூலமாகிய அவ்விருட்சத்தைப்பார்த்த உடனே "சர்ப்பமே, நாம் இவ்வளவுதூரம் வந்திருக்க வேண்டியதில்லை. இந்தமரம் எவ்வளவு * பலங்கள் பழுத்திருந்தாலும் எனக்குப் † பலமில்லை. இதன் கனிகளை நாங்கள் தின்னக்கூடாது, தொடவும் கூடாதென்று கடவுள் கட்டளையிட்டிருக்கின்றார். இந்த மரத்தை யொழிந்த மற்றெப்பொருள்களுக்கும் நாங்கள் இறைவர்களே." என்று சொல்ல அவன் ஆச்சரியமடைந்தான் போல நடித்து "இந்தத்தோட்டத்து மரங்கள் சகலவற்றின் கனிகளையும் அருந்தக்கூடாதென்றும் ஆயினும் இப்பூமியிலும் காற்றிலும் உள்ள எப்பொருள்களுக்கும் இறைவரென்றும் கடவுள், உண்மையாகவே! சொல்லியதுண்டோ?" என்றான். அவள் "அப்படியன்று, இந்த ஒருமரத்துக் கனியைமட்டும் புசிக்கக்கூடாதென்றும் இதைத் தொட்டாலும் மரணமடைவோமென்றும் கடவுள் கூறியிருக்கிறார்" என்றாள்.

34 அவன் அந்த விருட்சத்தை நோக்கி "ஓ ஞானம் அருளும் பரிசுத்த தாருவே! சாஸ்திரங்களின் தாயே! நான் இப்போது உன்னுடைய சத்தியை என்னுள்ளே தெளிவாக உணர்கின்றேன்." என்று புகழ்ந்து அவளைப்பார்த்து "இந்தப்பிரபஞ்சத்துக்கு மஹாராக்கினியே, மரணம் வருமென்று பயமுறுத்தியது உண்மையென்றுநம்பாதே. நீ சாகமாட்டாய், எப்படிச்சாவாய்? பழத்தினாற் சாவாயோ? அதுவோ உயிரோடு அறிவையுந்தருகின்றது. பயமுறுத்தியவராற் சாவாயோ? [சாகாத] என்னைப்பார். யான் அதைப் பரிசித்து உருசித்தறிந்திருக்கிறேனே. வாழமாத்திரமோ செய்கின்றேன். எனக்கிட்ட பகுதியினும் அதிகமடையத்துணிந்ததனால், ஊழ் எனக்கென்று கருதி வைத்த வாழ்வினும் பூரணமான வாழ்வடைந்திருக்கின்றேன். மிருகத்துக்குத் திறந்து வைத்திருந்தது மனிதர்க்கு அடைக்கப்பட்டிருக்குமா? ஒரு கனியைத்தின்பதாகிய இப்படிப்பட்ட சொற்ப மீறுதலுக்காகக் கடவுள் கோபிப்பாரா? அவர் மரணதண்டனை ஏற்படுத்தித் தடுத்திருந்ததை அஞ்சாது துணிந்து செய்த தீரத்தை மெச்சிப் புகழுவன்றோ செய்யவேண்டும். உருவத்திலும் அறிவிலும் மிருகமாயிருந்த நான், அறிவில் மனிதனாகியதுபோல, அந்தக்கனியை யுண்பதனால், மனிதர் தேவராகுதல் இயல்பே. மனுஷத்துவம்

* பழம். † பிரயோசனம்.

நீங்கித் தெய்வத்துவம் அடைவதில் நீங்கள் ஒருக்கால் மரணமடைய லாம். அவ்வித மரணம் (தேவத்தன்மையடைய மனுஷத்தன்மை நீங் குவதேயாதலால்) விரும்பத்தக்கதே. தேவருடைய தெய்வீகமான ஆகாரத்தை மனிதர்கள் உண்டால் மனிதர்கள் ஏன் தேவராகார்கள். கடவுளர் மனிதருக்கு முந்திப் பிறந்தவர்கள். அந்தக்காரணத்தைக் கொண்டு, சகலமுந் தங்களா லுற்பத்தியாயின வென்று நம்மை நம் பும்படி வஞ்சனைசெய்கின்றார்கள். இந்த அழகிய பூமி, சூரிய வெப் பத்தினால் சகல சராசரப்பொருள்களையும் தருகின்றதைப்பார்க்கின் றேன். அவர்கள் யாதொன்றையும் படைப்பதை நான் பார்க்கின்றே னில்லை. அவர்களே எல்லாவற்றையும் படைத்தவர்களென்றால், அவர்கள் அநுமதியின்றித், தன் கனிகளை யருந்தினவர்களுக்கு உடனே ஞானத்தைத்தரும் இந்த மரத்தில் நன்மை தீமை பகுத் தறியும் பகுத்தறிவை யாரடைத்துவைத்தார்கள். மனிதன் இவ் வாறு அறிவை அடைவதில் குற்றம் எங்கேயிருக்கிறது ? நீ அறியும் அறிவு கடவுளை எப்படி வருத்தக்கூடும் ? எல்லாம் அவருடைய பொருள்களானால், இந்த மரம் அவர் கருத்துக்கு விரோதமாக அறி வைக் கொடுக்கக்கூடுமா ? இதற்குக் காரணம் பொறாமையே ? பொறாமை தேவர்சிந்தையுள் இருத்தல் கூடியதோ ? இவைகளும் இன்னும் அனேககாரணங்களும் உனக்கு இந்தக்கனி ஆவசியகமெ ன்பதை விளக்குகின்றன. நரேஸ்வரியே! தேவியே! நீ இக்கனிகளை எட்டிக்கொய்து தடையின்றி அருந்துவாயாக" என்று போதித்தான்.

35. இவ்வளவில் மத்தியானநேரமாகி அவளுக்குக் கடும்பசி யுண்டாக, அக்கனிகளின் மனோகரமான நறிய வாசனை அப்பசியை அதிகரிப்பித்தது. அவள், மேற்கூறிய போதனையாலே மயங்கி அக் கனிகளைத்தின்பது தனக்கு நன்மை பயக்குமென்று கருதித் தின் றாள். தின்னவே, அதைப் பூமி வெட்டுண்டதுபோல அறிந்தது. இயற்கை, பெருமூச்செறிந்து வியாகுல சின்னங்களை வெளியிட் டது. ஏவாளோ, அக்கனியின் இனிய ருசியுணர்ச்சியில் மூழ்கி னவளாய் பூமியையுள்ளிட்ட இயற்கையின் சகல பாகங்களினு டைய நடுக்கத்தையுங் கவனிக்கவில்லை. அக்கனியின் மகிமையை ஆதாமுக்குச்சொல்வது நலமா, அல்லது சொல்லாது தன்மனத்திலே தனக்குமட்டு முபயோகமாக வைத்துக்கொண்டு அவனிலும் தான் அதிக அறிவுடையவளாயிருப்பது நலமா என்று கருதினாள். தான் அக்கனிதின்றது கடவுளறிந்தால் தன்னை மரணமடையும்படி செய்

யலாமென்றும், அப்போது ஆதாமுக்காக வேறொரு ஏவாள் சிருட்டிக்கப்பட்டு, அவளோடு வாழ்வானென்றும், அவ்வாறு அவன் வாழத் தான் சாவதை நினைப்பதே சகிக்கக்கூடாத துக்ககரமானதென்றும், ஆகையால் தன்னுடைய வாழ்விலும் தாழ்விலும் ஆதாம் உடனனுபவிப்பானாகவே யிருக்கவேண்டுமென்றும், தனக்கு அவன்பால் அத்தியந்தகாதலிருப்பதனால், அவனோடு அடையும் மரணமும் தனக்கு வருத்தந் தராதென்றும், அவனை நீங்கி வாழும் உயிர்வாழ்வு உயிர் வாழ்வேயல்லவென்றும் சிந்தைசெய்தாள். இவ்வாறு நினைத்துக் கொண்டு அம்மரத்தை விட்டுத்திரும்பினாள்.

36. அவள் தோட்ட வேலைக்குச் சம்மானமாக, தெரிந்தெடுத்த மலர்களால் அழகிய பூமாலைதொடுத்து அவள் கூந்தலை அலங்கரிக்கும்படி சித்தஞ் செய்து வைத்திருந்த ஆதாம், அவள் வாராததனால் வருத்தமுற்று, அவள் காலையிலே சென்ற வழியை நோக்கிச்சென்று, அறிவு விருட்சத்தருகே வந்து, அப்பொழுதுதான் அம்மரத்தைவிட்டுத் திரும்புகின்றவளைச் சந்தித்தான். அவள் சற்றுமுன் பறித்த ஒரு பழக்கொத்தை கையில் பிடித்துக்கொண்டு அவனை வேகமாகச் சமீபித்து "உன்னுடைய பிரிவினால் மிகவும் வருத்தமடைந்தேன். இனி ஒருநாளும் பிரியேன். இந்த மரத்தைப்பற்றி நாம் கேட்டிருந்தபடி, இதில் அபாயமொன்றுமில்லை. இது தெரியாத தீமைக்குக் காரணமாகாமல், தன்கனியை அருந்துவோருக்கு ஞானக்கண் கொடுத்துத் தேவர்களாக்குகின்றது. இக்கனியை உண்டதனால், சற்றுமுன் வரையும் மலினமுற்றிருந்த என் கண்கள் இப்போது அதிகப்பிரகாசமுடையவைகளாயிருக்கின்றன. தெய்வத்தன்மையடையும் வளர்ச்சி என்னிடத்தே நிகழ்கின்றது. அத்தெய்வத்துவத்தை, முக்கியமாக, உன்பொருட்டே தேடினேன். நீ இல்லையானால், அது எனக்கு அருவருப்பானதே. உன்னோடு அநுபவிக்கும் ஆனந்த வாழ்க்கையே எனக்கு ஆனந்த வாழ்க்கை. எவ்வாழ்க்கையும் உன்னோடு அநுபவியாவிட்டால் சீக்கிரமாகச் சகிக்கத்தகாததாய் வெறுப்புடையதாய் விடும். ஆகையால் நீயும் இதை அருந்து. அதனால் சம இன்பமும் சம அன்பும் உடையோம் ஆவோம். நீ அருந்தாவிட்டால், எனக்கும் உனக்கும் வித்தியாசம் அதிகரித்து, நான் தெய்வீகம் அடைந்ததைப்பற்றி விசனமுற்று, அதை விலக்கமுடியாதகாலத்தில் விலக்கமுயல்வேன், அப்போது ஊழ் அதை விலக்க ஒட்டாது." என்று கூறக்கேட்டுத் தேவ

கற்பனை கடக்கப்பட்டதென்று அறிந்த உடனே, ஆதாம், பிரமித்துச் செயலற்றவனாய் நின்று, பயமே உருவெடுத்தாற்போன்று உடல் முழுதும் தளர்ச்சியுற்ருன். தளர்ந்த கையினின்று ஏவாளுக்கென்று தொடுத்துவைத்திருந்தமாலை நழுவி விழுந்தது. சிறிதுநேரம் பேச்சின்றி நின்ருன். கடைசியாக ஒருவாறு தேறிப் பேச ஆரம்பித்தான்.

37. "சிருட்டிக்கப்பட்ட எல்லாவற்றுள்ளும் மிகுந்த அழகுடையாளே! தேவனது பணிகளில் கடைசியும் சிறப்புமான பணியே! கண்ணுக்கும் கருத்துக்கும் இனிமையாய்ப் பரிசுத்தமும் தெய்வத்துவமும் நன்மையும் மனோரஞ்சிதமும் ஆனவையெல்லாம் சிறந்து விளங்கியவளே! ஆ! எப்படி இழந்தவளாய்விட்டாய்! எவ்வளவு சடுதியாக இழக்கப்பட்டு மரணத்துக்குத் தத்தம் செய்யப்பட்டு விட்டாய்! இந்தக்கனி தின்னக்கூடாதென்னும் கண்டிதமான தேவாக்ஞையை எவ்வாறு கடக்க இசைந்தாய்! பகைவன், வஞ்சனையினால் உன்னை மோசம்போகச்செய்து உன்னோடு என்னையும் கெடுத்து விட்டான். உன்னுடன் சாவதே என்னுடைய நிச்சயமான துணிபு. உன்னையின்றி நான் எவ்வாறு உயிர்வாழ்தல் கூடும்? உன்னுடைய இனிய சம்பாஷணையையும் மனதொத்த அதிப்பிரியமான காதலையும் இழந்து இந்தப்பாழ்ங்காட்டில் தனியனாகி எவ்வாறுவாழ்வேன்? நான் மற்றொரு விலா எலும்புகொடுத்துக் கடவுள் வேறோர் ஏவாளைப்படைத்தாலும் உன்னை யிழந்தது என்மனத்தைவிட்டு ஒருக்காலும் நீங்காது. அது கூடாது, கூடவே கூடாது! இயற்கையாக நமக்குள்ள சம்பந்தத்தினால் நான் உன்னிடம் இழுக்கப்படுகின்றேன். என்சதையோடு சதையாகவும் எலும்போடு எலும்பாகவும் இருக்கின்ருய். வாழ்விலாயினும் தாழ்விலாயினும் என்னிலைமையை உன்னிலைமையினின்றும் ஒருக்காலும் பிரிக்கவொண்ணுது!"

38. இவ்வாறு பாதி தனக்கும் பாதி ஏவாளுக்கு மாகக்கூறிய பின், ஆதாம் அவளை நோக்கிப் பின்னுங்கூறுகின்ருன்.

"துணிவான காரியத்தைச் செய்துவிட்டாய்! கடந்துபோனது கடந்துபோனதே. போனதைத்திருப்ப யாராற்கூடும். எல்லாம் வல்ல கடவுளாலும் கூடாது. இந்தக்கனியைத் தின்ற சர்ப்பம் சாகவில்லை. மனுஷ மனோதத்துவத்தை யடைந்திருக்கிறது. நாம் இதைத்தின்பதனால் தேவரே யாகவாயினும் உபதேவராகவாயினும் ஆதல், சர்ப்பத்தின் அனுபவத்தை நோக்குமிடத்து,

இயல்பாகத்தோன்றுகிறது. ஞானமுடைய கடவுள் பயமுறுத்திய படி உண்மையாக நம்மை அழித்துவிடுவாரென்று நான் நினைக்க இயலவில்லை. சகல சிருட்டிகளுக்கும் சிரோ பூஷணமாகிய நாம் அழியும்போது,நமக்காகப்படைக்கப்பட்ட சகல சிருட்டிகளும் அழி வடையவேண்டுமே. அவ்வாறு கடவுள் தாம் செய்ததை அழிப்பாரா? அழிக்கமாட்டார். ஏனெனில், அழித்த சிருட்டிகளுக்குப் பதில் சிருட்டிக்க வல்லவராயினும், நம்மை அழித்தால் அது பகைவனை 'கடவுளுடைய விசேஷ கிருபை பெற்ற அவர்களுடைய நிலைமை நிலையற்றது. அவனையார்தான் சந்தோஷிப்பிக்கக்கூடும்; என்னை முதலில் அழித்தார். இனி யாரானை அழிப்பாரோ?' என்று வெற்றி பாராட்டிக் கூறுவதற்கிடங்கொடுத்ததாகும். கடவுள், சத்துருவை இவ்வாறு இகழ்ச்சிசெய்ய வொட்டார். அவர் எவ்வாறுசெய்யி னும் செய்க, நான், நீ அடையும் கதியையே அடையத் தீர்மானித்து விட்டேன். உனக்கு மரணம் துணையானால் எனக்கும் அது துணை யே. அவ்விதமரணம் எனக்கு உயிர் வாழ்வே. நம்முடைய நிலைமை பிரிக்கவொண்ணாது. நாம் ஒரு சதையாலாகிய ஒருவரே. உன்னை யிழப்பது என்னை யிழப்பதே."

39. இதைக்கேட்டவுடன் ஏவாள் கூறுகின்றாள். "ஆ! காதலுக்கு என்ன மகத்துவ சோதனை! இந்தப்பரித்தியாகம் அந்தக் காதலுக்கு ஒப்பற்ற சாக்ஷியமாகின்றது. 'நீயும் இவ்வாறு காதலிப் பாயாக' என்று என்னை எவும் உயர்ந்த முன்மாதிரி காட்டுகின்றாய். உன்னுடைய மேம்பட்ட குணத்துக்குக் குறைந்த குணமுடையேனு தலால்,எவ்வாறு உன்போலாவேன். உன்னுடைய அருமையான விலாவில் யான் உற்பத்தியானதைப்பற்றிப் பெருமைபாராட்டுகின் றேன். நம்மிருவருக்கும் ஒரே இருதயம், ஒரே உயிரென்று நீ நம் மொற்றுமையைப்பற்றிக் கூறுவதைக் கேட்க எனக்கு ஆனந்தம் விளைகின்றது. அவ்வொற்றுமையின் உண்மையை, மரணமே யன்று, மரணத்தினும் அதிக பயங்கரமான எதுவும் நம்மைப்பிரித்தல் கூடா தென்றும், இக்கனியைத் தின்பது குற்றமேயாயினும் என்னுடன் தின்பேனென்றும் நீ இன்று உறுதிசெய்து கொண்டது நன்கு ருபிக்கின்றது. இச்சோதனையின்றேல், உன் அன்பின் உற்கிருஷ்ட மும் அறியப்பட்டிராதே. பயமுறுத்தப்பட்டபடி, இந்த எத்தனத் தால் மரணம் விளையுமென்று நான் எண்ணினேனென்றால், நானே அதை அனுபவிப்பேனேயன்றி, உன்னை அனுபவிக்கும்படி போதி

யேன். உன்னுடைய சமாதான வாழ்க்கைக்குத் தீங்கான எதையும் செய்யும்படி உன்னை நிர்ப்பந்திப்பதினும், யான் கைவிடப்பட்டுத் தனியே சாவதையே, (இப்போது விளங்கியபடி, அவ்வளவு உண்மையும் விசுவாசமும் ஒப்பற்றதுமான உன்னுடைய அன்பின் மிகுதியை அறியும்) முன்னமே விரும்பியிருப்பேனென்னில், இப்போதைய என் மனோநிலையைக் கூறுவானேன். ஆனால் நான் இக்கனி தின்றதால் வேறுவித அனுபவமுடையவளாகவிருக்கிறேன். மரணமடைவதற் கெதிராக, என்னுடைய ஜீவன் கதித்து வளர்கின்றதாகவும், கண்கள் விசேஷ பிரகாச மடைவதாகவும், நூதன நம்பிக்கைகளும் சந்தோஷங்களும் உண்டாகி, முன்னைய இனிய அனுபவங்கள் இப்போதைய அனுபவங்களுடன் ஒப்பிடும்போது, சாமானியமானவைகளாய் மிகக்குறைந்த இனிமையுடையவைகளா யிருப்பதாகவும் உணர்கிறேன். என்னுடைய அனுபவத்தைக் கைக்கொண்டு, ஆதாமே நீ இக்கனிகளைத் தடையின்றி அருந்து, மரணபயத்தை முழுதும் அகற்றி விடு.''

40. இவ்வாறு சொல்லி அவனைக் கட்டிக்கொண்டு அன்பின் மிகுதியால் ஆனந்தக் கண்ணீர் சொரியலானாள். அவனும் அவள் பாலுள்ள அதி மேன்மையான அன்புடைமையால் அவள் பொருட்டுத் தேவகோபத்தையாயினும் மரணத்தையாயினும் சிந்தியாதவனாகி அவள் அன்போடு கொடுத்த கனியை, அருந்துவது தவறென்பதை அறியாத மயக்கமில்லாமல் அதன் தோஷத்தைத் தெரிந்துகொண்டே, அவள் பாலுள்ள காதல்வசத்தனாகி, அருந்தினான். அருந்தவே, பூமி விசனோபாதி யடைந்து குடல் கலங்கி உடல் நடுங்கியது. இயற்கை, இரண்டா முறை ஏங்கி விம்மிப்பெருமூச்செறிந்தது. மரண காரணமான ஆதிப்பாவம் முற்றுப்பெற்றதைக் கண்டு, ஆகாயம் தாழ்ந்து இடிக்குமுறலால் முணுமுணுத்துப் புலம்பிச் சிலதுக்கநீர்த்துளிகள் சிந்தியது. ஆதாமோ, கனி தின்பதிலே மனங் கவிந்தவனாய் இந்த உற்பாதங்களை நோக்கவில்லை. அவனைச் சந்தோஷப்படுத்தும் முயற்சியில் முழுக்கவனத்தையுஞ் செலுத்தியதனால் ஏவாளும் நோக்கவில்லை. நூதனமான மதுவுண்டோர் போல, அவர்கள் களிமிகுந்து, தங்களுக்குத் தெய்வத்துவம் உண்டாகி, இப்பூமியை இகழ்ந்து விட்டுவிட்டுச் செல்ல உதவும் சிறகுகள் முளைப்பதாக மனோபாவனையில் உணர்ந்தார்கள். அந்த மோசக்கனியோ, அவர்கள் பாவிக்கிறபடியன்றி, முதலில் காம

விகாரத்தை விளைவித்தது. அவர்களிருவரும் சிறிதுபொழுது போக்கியபின், சோர்வுற்று உறங்கினார்கள்.

41. பின்பு அவர்கள் நித்திரை நீங்கி எழுந்து ஒருவர் மற்றொருவரைப்பார்த்து எவ்வாறு தங்கள் கண்கள் திறந்தும் மனம் இருளினால் மூடுண்டும் இருக்கின்றனவென்று தெரிந்தார்கள். முன் தீங்கையறியாதபடி செய்யும் திரைபோலிருந்த மனத்தூய்மை போய்விட்டதென்றும், தங்களுக்குச் சுபாவமாக இருந்த சன்மார்க்கமும் கவுரவமும் (வேறு ஆடையில்லா திருந்த அவர்களை ஆடைபோலப் பொதிந்து கொண்டிருந்தவை) இப்போது அவர்களை வெட்கத்துக் குட்படும்படி நிருவாணிகளாக விட்டுவிட்டகன்றனவென்றும் தெரிந்தார்கள்.

42. அப்போது ஆதாம் சர்ப்பத்தின் வார்த்தைகளைக் கேட்டு ஏவாள் மோசம்போனதைப்பற்றி விசனப்பட்டு விலக்குமரக்கனி நுகர்ச்சியால் தங்கள் கண்கள் நன்மைதீமை அறியும்படி திறக்கப்பட்டன வென்றும், ஆனால் அதனாலடைந்த பிரயோசனம் நன்மையை இழந்து தீமையைச் சம்பாதித்ததைத் தெரிந்ததே யென்றும், முன்பு பரமானந்த பரிதனாகப் பார்த்துக் களித்த கடவுள் முகத்தில் இப்போது எவ்வாறு விழிக்கிறதென்றும், சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் ஆகியவைகளின் ஒளி ஊடுருவாத இருளடர்ந்தவனத்தில் தனியே ஒரு மிலேச்சனாக வாழப்பெறுதல் கூடுமாயின் அதுவே இப்போது தனக்கு விருப்பமானதென்றும், "ஓ மரங்களே செடிகளே உங்களுடைய அளவிறந்த இலையடர்ந்த கிளைகளால் என்னை மூடீர்களோ?" என்றும் விசனமிகுந்து கூறி, ஏவாளை நோக்கி "நாம் ஒருவரை ஒருவர் பார்க்கக் கூசும்படி செய்யும் இந்தப் புதுவரவாளனாகிய வெட்கம் தங்காதபடி சில மரத்திலைகளைத் தெற்றித்தைத்து ஆடையாகச் சுற்றிக்கொள்வோம்" என்று சொல்ல, இருவரும் ஒரு மரமடர்ந்த சோலையுட்புகுந்து, வேரூன்றிய விழுதுகள் சூழ விளங்கி, தன் அருமைப் புத்திரிகள் பலர் சூழ்ந்து நிற்கப் பெற்ற ஓர் மாது போன்றும், அவ்விழுதுகள் தூண்களாக இலையடர்ந்த கிளைகள் முகடாக ஒரு மண்டபம் போன்றும் இருந்த ஓர் ஆலமரத்தின் இலைகளை (இலை தைக்கும் வழக்கமற்ற) தங்களுக்குள்ள சாமர்த்தியத்தைக்கொண்டு ஆடையாகத்தைத்து அரையைச்சுற்றி உடுத்த உடனே, அவர்களுடைய முந்திய [கவடற்ற குழந்தைப் பருவத்து நிருவாண தசை

போன்ற] நிருவாண நிலைக்கும் தற்கால நிலைக்கும் உள்ள பெரும் பேதத்தைக் குறித்துச் சிந்திக்கலானார்கள்.

43. பின்பு ஒருவாறு கூச்சம் தவிர்ந்தும் மனோசமாதானமின்றி ஓரிடத்தில் உட்கார்ந்து விசனப்பட்டு நெட்டுயிர்ப்புப் பெருங்காற்று வீசக் கண்மழை பொழிந்தார்கள். கோபம், பகை, சந்தேகம் முதலிய பல துன்மனோவிகாரங்கள் கிளம்பி முன் பூரண சமாதானத்தினால் முழு அமைதியோடிருந்த அவர்கள் மனப்பிரதேசங்களை இப்போது குலை குலைந்து கொந்தளிப்படையச் செய்தன. இவ்வாறு நிகழ, ஆதாம், கலக்கமுற்று வேற்றுமையடைந்த நெஞ்சினனாகி வேறுபட்ட பார்வையும் பேச்சும் தோன்ற ஏவாளை நோக்கிப் பின்வருவதைக் கூறினான்.

"நீ என்னுடைய வார்த்தைகளைக் கவனித்து, நான் வேண்டிக் கொண்டபடி என்னோடு நின்றிருப்பாயானால், நாம் எப்போதும் பாக்கியவந்தவர்களாயிருந்திருப்போம். யாரும் தங்களுக்கு இயல்பாக உள்ள விசுவாசத்துக்கு அனுவசியகமாக நியாய பூர்வமான காரணம் தேட முயலாதிருப்பாராக; அவர்கள், அவாவோடு அவ்வித நிரூபணத்தைத் தேடும்போது, தங்கள் விசுவாசத்தை இழக்க ஆரம்பிக்கின்றார்களென்பது நிச்சயமே."

44. இதைக்கேட்டுத் தான் குற்றங்கண்டு பிடிக்கப்பட்டதற்கு வருந்தி ஏவாள் "ஓ குரூரசித்தமுடைய ஆதாமே, எப்படிப்பட்ட வார்த்தைகள் இப்போது உன் வாயினின்று வெளிப்பட்டன? யான் உன்னைப் பிரிந்து திரிந்ததனால் இந்தக்கேடு சம்பவித்ததென்று என்மேல் குற்றஞ் சுமத்துகின்றாய். யான் உன்னருகிருக்கும்போதே என்றாலும், நீ தனித்திருக்கும்போது உன்னாலும், இக்கேடு நிகழ்ந்திராதென்றோ கூறுகின்றாய்? நீயே சோதனைநடந்த இடத்திலிருந்தாலும், சர்ப்பம் பேசிய மாதிரியை நினைக்குமிடத்து, அதனிடத்து வஞ்சமிருப்பதாகக் கண்டுபிடித்திருக்கமாட்டாய். எங்களிருவருக்கும் பகைக்குக் காரணமில்லாதிருக்க ஏன் அது எனக்குத் தீங்குசெய்யக் கருதவேண்டும். யான் உன்னைவிட்டு ஒரு போதும் அகன்றுபோயிருக்கவே கூடாதோ? நல்லது, அதைக்காட்டிலும் உன்னுடைய உயிரற்ற விலாவெலும்பாகவே இருந்திருக்கலாமே. தலைவனாக உள்ள நீ ஏன் என்னைப் பிரியவே கூடாதென்று உறுதியாகக் கட்டளையிட்டாயில்லை? அப்போது அதிகமாகத் தடை

செய்யாமல் எளிதாகப்போக விடுத்தாய். அம்மட்டோ, யான் கூறி யதை அங்கீகரித்து, யான்போக விடைகொடுக்கவும் செய்தாய். நீ உன்னுடைய அசம்மதத்தை உறுதியாக விடாதிருந்திருப்பாயானால், யான் தேவகற்பனையை மீறியிருக்கேன், நீயும் என்னோடு தவறு திருந்திருப்பாய்." என்றதைக்கேட்டுக் கோபமுற்று ஆதாம் கூறிய தாவது:—

45. "நன்றியற்ற எவாளே, நீ நிலையிழந்தும் நான் இழவாதும் இருந்தபோது முடிவின்றி வாழ்ந்து நித்தியானந்தத்தை அனுபவிக் கத் தடையற்றவனாயிருந்தும், அவ்வாழ்க்கையை விட்டு உன்னோடு மரணமடைவதை மனஸ்கரித்து ஏற்றுக்கொண்ட யான், நீ நிலை யிழந்த காலத்தும் மாறா இயல்பினதாகத் தெரிவித்த அன் புக்குப் பிரதி இந்த அன்புதானோ! அந்த அன்புக்கு இதுவோ கைம் மாறு? நீ கற்பனை கடந்ததற்கு நான் காரணமென்று கடிந்து பேசப்படுகின்றேனன்றோ? நீ பிரிந்துபோகக் கூடாதென்று தடுத்த போது யான் காட்டிய குரூரம் போதாதுபோலும். நான் செய்ததினும் அதிகமாகச் செய்யக்கடவதேதிருந்தது? பகைவன் பதிவிருப் பதையும் பிரிந்து செல்வதினால் வரும் அபாயத்தையும் தெரிவித் தேன். இதற்கதிகமானது வலாற்காரமே. அதுவோ சுயாதீன சித்த முடையாராயிருப்போர் விஷயத்தில் பொருத்தமற்றது. அன்றியும் உன்னைப்பற்றி நான் கொண்டிருந்த மேம்பட்ட அபிப்பிராயத்தினால் நீ நிலையிழக்க மாட்டாயென்றிருந்தேன். அவ்வாறு தப்பாக எண் ணியதைப்பற்றி இப்போது விசனமுறுகின்றேன். அத் தப்பெண் ணமே என் குற்றமாகி நீயே குற்றஞ் சுமத்துவாள் ஆயினாய். இவ்வாறு எனக்கு நேர்ந்த கதியே மாதரை அளவுகடந்து நன்கு மதித்து அவர்களிஷ்டப்படி ஆளவிடுவோர்க்கு நேரும். அவர்கள் தடையைச் சகிக்கார்கள்; இஷ்டப்படி செய்யவிட்டபோது, அத னால் தீங்கு நேருமானால், இளகிய மனத்தினால் தங்களை மனம்போன படிபோக விடுதற்குக் காரணமாயிருந்த தாட்சணியத்தினால் அத் தீங்கு நேர்ந்ததென்று அவர்களை முதலிற் குற்றஞ் சுமத்து வோராவார்."

46. இவ்வாறு ஒருவரை ஒருவர் பயனின்றிக் குற்றங் கூறினோர் களேயன்றித் தத்தம் குற்றத்தையறிந்து தம்மைக்கடிந்து கொள்ள வில்லை. இந்த வீணான வாக்குப் போராட்டம் முடிவற்றதாயிருந்தது.

47. இதன் மத்தியில் சர்ப்பத்தை அதிட்டித்து நின்ற சாத்தானால் ஏவாளும் அவளால் ஆதாமும் விலக்கு மரக்கனியைப் புசித்த விருத்தாந்தத்தைப் பரமண்டலத்தார் அறிந்தார்கள். சுவர்க்கத்தைக் காத்திருந்த தூதர்கள் விரைந்து பரமண்டலத்துக்குச் சென்று தேவ சிங்காசனத்தெதிரே நின்று தாங்கள் அத்தியந்த ஜாக்கிரதையோடு சுவர்க்கத்தைக்காத்தும் தங்கள் காவலை வஞ்சனையினால் கடந்து சாத்தான் சுவர்க்கத்துட் பிரவேசித்து மோசஞ் செய்துவிட்டானென்று விசனத்தோடு விண்ணப்பஞ்செய்யக், கடவுள் அவர்களால் அவனுடைய பிரவேசத்தைத் தடுத்திருத்தல் கூடாமையானதென்று கூறி அவர்களை உத்தரவாதத்தினின்று விலக்கிவிட்டார்.

48. பின்பு கற்பனை மீறியவர்களுக்குத் தண்டனை விதிக்கும்படி தேவன் குமாரனை அனுப்ப, அவர் தண்டனை விதிக்குங் காலத்தில் கற்பனை மீறினோரிருவரன்றி வேறொருவரும் இருத்தல் கூடாதென்றும் மூன்றாவனாகிய சாத்தான் எதிரில் இல்லாமலே அவனுக்குத் தண்டனை விதிக்கப்படுமென்றும் கூறித் தன்னோடு கூடச் சென்ற தேவதூத தலைவர்களைப் பரமண்டலவாயிலையடுத்த உடனே நிறுத்திவிட்டுத் தனியேயிறங்கி ஆதாம் ஏவாளிருந்த சிங்காரவனத்துக்குச் சாயந்திர நேரத்தில் வந்தார். அங்கே அவருடைய குரலைக்கேட்ட ஆதாமும் ஏவாளும் மரமடர்ந்த இடத்தில் வெட்கத்தினால் மறைய, அவர் ஆதாமை உரத்துக் கூவி யழைத்தார். அப்போது அவ்விருவர்களும் அவர் எதிரே வந்து அவர்கள் பாவஞ்செய்த வரலாற்றை வெளியிட்டார்கள். சாத்தான் முதற் பாவி யாதலால் அவனுக்கு முதற்றண்டனை விதிக்கத் தொடங்கித் தோற்றத்தில் அவன் அதிட்டித்து நின்ற சர்ப்பத்துக்கும் உண்மையில் அவனுக்கும் பொருந்தும்படியாக "சர்ப்பமே நீ இவர்களைப் பாவஞ் செய்வித்தாயாதலால் நீ எல்லாப் பிராணிகளிலும் அதிகமாகச் சபிக்கப்பட்டு வயிற்றால் நகர்ந்து உன்னுடைய ஆயுள்நாளெல்லாம் புழுதியை உண்பாயாக. உனக்கும் ஸ்திரீக்கும், உன் சந்ததிக்கும் அவள் சந்ததிக்கும் பகை நிகழ்வதாக. உன்தலை அவள் சந்ததியால் நசுக்கப்படுவாய். நீ அவள் சந்ததியின் குதிங்காலை நசுக்குவாய்." என்ற தீர்ப்பும், ஏவாளை நோக்கி "உன் கருப்பத்தினால் உனக்குத் துனபங்களை மிகவும் பெருகச் செய்வேன். நீ துன்பப்பட்டுக் குழந்தைகளைப் பெறுவாய். உன் புருஷன் கருத்துக்குக் கீழ்ப்படிந்து நடக்கக்கடவாய். அவன் உன்னை ஆள்வானாக" என்ற தீர்ப்பும், கடைசியாக ஆதாமைப்

பார்த்து "யான் இதன் கனியைத் தின்னா திருக்கக் கடவாய் என்று ஆஞ்ஞாபித்து விலக்கிய மரத்துக்கனியைத் தின்னும்படி உன் மனைவி யின் வார்த்தைகளுக்குச் செவிகொடுத்ததனால் இந்தப் பூமி உன்னி மித்தம் சபிக்கப்படுகின்றது. இதன் பலன்களை நீ உன் ஆயுளெல் லாம் வருத்தமுற்றுப் புசிப்பாயாக. இது முட்செடிகளை நீ வேண்டா திருக்கவும் விளைவிக்கும். [பயிரிடத் தகுதியாகப் பண்படுத்திய] வயலில் விளையும் பூண்டுகளை உனக்கு ஆகாரமாகக் கொள்ளக்கட வாய். நீ [இறந்து] திரும்ப மண்ணுமளவும் [வேலைசெய்து] வேர்வை யொழுகு முகத்தோடு உன்னுணவை உண்ணக்கடவாய்; மண்ணி னின்றும் எடுத்துருவாக்கப்பட்டாய். அதனால் உன்பிறப்பின் காரண மறிந்துகொள். புழுதியாயிருக்கின்றாய், புழுதியாகவே மாறக்கட வாய்." என்ற தீர்ப்பும் விதித்துத் தேவ கற்பனை கடந்ததற்காக அவர்கள் உடனே அடையக் கடவதாயிருந்த மரணம் நெடுங்காலஞ் சென்று நிகழ்வதாக நியமித்தபின், அவர்கள் தம்முன் வெட்கத்தோடு நின்ற நிருவாண நிலையைக்கண்டிரங்கி மிருகங்களின் தோலை ஆடை யாக உடுக்கும்படி செய்து, அவர்களுடலின் நிர்வாணத்திலும் அதிக மாக நாணச்செய்த மன நிர்வாணத்தைத் தமது நீதிநிறையினால் பொதிந்து விட்டுத் தம்பிதாவிடஞ் சென்றார்.

49. சாத்தான், ஏவாள் விலக்கு மரக்கனி தின்ற உடனே, அவள் அந்தக் கனி நுகர்ச்சியினால் உண்டாகிய புது அனுபவத்தில் மூழ்கிக் கொண்டிருந்ததனால், அவளால் கவனிக்கப்படாதவனாகி, பக்கத்திலே யிருந்த ஒரு சோலையுள் மறைந்து வேறுருவெடுத்து, அவள் ஆதா மையும் அக் கனியை நுகர்வித்ததையும் அவர்கள் சம்பாஷணை முத லிய எல்லாவிருத்தாந்தங்களையும் தெரிந்துகொண்டிருந்தான். அப்படி யிருக்கும் போது தேவகுமாரர் வருகையைக்கண்டு பயந்து ஓடிப் போய்விட்டான். பின்பு இரவில் திரும்பி அந்த நிர்ப்பாக்கிய நாயக நாயகியர் சம்பாஷணையால் தனக்கு விதிக்கப்பட்ட தீர்ப்பையும் அது நெடுங்காலத்துக்குப் பின் நிறைவேற்றப் படுமென்பதையும் தெரிந்து சந்தோஷ சித்தனாகித் தன் செய்தியைத் தன் கூட்டாளிக ளுக்குத் தெரிவித்தளவளாவி மகிழக்கருதி (அவன் பூமிக்கு வந்து சென்ற நாட்களில்) பத்தாநாள் உதயத்தில் நரகத்துக்குத் திரும்புவா னாயினன்.

50. இதன் மத்தியில் நரகவாயிலிலிருந்த பாவமும் மரணமும் சாத் தான் பூவுலகில் சித்திபெற்றதையும் மனிதன் பாவஞ் செய்ததையும்

ஆச்சரியகரமான ஒருவகைஅநுதாபத்தால் உணர்ந்து,நரகத்திலினி வீணேயிருக்கக்கூடாதென்றும் சாத்தான் சென்ற வழியைப் பின் பற்றிச்சென்று மனுஷவாசஸ்தலம் சேரவேண்டுமென்றும் தீர்மானித்து, சாத்தான் முதலிற் சென்ற மார்க்கத்தை அநுசரித்து மூலப் பிரகிருதியின் குழம்பு மயமான பொருள்களை இறுக்கிச் சேர்த்து மிகுந்தவிசாலமும் நீளமுமுள்ள ஒருபிரமாண்டமான தொங்கு பாலம் சமைத்து, அதன் அடியை நரகத்தின் அடியில் உறுதியாகப் பொருத்தி உச்சியை அண்டச் சுவரில் உச்சபாகத்தில் பரமண்டல வாயிலுக்குக் கீழே அண்டத்துள்ளே பிரவேசிக்கும் துவாரத்தருகே ஸ்திரமாகச்சேர்த்து, நரகத்துக்கும் உலகத்துக்கும் எளிதாகப் போக்குவரவு செய்யும் பாதை ஏற்படுத்தி, சுவர்க்கத்தை நோக்கி வருகையில் வழியிலே ஓர் பிரகாசமான தேவதூத வேடதாரியாக நரகத்துக்குத் திரும்புகின்ற சாத்தானைக் கண்டு, அவன் உருமாறியிருந்தானாயினும்தங்கள் பிதாவேயென்று தெரிந்துகொண்டார்கள். இருதிறத்தாரும் எதிர் பாராத இந்தச் சந்திப்பு, மூலப் பிரகிருதியின் மேல்விளிம்பிலே தொங்கு பாலத்தின் உச்சிக்கருகே மேற்கூறிய பத்தாம் நாள் உதயகாலத்திலே நிகழ்ந்தது. சாத்தான் அந்த அபாரமான பாலத்தை வியப்போடு பார்த்துக்கொண்டு நெடு நேரம் நின்றான். அப்போது பாவமகள் அவனை நோக்கிக் கூறியதாவது:—

91. "ஓ பிதாவே! இவையெல்லாம் உனது மகத்துவ கிரியைகளே!உனது ஜெய சின்னங்களாகிய விருதுகளே! இவைகள் உன்னுடையவை அல்லவைபோல நோக்குகின்றாய். நீயே இவைகளுக்கு ஆதி கர்த்தனும் மூல சிற்பியும். இனி நரகம் அதனெல்லையுள் எங்களை அடக்கிவைத்திருத்தலாகாது. கடத்தலருமையான இந்த மூலப் பிரகிருதிப் பெருஞ்சமுத்திரமும் உன்னுடைய பெருங்கீர்த்தி நெடிது நின்று நிலவப்பெற்ற பாதை வழியே நாங்கள் பின்பற்றி உன்னையடையாதபடி மயக்கப்படுத்தித்தடுக்குந் தரமுடையதன்று.

"இதுவரையும் நரகவாயிலிற் சிறைப்பட்டிருந்த எங்களைச் சுயாதீனராகச் செய்தாய். நீயே இந்தக் காரிருட் பாழ்ங் கயத்தைக் கடக்கும் பாலம் சமைக்கும் சக்தி தந்தாய். இப்போது இவ்வுலகமுழுதும் உனனதே. உன் கையாற் சமைக்கப்படாத (உலகத்)தை உன் சாமர்த்தியத்தால் சம்பாதித்துக் கொண்டாய். பரலோகத்து யுத்தத்தில் இழந்ததினும் அதிகமானதை உன் புத்தியினால் பெற்றாய். இங்

கே நீ ஏக சக்கராதிபதியாக ஆள்வாய். அங்கே நீ அப்படி ஆளவில்லை. அங்கே, அவன் ஜெயசாலியாக, அவனுக்கு யுத்தத்தினால் கிடைத்ததை என்றும் ஆண்டுகொண்டிருக்கட்டும். தான் விதித்த விதியினாலேயே பராதீனமாக்கப்பட்ட இவ்வுலகத்தினின்றும் அவன் விலகிக் கொண்டதனால், இனிமேல் பரலோக கண்டம் அவனுக்கும் அதற்குக் கீழுள்ள அண்டம் உனக்குமாக சர்வராச்சியத்தையும் உன்னோடு பகிர்ந்தாளுவான்."

52. இதைக் கேட்டுச் சாத்தான் சந்தோஷமாக மறுமொழி கூறியதாவது :—

"அழகிய புத்திரி! பிள்ளையும் பேரனும் ஒருவனே ஆகியோனே! நீங்கள் எல்லாம்வல்ல பரலோகாதிபன் பகைவனாகிய சாத்தானுக்குத் தக்க சந்ததியென்பதற்கேற்ற சிறந்த காரியஞ் செய்தீர்கள். என்னிடத்திருந்து இந்தக் கீழுலக ராச்சிய முழுவதையும் உரிமை வழியாகச் சுதந்தரித்துக்கொள்ள நீங்கள் முற்றும் பாத்திரர்களே. யான் இந்த உலகத்தைச் செயித்த அரிய செயலுக்குச் சரியெதிரான அரிய செயலாக நீங்கள் (இந்த அற்புதமான பாலத்தைச் சமைத்து) நரகத்துக்கும் இவ்வுலகத்துக்கும் அநாயாசமாகப் போக்குவரவு செய்யத்தக்க மகத்துவ சாதனம் அமைத்து நரகத்தையும் உலகத்தையும் ஒரே கண்டமான ஏகராச்சியம் ஆக்கினீர்கள். ஆகையால் யான் நீங்களாக்கிய பாதை வழியே சென்று என் கூட்டாளிகளாகிய சேனாதிபதிகளுக்கு இந்தச் செய வர்த்தமானத்தை அறிவித்து அவர்களோடு அளவளாவிக் களிக்கப்போகின்றேன். நீங்களிருவரும் இந்த வழியாக, யாவும் உங்கள் சொந்தமேயாகிய இந்தப்பல கிரகங்களூடு சென்று சுவர்க்கத்தில் இறங்கி அங்கே வாழ்ந்து சந்தோஷமாக அரசு செலுத்துங்கள். என்னுடைய பிரதிநிதிகளாகச் சர்வாதிகாரமும் கொடுத்து உங்களைப் பூமிக்கு அனுப்புகின்றேன்."

53. இவ்வாறு சொல்லி அவர்களை அனுப்பிய பின்பு சாத்தான் அந்தப் பாலத்தின் வழியே நரகத்தில் உள்ள தன் சர்வ பைசாச மாளிகைக்குச் சென்றான்· தன் ஆக்கினையின்படி காவல்நின்ற தூதர்களூடு ஒரு சாதாரண தூதன் வடிவங்கொண்டு சென்று தன் சிங்காதனத்தை அடுத்தவுடன் மறைவாகி அதன்மீதேறிச் சிறிது நேரம் உட்கார்ந்திருந்து மற்றவர்கள் தன்னைக் காணாதவர்களாக இருக்கத் தான் அவர்களை நோக்கினான். பின்பு மேகத்தினின்று

வெளிப்படுதல்போல அவனுடைய பிரகாசமான தலையும் உடலும் வெளிப்பட்டுத் தோன்றும்படி செய்தான். உடனே சகலதூதரும் அவன் தோன்றியவிதத்தினால் திகைப்பும் ஆச்சரியமும் உற்று, தாங்கள் மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்திருந்த தலைவன் வந்ததைப்பற்றிப் பேரானந்தமடைந்து சந்தோஷங்கொண்டாடினார்கள். அவன் அவர்களைப் பேசாதிருக்கும்படி கையால் அமர்த்தி அங்கு நிறைந்து கூடியிருந்த பூரணசபையில் தான் சென்ற காரியஞ் சித்தியானதைப்பற்றி மிகுந்த தற்புகழ்ச்சியோடு விவரமாகச்சொல்லி அவர்களெல்லாம் ஆர்ப்பரித்துத் தன்னைப் புகழ்ந்து மெச்சுவதை எதிர்பார்த்துச் சற்றுநேரம்நின்றான். அப்போது அவன் எண்ணத்துக்கெதிராக எல்லாரும் வெறுப்பான சிற்றத்தொனி செய்யக்கேட்டு ஆச்சரியப்பட்டு அதற்குக் காரணம் யாதென்று சிறிது நேரம் சிந்தித்துக் கொண்டிருக்கும்போதே அவன் முகம் சுருங்கிக் கூரியதாகக் கைகள் விலாவோடு ஒட்டிமறையக் கால்கள் பின்னி ஒன்றாகி வாலாகத் தன் உருமாறுவதை உணர்ந்து, அவ்வாறு உருமாறுகையை வெறுத்தானாயினும் தடுக்க மாட்டாதவனாய் ஒரு பெருஞ் சர்ப்பமாகி நிலத்தின்மேல் வயிறுபடிய விழுந்தான். இப்போது அவன் தன் சத்திக்கு அதிகமான சத்தியாளரால் ஆளப்பட்டு எவ்வுருவத்தோடு பாவஞ்செய்தானோ அவ்வுருவை அடையும்படி, தனக்கு விதிக்கப்பட்ட விதிப்படி தண்டிக்கப்பட்டான். அவன் பேச விரும்பி இரைய, அவன் பிளவுபட்ட நாவினால் இரைந்த இரைச்சலுக்கு எதிர் இரைச்சல் பல பிளவுபட்ட நாவினின்று வெளிப்பட்டது. இதற்குக்காரணம் அவனுடைய கலகத்துக்குத் துணையானவர்களெல்லாரும் அவனைப்போலவே சர்ப்பங்களாகிவிட்டதே. எல்லாரும் சீறிப் பேரிரைச்சல் செய்துகொண்டு தலைவன் முன் செல்லத்தொடர்ந்து வெளியேபோனார்கள். வெளியில் நின்று தங்கள் பெருந்தலைவனும் அவன் சேனாபதிகளும் ஜெயசாலிகளாகப் பவனிவருவதை எதிர்பார்த்துக்கொண்டிருந்த தூதர்கள், அந்தக் கேடும் அருவருப்புமான பாம்புக் கூட்டத்தைப் பார்த்துத் திடுக்கிட்டுத் தாங்களும் அவ்வடிவமடைந்தார்கள். அவர்கள் இவ்வாறு மாறுதல் அடைந்தபோதே, தானும் உண்டாகிய சோலை ஒன்று ஏவாளை மயக்கிய கனிபோன்ற கனிகள் மிக உள்ள மரங்களுடையதாய் அவர்கள் சமீபத்தே தோன்றியது. அங்கே, அவர்களெல்லாம் கடுந்தாகமும் கொடும்பசியும் அதிகரித்தவர்களாய் நகர்ந்து சென்று அக்கனிகளைத் தின்றார்கள். அக்கனிகள் சுவைக்

கப்படவே கசந்த சாம்பலாகி அவர்கள் சுவைப்புலனை அருவருப் படைவித்தன. இவ்வாறு அவர்கள் பசியும் தாகமும் பெருவருத்தஞ் செய்ய ஓயாமல் நெடுங்காலம் சீறிப் பேரிரைச்சல் செய்து, கடைசியாக, தேவசம்மதம் பெற்றதனால், தங்கள் சுயவடிவத்தைத் திரும்ப அடைந்தார்கள்.

54. அப்பால் அவர்கள் சிறைப்பட்டிருந்த நரகத்தில் அடங்கிக் கிடவாதவர்களாய் பாவமரணம் சமைத்தபாலத்தின் உதவியால் இந்த அண்டத்தைத் தங்கள் புராதன ராச்சியத்தோடு நூதனமாகச் சம்பாதித்துச் சேர்த்த ஒரு தீவுபோலவும், மூலப்பிரக்கிருதியிலே உயர்ந்த இடத்திலே, தங்களுடைய ஆதிவாழிடமான பரமண்டலத்தின் எல்லையருகிற்றானே தாங்கள் சுகமாசவாழும் உல்லாச வாசஸ்தலமாகவும் கொண்டு இதுமுதல், தங்கள் வெற்றியாற்பெற்ற இந்த ராச்சியத்தை நரகராச்சியத்திலும் விசேடமானதாகக் கருதி சூரிய மண்டல முதலான பல மண்டலங்களூடு பறந்து சென்றும், முக்கியமாக, பூமியைச் சுற்றியுள்ள காற்றில் வாசஞ்செய்தும், நரகத்திலும் அதிகமாக இந்த உலகத்தில் வாழ்வாராயினார்கள்.

55. முன் சாத்தான் நரகநோக்கிச் செல்ல, அவனிடம் விடை பெற்றுப் பூமி நோக்கிச்சென்ற பாவமரணம் இருவரும் அவர்கள் சாத்தானைச் சந்தித்த பத்தாநாளிலேயே சுவர்க்கத்தைச் சேர்ந்து அங்கு வாழ்வாராயினர். பாவம், மரணத்தைநோக்கி "இருண்ட நரகத்தில் இரையின்றிவருந்திய உனக்கு இத்தலம்மிக இனிமையானதன்றோ?" என "என்னுடைய என்றும் மாறாப்பசி, நரகத்திலும் சுவர்க்கத்திலும் பரமண்டலத்திலும் ஒரு தன்மையதாகவே இருக்கிறது. இங்குள்ள பொருள்கள் மிகுதியாயிருப்பினும் அவையெல்லாம் என் பசிதீர்க்கப் போதியவையல்ல" என, அவள் "நீ முதலில் புல் பூண்டு மலர் கனி ஆகியவற்றை அருந்து: பின்பு முறையே ஒன்றுக்கொன்று அதிக இனிமையான மீன் பறவை முதலியவைகளைப் புசி: காலமென்னும் அறுப்புக்காரனது அரிவாளாலரியப்படும் யாவற்றையும் சேடமின்றி உண்டுகொள்: நான் மனிதனுள்ளே புகுந்து தங்கி, அவன் மூலமாக அவன் சந்ததியார் சகலரையும் சுவாதீனப்படுத்தி, அவர்களுடைய எண்ணங்கள், பார்வைகள், வார்த்தைகள், செயல்கள், ஆகிய எல்லாவற்றையும் என் மயமாக்கிப் பாகப்படுத்தி உனக்குக் கடைசியும் ஒப்பற்ற இனிமையும் ஆன ஆகாரமாகத் தருமளவும் யான் இப்போது கூறிய உணவுகளை அருந்திக் காலங்கழிப்பாயாக."

என்று கூறிய உடனே இருவரும் அவர்கள் பேசியவாறே செய்யப் புகுந்தனர்.

56. அதைத் தம் சிங்காதனத்திருந்தபடியே கடவுள் பார்த்துத் தம் குமாரனை நோக்கி "மனிதன் பாவத்தால், நம்மனுமதியோடு, அந்த நரக நாயகன் அவ்வழகிய உலகத்தை அழிக்கின்றனன். உன்னுடைய வெற்றிக்கரத்தால் ஒரே வீச்சினுல் பாவமும் மரணமும் தீயவை சகலமும் பேயின முழுவதும் நரகத்துள் எறியப்பட்டு நரக வாயில் அடைபட்டு என்றும் திறக்கக்கூடாததாய்விடும். அப்போது பரமண்டலமும் பூமியும் புதுக்கிப்புனிதமாக்கப் பெற்று எவ்வகைத்தோஷமும் தம்மிடத்து வந்தடைதல் கூடாதவைகளாகிவிடும்" என்று கூறக்கேட்ட தேவதூதரெல்லாம் தேவபிதாவைத் தோத்திரஞ்செய்து குமாரனையும் துதித்தார்கள். அவர்கள் தோத்திரம் முடியவே, கடவுள், மனிதன் பாவத்தால், உலகத்தில் சில மாறுபாடுகள் நிகழும்படி விதித்தார். அம்மாறுபாடுகளாவன:— பூமியையடுத்துச் சுற்றும் உள்ள வாயு முதலிய பூதங்கள் உக்கிரமும் தோஷமும் உடையவைகளாயின. சூரியாதி கிரகங்களின் மண்டலங்களும் நக்ஷத்திர மண்டலமும், அக் கிரக நட்சத்திரங்கள் பூமியைத் தீங்குவிளைக்கும் நோக்காக நோக்கும்படி பேதப்படுத்தப் பட்டன. இவ்வாறு பூமியின் புறத்துள்ள பொருள்கள் வேறுபட்டதேயன்றி அதன் உருவமும் தோஷகரமான பல மாறுதலடைந்தது. இத்தன்மையான பேதத்தை உயிரில் பொருள்கள்மாத்திரம் அடையவில்லை. உஷ்ணுதிக்கம் குளிர்மிகுதி முதலிய கால வேற்றுமையினுலாகிய காரணங்களால் புல் பூண்டு முதலிய தாவரங்கள் இறுதியடையத் துவங்கின. மிருகத்தோடு மிருகமும் பறவையோடு பறவையும் மீனோடு மீனும் போராடத் தொடங்கின. முன், தாவர பக்ஷிணிகளாயிருந்த பிராணிகள் ஒன்று மற்றொன்றை விழுங்கப் புகுந்தன. அன்றி அவைகள் மனிதனை மதித்து நிற்றல் ஒழியவும், முன் அவனைக்கண்டால் ஓடாத சுபாவம் நீங்கி ஓடவும், அவனருகே செல்லும் போது குரூரமுகம் காட்டவும் ஆரம்பித்தன. இம்மாறுபாடுகளெல்லாம் சாத்தான் அண்டத்தை நீங்கியதும் பாவமரணம் சுவர்க்கத்தையடைந்ததும் தேவகற்பனை கடக்கப்பட்ட நாளுக்கு மறுநாளும் ஆகிய பத்தாம் நாளிலே நிகழலாயின. அன்றிரவு ஆதாம் தனக்குப்புறத்தே நிகழும் இந்த வேறுபாடுகளையும் இவ்வேறுபாடுகளினும் அதிகக் கோரமாகத் தனக்குள்ளே நிகழ்ந்துள்ள மாறுபாடுகளையும்

உணர்ந்து சகிக்கக்கூடாத துக்காக்கிராந்தனாகித் தன் குறையை வாய்விட்டொப்பதனால் ஒருவாறு தன்மனம் ஆறும்படி கருதிக் கூறியதாவது :—

57. "ஆ! ஆனந்தத்திலிருந்து துக்க முண்டாகியதே! இந்த மகத்துவமான புதிய உலகத்தின் முடிவு இதுவோ! சற்றுமுன் மகத்துவத்துள் மகத்துவமாக விளங்கிய என்கதி இதுவோ! ஆசீர் வதிக்கப் பட்டிருந்த யான் சபிக்கப்பட்டேனாகவும் காணப் பேரானந்தமாயிருந்த கடவுள் சந்நிதியில் நிற்கமாட்டாமல் ஒளிப்பேனாகவும் ஆயினேனே! கடவுள், சந்ததி விருத்திசெய்வாயாக என்றதைக்கேட்க முன் சந்தோஷமாயிருந்ததே. ஆ! இப்போது சந்ததி விருத்திசெய்வது துக்கத்தை விருத்தி செய்வதும் என் தலைமேற் சாபத்தைக் குவித்துக் கொள்வதுமன்றோ! என் பின்னோரில் யார், என்னால் உண்டாகிய தீமை தம்மைப் பிடித்ததை அறிந்தும், என்னைச் சபியாதிருப்பர்? ஓ நிலையாதோடிய சுவர்க்கானந்தங்களே! உங்களை நிலையான துக்கங்கள் விலையாக வாங்கினேனே! சிருட்டிகரே! மண்ணாயிருந்த என்னை மனிதனாக்கும்படி உம்மை வேண்டிக்கொண்டேனோ? நான் தேடாத நன்மையை, 'இந்த நிபந்தனைகளை அநுட்டித்து அனுபவிப்பாயாக' என்று நீர் நியமித்த நிபந்தனைகள் அதிகடினமானவைகளாயிருந்ததனால் அவைகளை நிறைவேற்றக் கூடாதவனாகி யான் பெற்ற யாவற்றையும் திரும்பக்கொடுத்துவிடச் சித்தமாயிருக்கின்றேன். இப்போது என்னைத் திரும்ப மண்ணாக்கிவிடுவது நியாயமே. யான் அவ்வாறு யாவும் இழந்து விடுதலே போதிய தண்டனையா யிருக்க, என் அதனோடு முடிவற்ற துக்கத்தையுஞ் சேர்த்தீர்? உமது நீதி விளக்கமாக அறியக்கூடாததாகத் தோன்றுகிறது. ஆயினும் உண்மையை நோக்குமிடத்து, யான் இவ்வாறு விவாதிக்க வேண்டியகாலம் கடந்து போய்விட்டது. அந் நிபந்தனைகள் முதலில் எனக்குத் தெரிவிக்கப்பட்டபோது யான் அவைகளை மறுத்திருக்கவேண்டுமே. அவ்வாறு செய்யாது, நெஞ்சே! நீ அப்போது அவைகளை அங்கீகரித்துக்கொண்டாய். அந் நிபந்தனைகளுடன் கிடைத்த நன்மையை அநுபவித்துவிட்டுப் பின்பு அவைகளைப்பற்றிக் குதர்க்கஞ்செய்யலாமோ? கடவுள் உன்னுடைய சம்மதம் பெறாது உன்னைப் படைத்தது மெய்யே. ஆயின், உன் பிள்ளை கீழ்ப்படியாததினிமித்தம் உன்னால் கண்டிக்கப்பட்டபோது "நான் வேண்டாதிருக்க என்னையேன் பிறப்பித்தாய்" என்று நிந்தையாக

எதிருனா கொடுத்தால் அவனுடைய இறுமாப்பான மறுமொழியை உன்னை அவன் அலட்சியஞ் செய்ததற்குத் தக்க நியாயமென்று ஒப் புக்கொள்வாயோ? ஆயினும் அவன், உன்னுடைய விருப்பு வெறுப் பினாலன்றி, உன்னுடைய செயல் கடந்த இயல்பான ஆவசியகம் காரணமாகப் பிறந்தவன். கடவுளோ உன்னைத் தன்னிட்டப்படி படைத்துத் தன்னிட்டப்படியே உன்னைத் தன்னை வணங்கும்படி செய்தார். உனக்குக் கிடைத்த பேறு அவர் தயையினால் கிடைத் தது. ஆகையால் நியாயமாக உன்னைத் தண்டிப்பதும் அவருடைய இஷ்டத்தைச் சார்ந்ததாகவேயிருக்கிறது. அது அப்படியே இருக் கட்டும். அவர் கருத்துப்படி செய்ய என்னை ஒப்புக்கொடுக்கிறேன். மண்ணாலாகிய யான் மண்ணாக மாறவேண்டுமென்று அவர் விதித்த விதி நியாயமானதே. ஆ! அவ்வாறு மாறுநேரம் எப்போதுவரினும் இனிதாக ஏற்றுக்கொள்ளப்படுமே. கற்பனைகடந்த தினத்தே நிறை வேறும்படி விதித்த தீர்ப்பை என் இன்னம் நிறைவேற்றாமல் தாம தம் செய்கிறார்? யான் என் அமைத்த அவதி கடந்து உயிர் வாழ வேண்டும்? மரணத்தினால் பரிகசிக்கப்பட்டு மரணமடையாது துன் பத்தை என் நீடித்தனுபவிக்கவேண்டும்? எனக்கு விதித்த தண் டனையாகிய மரணத்தை யடைந்து, திரும்ப, உணர்ச்சியற்ற மண்ணா வது எவ்வளவு சந்தோஷமாயிருக்கும்! என் தாய் மடிமேற் சயனிப் பதுபோல, மண்ணிலே எவ்வளவு சந்தோஷமாக என்னைக் கிடத்துவேன்! அப்போது என் கவலையெல்லாம் அற்றுப்போமே. கடவுளுடைய பயங்கரமான தொனி என்காதில் இடித்து முழங்கு வது நீங்கிவிடுமே. எனக்கும் என் சந்ததியாருக்கும் இதுவரை நிகழ்ந்த கேட்டினும் கொடுங்கேடு வருமோ என்று பயந்து சகிக்க ஒண்ணாத துக்கத்தோடு எதிர்பார்க்க வேண்டியதில்லையே. இன்னு மொரு சந்தேகம் என்னைப் பிடிக்கின்றது. அது யான் முற்றுஞ் சா தல் முடியாதோ? என்பது. ஜீவனது சுத்தமான சுவாசமாகிய, கட வுள் உள்ளே புகுத்திய, மனிதனது ஆவி இந்த மண்ணோ ஆகிய உட லோடு இறந்துபடுமோ? இறவாதாயின், புதைபட்ட இடத்திலாயி னும் வேறெவ்வதிருண்ட இடத்திலாயினும் சாவாத சாவு சாவேனோ வேனோ? ஆ! இவ்வெண்ணம் உண்மையாயின் அதிபயங்கரமான தே! அது எப்படி உண்மையாம்? ஜீவனது சுவாசமே பாவஞ்செய் தது. எது ஜீவனையும் பாவத்தையும் உடையதாயிருந்ததோ அது வன்றி வேறெது சாவது? தேகமோ இரண்டையும் உடைத்தாயி ருக்கவில்லை. ஆகையால் என்னோடு சம்பந்தப்பட்ட யாவும் செத்து

விடும். மனுஷ அறிவினால் இதற்கதிகமாகத் தெரிவது அசாத்தியமா தலால், இது என் சந்தேகத்தைச் சாந்தப்படுத்துவதாக. எல்லாவற் றுக்கும் இறைவனாக உள்ள கடவுள் முடிவற்றவராயிருப்பது போல அவர் கோபமும் முடிவற்றதோ? அப்படி ஆயினும் ஆகுக. மனிதன் அவ்வாறு இறுதியில்லாதவனல்லன், மரணமடையும்படி விதிவிதிக்கப்பட்டிருத்தலால். ஆயின் மரணத்தினால் முடிவு பெறவே செய்யவேண்டியவனாகிய மனிதன்மீது அவர் எவ்வாறு தம் முடி வில்லாத கோபத்தைச் சாதித்தல் கூடும்? அவர் மரணமற்ற மர ணத்தை உண்டுபண்ண வல்லவரா? இவ்வாறு கூறுவது நே ரெதிரிடையான பதங்களைப் புணர்த்ததேயன்றி வேறொன்றுமன்று. அது கடவுளுக்கும் செய்யமுடியாததே. அவர் என்றுந் தீராத கோபத் தைத் தீர்க்கும்படி, அக்கோபத்தினிமித்தம் தண்டிக்கப்பட்ட மனி தன் விஷயத்தில், முடிவானதை முடிவில்லாததாகச் செய்வாரா? அது இயற்கை கடந்ததே. ஆனால், மரணம், நான் எண்ணியிருந்த படி, உணர்ச்சியை முற்றும் கவர்ந்து ஒரே தாக்கினால் இறுதி யுண்டாக்காததாகி, என்னிலும் என்னைச் சூழ்ந்துள்ள பொருள்களி லும் ஆரம்பித்திருப்பதாக நான் தெரிகிற முடிவற்ற துன்பமாகி அன வரதம் நிலைநிற்குந்தன்மையுடையதென்று கருதலாமோ. அந்தோ! அக்கருத்து என்ன கொடுந்துன்பமானது! மரணம் இப்படியிருந்து விடலாகாதேயென்னும் அச்சம் எனது காப்பற்ற தலைமேல் இடி இடித்துப் பயங்கரமாகச் சுழன்றுவருகின்றதே! யானும் மரணமும் ஒன்றாகப் பொருந்தி நித்தியகாலம் வாழவேண்டுமென்று தெரிகின் றதே. அவ்வாறு வாழ்வதும், தனியாக, என்னோடு ஒழியவில்லையே. என்னில் என் சந்ததியார் யாவரும் சேர்ந்து சபிக்கப்பட்டிருக்கின் றார்களே. ஓ! குமாரர்களே உங்களுக்கு நல்ல பிதிரார்ச்சிதம் வைக்கக்கடவேனாயினேன். ஆ! அதை முற்றும் நானே செல விட்டு உங்களுக்குச் சிறிதும் எஞ்சாதபடி செய்ய வல்லேனாக விரும்புகின்றேன். ஐயோ! என் ஒருமனிதன் குற்றத்திற்காக, மனுஷ ஜாதியாரெல்லாம் குற்றமின்றித் தண்டிக்கப்படவேண்டும்? என்றால், பழுதான என்னிலிருந்து முழுதும் பழுதானதன்றி வேறு யாது பிறக்கும்? என்னிலிருந்துற்பவிப்போர் யான் செய்ததையே செய்யவும் யான் துணிந்ததையே துணியவும் மனமுடையராகவே இருப்பார். அப்படியாயின், அவர்கள் எவ்வாறு கடவுள் சந்நிதானத் தில் குற்றமற்றவராக நிற்கப் பெறுவர். சகல வாதமுஞ்செய்த பின், அவரிடத்து யாதொரு குற்றமுமில்லையென்று, நியாய பூர்வகமாகக்

கட்டுப்பட்டுத், தீர்மானிக்கிறேன். குற்றம் முழுவதுக்கும் நானே மூலகாரணனாயிருத்தலால் முழுப்பழியும் என்னையே நியாயமாகச் சார்கின்றது. அப்படியே தேவகோபமுழுதும் என் தலைமேல் சார்வதாக என்று விரும்புகின்றேன். இது மூடவிருப்பமே. பூமியினும் அதிபாரமான அந்தச் சுமை அந்தக்கெட்ட ஸ்திரீயோடு பங்கிடப்பட்டதேயாயினும், என்னாற் சுமக்கலாவதோ? இவ்வாறு நெஞ்சே நீ விரும்புவதும் அஞ்சுவதும் ஆகிய எல்லாம், ஒன்றுபோல, அடைக்கலம் கிடைக்குமென்னும் நம்பிக்கையை நாசப்படுத்தி இதற்குமுன்னும் இனிமேலும் ஒப்பில்லாத நிர்ப்பாக்கியனாயிருக் கின்றேனென்பதை முடிவாகத் திரப்படுத்துகின்றன.. ஆ! மனச்சாட் சியே!. எவ்வளவு ஆழமான பயக்கடலுள் என்னை ஆழ்த்திவிட்டாய். அதனினின்றும் வெளிப்படும் வழியொன்றும் காண்கிலேன். மேலும் மேலும் ஆழமாக மூழ்குகின்றேன்.''

58. ஆதாம் இவ்வாறு தனக்குத்தானே வாய்விட்டுப்புலம்பி, இதற்கு முன்னிருந்த நிலைமாறி இராக்காலம், கொடுங்குளிரும் பயங் கர இருளுமுடையதாய், அவனுடைய துக்கத்தை அதிகரிப்பிக்கத் தன்னை நொந்துகொண்டும், மரணம் அதன் வேலையைச் செய்வதில் தாமதஞ் செய்கிறதேயென்று அதையும் அடிக்கடி நொந்துகொண் டும் மிகக் குளிர்ந்த தரைமேல் படுத்துக்கிடந்தான்.

59. அவன் இவ்வாறு துன்புற்றுக்கிடப்பதைத் தூரத்தே அநா தையாய்த் துக்கப்பட்டுக்கொண்டிருந்த ஏவாள்கண்டு தன்துக்கத்தை மறந்து அவன் துக்கத்தைச் சகியாதவளாய் அவன் படுத்துக்கிடந்த இடத்தைச் சமீபித்து இனியவார்த்தைகளால் அவனுடைய கொடுங் கிலேசத்தைச் சாந்தப்படுத்த முயலவே, அவன் மனங்கடுத்து மிகக் கண்டிதமான வார்த்தைகளால் அவளைத் தன்னைவிட்டகலச்சொல் லியதாவது:—

''என் கண்ணைவிட்டோடிப்போ, சர்ப்பமே! அந்தப்பெயர் உனக்குத்தகும். எனக்கு மோசஞ்செய்யச் சர்ப்பமானவனோடு சேர்ந்தாய். நீயும் அவனைப்போல மோசமுடையாய். அவனைப்போ லவே பகைக்கத் தக்காய். நீ இல்லாதிருந்தாலும், அல்லது நீ உன் னுடைய அகந்தையினாலும் வீணெண்ணத்தாலும் என் முன்னெச் சரிப்பைத் திரஸ்கரித்து என் சொற் கடவாதிருந்தாலும் யான் சுக மாக வாழ்ந்திருப்பேனே. பிசாசை எதிர்காணச் சென்றாயே; சர்ப்

பத்தைச் சந்தித்து ஏமாற்றப் பட்டாயே; அவனால் நீ கெட்டாய். உன்னால் நான் கெட்டேன். உன்னிடத்தில் உத்தமகுணங்கள் தோற்றத்தில் இருந்தனவேயன்றி உண்மையில் இருக்கவில்லையென்பதை அறிந்தேனில்லையே. நீ இப்போது காணப்படுகிறபடியே, எதிலிருந்துண்டாக்கப்பட்டாயோ? அந்தக்கோணல் விலாவெலும்பு போலக் கோணியவளேயன்றி வேறொன்றுமல்லாதவளே. ஐயோ! புருஷரான தூதரைமட்டும் படைத்துப் பரமண்டலத்தைக் குடியேற்றிய ஞானமுள்ள சிருட்டிகர், ஏனோ இப்புதுமையாகிய பெண் சிருட்டியை இந்தப் பூமியில் கடையியாகச் செய்துவிட்டார்? பெண்பாலில்லாத் தேவர்களைத் திரளாகப் படைத்ததுபோல, என் மனிதனையும் கூட்டமாகப்படைத்து இவ்வுலகத்தைக் குடியேற்றியிருக்கக் கூடாது? பெண்ணினாலன்றி வேறுவகையால் மனிதனைப் பல்கச் செய்திருத்தல் கூடாதோ? அவ்வாறு செய்திருந்தால் இந்தக் கேடு விளைந்திருக்காதே."

60. ஆதாம் இவ்வாறு கூறி ஏவாளைவிட்டு வேறுமுகமாகத் திரும்பிக்கொண்டான். அவளோ அவ்வாறு அகற்றப்படக் கூடாதவளாய் இடைவிடாதொழுகும் கண்ணீரும் குலைந்த கூந்தலுமாய்த் தாழ்வாக அவன்காலில் வீழ்ந்து காலைப்பற்றிக்கொண்டு அவனுடைய மன்னிப்பு வேண்டி இரந்தாள்.

" ஆ! ஆதாமே என்னை இவ்வாறு கைவிட்டிடாதே! என் நெஞ்சில், உனக்கு எவ்வளவு உண்மையான அன்பும் பத்தியும் இருக்கின்றனவென்பதற்கும் யான் நிர்பாக்கியமாக வஞ்சிக்கப்பட்டு அறியாமலே உன்கோபத்துக் காளானேனென்பதற்கும் தெய்வமே சாட்சி. உன் காலைப்பிடித்து நான் தாழ்ந்து வேண்டுகின்றேன்; உன்னுடைய கருணைநிறைந்த பார்வையும், உதவியும், இப்போதுள்ள அத்தியந்த துக்கநிலையில் எனக்கு ஒரே பலமும் தரிப்பிடமுமான நன்மதி கூறுதலும் ஆகிய என்னுடைய ஜீவாதாரத்தைப் பறித்துக்கொள்ளாதே. நீ கைவிட்டுவிட்டால் வேறாதரவிலலாத யான் எங்கே செல்வேன்? எங்குவாழ்வேன்? ஒருநாழிகை நேரந்தான் உயிர் வாழ்வோமோ வாழோமோ அறியோம். அதுவரையும் நாமிருவரும் சமாதானமாக வாழ்வோமாக. இந்தத்தீங்கு விளைந்ததற்காக, முன்னமே அழிந்துள்ள என்மேற் பகைபாராட்டாதே. உன்னிலும் நான் நிர்பபாக்கியமுடையேனாக இருக்கிறேன். இருவரும் பாவஞ்செய்தோம்; ஆயின் நீ கடவுளுக்குமட்டும் விரோதமாகப் பாவஞ் செய்தாய்;

நானே கடவுளுக்கும் உனக்கும் விரோதமாகப் பாவஞ்செய்தேன். கடவுள்வந்து நமக்குத் தண்டனை விதித்த இடமாகிய நியாய ஸ்தலத்துக்குப்போய் முறையிட்டு மன்றாடி உனக்கு விதித்த தீர்ப்பு உன்னைவிட்டு நீங்கி உன்னுடைய துன்பமெல்லாவற்றிற்கும் முழுக் காரணமாகிய என்னையே பீடிக்கும்படி செய்வேன். நானே, நானொருத்தியே, அவருடைய கோபத்துக்கு இலக்காக வேண்டியவள்.''

61. இவ்வாறு ஏவாள் அழுதுகொண்டே கூறிமுடித்து, அவள் குற்றமொப்புக்கொள்ளலும் துக்கப்பாடும் ஆதாம் மனம் இளகி இரங்கும்படி செய்யும்வரையும், தாழ்ந்து படிந்த நிலை அகலவில்லை. அவன் சற்று முன் வரையும்தன் உயிருக்குயிராகவும் தன் முழுப்பேரானந்தமாகவும் இருந்தவள் இப்போது துக்கத்தில் மூழ்கித் தன் அடியிற்கிடந்து தன்னுடன் சமாதானமாம்படி பிரார்த்திப்பதைக்கண்டு விரைவில் மனமிரங்கிச் சமாதானமான வார்த்தைகளால் அவளைத்தேற்றத் தொடங்கி "முன் எவ்வாறு எச்சரிப்பில்லாமல் மோசம்போனாயோ, அவ்வாறே இப்போதும் சகல தண்டனையும் உன்னைச் சாரும்படி விரும்புகின்றாய். அந்தோ! என் கோபத்தைத் தாங்கமாட்டாத நீ தேவனுடைய முழுக் கோபத்தையும் தாங்கப்பாத்திரமோ! முதலில் உன்பங்குத் தண்டனையைப் பொறுத்துக்கொள்ள முயலுவாயாக. பிரார்த்தனையினால் தேவனது தீர்ப்பை மாற்றக் கூடுமாயின், நான் நியாயத்தலத்துக்கு உனக்குமுன் விரைந்துசென்று உன் குரலினும் உரத்த குரலினால் முறையிட்டுச் சகலதண்டனையும் என் தலைமேலாகவும் என்னுடைய பாதுகாப்புள் வைக்கப்பட்டு என்னால் அபாயத்துக்குள்ளாக்கப்பட்ட பெண்பாலாகிய நீ மன்னிக்கப்படவும் முயல்வேன். இனி ஒருவர்மேல் ஒருவர் குற்றஞ் சுமத்துதலை நிறுத்தி ஒருவர் துன்பத்தை ஒருவர் குறைக்க முயல்வோமாக. சாவு திடீரென்று ஒரேதடவையில் உயிர்க்கிறுதி செய்வதாகத் தோன்றவில்லை. அது நமது துன்பத்தையும் ஆ! நமது நிர்ப்பாக்கியமான சந்ததிகளின் துன்பத்தையும் விருத்தியாக்கும்படி சிறிது சிறிதாக உயிரைத் தாமதமாகக் குறைத்து முடிப்பதாகத் தோன்றுகின்றது.'' என்று கூற, ஏவாள் கேட்டு "உன்மனத்தில் நமது சந்ததியைப்பற்றி மிக்க வியாகுலமிருப்பதாகத் தெரிகிறது. அந்தவியாகுலத்தை மாற்ற எனக்குத் தோன்றும் உபாயத்தைச் சொல்லுகிறேன். நாம் இப்போது குழந்தையில்லாதவர்களாயிருக்கிறோம். அப்படியே எப்போதும் இருந்துவிடலாம். அதனால் மரணம் அவாவோடு எதிர்பார்க்கும் அளவற்ற உணவு பெறாது

ஏமாற்றி நம்மிருவரைமட்டும் அருந்தித் திருத்தியடையவேண்டும். யாமிருவரும் ஒருவரையொருவர் பார்த்து ஒருவரோடொருவர் சம்பாஷித்து ஒன்றாக வாழ்ந்துகொண்டே பிள்ளைப்பேறு இல்லாத படி வாழ்வது கஷ்டமும் அசாத்தியமுமானதென்று நீ கருதினால், நம்மைக் காட்டு மிருகங்கள் முதலிய அபாயங்களுக்குட்படுத்தி நம் வாழ்நாளைச் சுருக்கிவிடுவோம். அவ்வாறு முடிவடையாவிட்டால் தற்கொலை புரிவோம்.'' என்றுசொல்ல ஆதாம் கூறியதாவது:—

62. ''சுயநாசம் செய்வோம் என்று கூறுவது உன்க்கு உயிரின் ...துள்ள வெறுப்பை விளக்காமல், நீ மிகவும் அதிகமாக நேசித்த உயிர்வாழ்க்கையையும் அதன் இன்பங்களையும் இழக்கும்படி நேரிடு வதை நினைவதனால் உண்டாகும் கொடுந்துன்பத்தை விளக்குகின் றது. நீ, மரணம் துன்பத்துக்கு முடிவாகுமென்று நினைத்து, அதனால் கடவுள் விதித்த தண்டனையினின்றுந் தப்பப் பார்க்கின்றாய். அவர், அவ்வாறு தம்கருத்து உன் உபாயத்தால் நிறைவேறாதே போம்படி செய்திருப்பாரென்று கிஞ்சித்தும் சந்தேகிக்கவேண்டாம். ஆகை யால் மரணத்தினால் நமது துன்பத்தைநிவர்த்திக்க எத்தனித்தல் கூடாது. கடவுள் உன்னைநோக்கி 'உன்சந்ததியால் சர்ப்பத்தின் தலை நசுக்கப்படக்கடவதாக' என்று சொன்னாரன்றோ? அதனால் சர்ப்பத் தின்மேல் ஆவேசித்து நமக்கு வஞ்சனைசெய்த சாத்தான் உன்சந்ததி யால் நாசமடைவானென்று எனக்குப் பொருள்படுகின்றது. நாமே மரணத்தைத் தேடிக்கொண்டாலும், பிள்ளைப்பேறுண்டாகாதபடி வாழ்ந்தாலும் அவன் நாசமடைவதெப்படி? நாம் திடீரென்று மரண மடைவதாக எதிர்பார்த்திருந்தோம். அவ்வாறன்றி அது சிலகாலம் சென்று வருவதாகவிருக்கிறது. நீ பிரசவவேதனை அடையவேண் டும் என்பதும் நான் வேலைசெய்யவேண்டும் என்பதுமாகிய மற்றத் தண்டனைகள் அவ்வளவு கொடியவை யல்ல. நீ பிரசவகாலத்தடை யும் வேதனையைக் குழந்தையைப்பார்த்த உடனே மறந்து மிகுந்த சந் தோஷமடைவாய். நான் வேலைசெய்வதனால் தீங்கென்னை? சோம் பலாகக் காலங்கழித்தலினும் அது மிகவும் நல்லதே. குளிரால் மெலியாதபடி, நாம் வேண்டாமலே, கடவுள் நமக்கு ஆடையளித் தார். சில பொருள்கள் ஒன்றோடொன்று வேகமாக உரசுதலால் உண்டாகும் அக்கினி குளிரைமாற்றச் சூரியன்போல உதவுகின்ற தன்றோ? அப்படிப்பட்ட தீயினாலும் அதுபோன்ற மற்றப் பரிகாரங் களாலும் நம்முடைய பாவத்தாலுண்டாகிய சீதோஷ்ணாதிக்க முத லிய தீமைகளை மாற்றி நாம் கடைசியாக இறந்து மண்ணாக

மாறுமளவும். நம்முடைய வாழ்க்கையைச் சௌக்கியமுடையதாகச் செய்யலாம். கடவுள் நமக்குத் தீர்ப்புப்பிறப்பித்த நியாயஸ்தலத்துக்குப்போய் அவர் முன், பக்தியோடு வீழ்ந்து நமஸ்கரித்து நமது குற்றங்களை ஒப்புக்கொண்டு உண்மையான துக்கமும் சாந்தமான தாழ்மையும் நிறைந்து செய்தபிழை நினைந்து பச்சாத்தாபப்பட்டு நெஞ்சம் நெக்குருக, அடிக்கடி நெட்டுயிர்ப்பு வீங்கிக் காற்றேறுமோத, கண்ணீர்வார்ந்து தனையை நனைக்க இரந்து மன்னிப்புக் கேட்போமாக. அவ்வாறு பிரார்த்தனை செய்தால், அவர் திருவுள மிரங்கி நமக்கு அருள்செய்வாரென்பதிற் சிறிதுஞ் சந்தேகமில்லை" என்று ஆதாம் கூற, இருவரும் அவ்வாறே நியாயஸ்தலத்துக்குப்போய் வணங்கிப் பிரார்த்திக்கலாயினார்கள். அவர்கள் பிரார்த்தனை முடியும்போது சாத்தான் பூமண்டலத்துக்கு வந்தது முதற் சென்ற நாட்களில் பதினோராநாள் அருணோதயகாலமாயிருந்தது.

63. அவர்கள் பிரார்த்தனை மேல்நோக்கிச் சென்று பரமண்டல வாயிலைக்கடந்து தேவபிதாவின் சந்நிதானத்தில் சுவர்ண பலிபீடத்தினின்றெழும் தூபத்தாற் பொதியப்பட்டுத் தேவபிதாவை யணுகத் தேவகுமாரன் சந்தோஷமடைந்து பிதாவைநோக்கி, "பிதாவே! நீர் மனிதன் பொருட்டு விச்செய அருளின் முதற்பலங்களை நோக்குவீராக. இந்த நெட்டுயிர்ப்போடு கூடிய பிரார்த்தனையாகிய தூபநிவேதனத்தை நான் உமது அருச்சகனாய் உமக்கு அர்ப்பிதமாகச் சமர்ப்பிக்கின்றேன். அவனுடைய இருதயநிலத்தில், உம்முடைய அருள் வித்து,பச்சாத்தாப உரத்தினால்,செழிப்பாக வளர்ந்து உதவிய இந்தப் பிரார்த்தனைக் கனிகள், அவன் கையினால் அவன் பாவஞ் செய்யுமுன் சுவர்க்கத்தில் உரமிட்டு வளர்த்த மரத்துக்கனிகளினும் இனிய மணமுடையவைகளாயிருக்கின்றன. அவன் பிரார்த்தனையை ஏற்றருள்வீராக" என்று கூறப் பிதா அவ்வாறே ஏற்றருளினார். ஆயினும் அவர் "இனி அவன் சுவர்க்கத்திலிருத்தல்கூடாது; அங்கிருந்தும் அகற்றப்படக் கடவன்" என்று கூறியபின் மிகாவேலை நோக்கி "மனிதரது எதிர்கால சரித்திரத்தைக் கூறிச் சமாதானப்படுத்திப் பாவஞ்செய்த இருவரையும் சுவர்க்கத்தினின்றும் அப்புறப்படுத்துவாயாக" என்று கட்டளையிட்டு, அத்தண்டனையை நிறைவேற்றும் முறைமையுங் கூறி அவ்வத்தியக்ஷ தூதனைச் சில கெருபியர் கூட்டத்துடன் அனுப்பினார்.

64. மிகாவேலும் அவனுடன் வந்த கெருபியரும் சுவர்க்கத்தில் ஒரு குன்றின்மேல் இறங்கினார்கள். பின்பு அவன் சுவர்க்கத்தைக் கைவசப்படுத்தும்படி தன்னோடு வந்தாரை நியமித்துவிட்டுத் தான் தனியே ஆதாமிருந்த இடத்தை நோக்கிச் சென்று அவனைச் சமீபிக்க அவன் வணக்கத்துடன் வரவேற்றான். அவன் வந்த காரணத்தைக் கூறக்கேட்டு ஏவாள் சுவர்க்கத்தினின்றும் நீங்குவது மரணத்திலும் கொடிதென்று விசனப்பட, "சுவர்க்க நீக்கத்தைப்பற்றி நீ துயரப்படலொழிக. உன்னோடு உன் நாயகன் போகின்றான். நீ அவனோடு செல்லக் கடமைப்பட்டவள். அவன் எவ்விடத்திருந்தாலும் அவ்விடம் உன்னுடைய சுதேசமே" என்று அவளைத் தேற்றினான். ஆதாம் "எங்களுக்குப் பழக்கமான இந்த ஆனந்தத் தலத்தைவிட்டு நீங்குவதிலும் துக்ககரமானதேதிருக்கிறது? மற்ற இடங்களெல்லாம் எங்களை அறியாதவைகளாயும் நாங்களறியாதவைகளாயும் விருந்தோம்பார் மனைபோலப் பாழ்ங் காடாயிருக்கின்றன. நான் இங்கேயே இருக்கப் பெற்றேனேல், என் குமாரர்களுக்குக் 'கடவுள் இந்த மலைமேல் தோன்றினார்; இந்த மரத்தடியில் கட்புலனாக விளங்கினார்; இந்த மரங்களூடு அவருடைய திருவாக்கைக் கேட்டேன்; இந்த ஊற்றடியில் அவரோடு பேசினேன்" என்று கூறி அவ்விடங்களெல்லாவற்றிலும் நன்றியறிவோடு பலிபீடங்கள் சமைத்து நிறுத்தி இங்குவிளையும் (சாம்பிராணி முதலிய) நறியவாசமுடைய பயின்களைத் தூபமாகப் புகைத்துத் தூபங்கொடுத்தும் இனிய கனிகளை நிவேதித்தும் வணங்குவேன். இதற்கப்பாலுள்ள அந்தத் தாழ்ந்த நிலங்களில் கடவுள் காட்சிநிகழ்ந்த இடத்தையும் திருவடித் தடத்தையும் தேடிக் காண்பதெப்படி?" என, மிகாவேல் "ஆதாமே! கடவுள் பரமண்டலத்திலும் பூமியிலும் எங்கும் பிரசன்னராயிருப்பதறிவையே. ஆகையால் அவர் ஏதேன் தேசத்திலாயினும் இந்தச் சுவர்க்கத்திலாயினும் மட்டுப்பட்டிருப்பதாக நினையாதே. நீ எங்கெங்கு சென்றாலும் அங்கெல்லாம் அவர் உன்னைத்தொடர்ந்து பெற்றோர்க்குரிய வாஞ்சையோடு உன்னைச் சூழ்ந்துநின்று அருள் செய்யும் அடையாளங்கள் புலப்படச் செய்தருளுவார்" என்று அவன் மனத்தைத் தேற்றியபின், ஏவாளை மனம் ஆறுதலடையும்படி நித்திரை செய்வித்துவிட்டு, அவனைச் சுவர்க்கத்தின் குன்றுகள் யாவற்றிலும் உயர்ந்த ஒரு குன்றின்மேல் அழைத்துச் சென்றான். அங்கே அவன் கண்ணில் விலக்கு மரக்கனி நுகர்ச்சியால் உண்டாயிருந்த படலத்தை நீக்கிப் பார்வை நரம்பைப் பரிசுத்தப்படுத்தி ஜீவ ஊற்று

நீரில் மூன்று துளிகளைப்பெய்து தெளிவுபிறக்கும்படி செய்து, எவா ளின் சந்ததியாகத் தேவகுமாரன் மனுஷாவதாரஞ் செய்ததனால், பாவம் நிவாரணமாகிச் சாத்தான் வெல்லப்பட்டு உலகம் மனிதன் பாவம்செய்யுமுன்னிருந்ததுபோலத், திரும்ப ஒருக்காலும் கெடாத வண்ணம், புதுப்பிக்கப்பட்டு மனுஷர் மரணத்தினின்று நீங்கி நித்தி யத்துவமடைந்ததாகிய சுவர்க்கமீட்சி இறுதியாக உள்ள எதிர்கா லத்து நிகழும் மனுஷ சரித்திரத்தைத் தரிசன மூலமாகத் தெரி வித்தான்.

65. இவ்வாறு உண்மையில் சுவர்க்க நீக்கம் நிகழப் போம்போது தரிசனத்தில் சுவர்க்கமீட்சி நிகழ்ந்தது. ஆதாம் மிகாவேலைநோக்கி "நான் மிகுந்த நன்மதி புகட்டப்பெற்றேன். இனி மிகுந்த மனச் சமாதனத்துடன் சுவர்க்கத்தை அகல்வேன். ஏகதேவனைக் கீழ்ப் படிந்து அவரைப் பயத்தோடு பத்திசெய்து நேசித்து, அவர் எப் போதும் எதிரிலிருப்பதாகக் கருதி என் வாழ்நாளிற் செய்யும் சகல வற்றையுஞ் செய்யும்படி பாருகுவேனுயினேன். அவர் முன்னறிந்து யாவற்றையும் சரியாக நடத்துவாரென்று அவரை யே தாரகமாகப் பற்றுவது உத்தமமென்றும், அவர் தம்மாற் படைக் கப்பட்ட யாவற்றின்மீதும் கருணையுடையவராய் எப்பொழுதும் நன்மையைக்கொண்டு தீமையைத் தோற்பித்தும் அற்பமானவைக ளால் பெரியகாரியங்களை நிறைவேற்றியும் எளியனவாகத் தோற்றுப வைகளால் வலியவைகளைத் தொலைத்தும் லௌகிக புத்தி மிகுந்தவர் களை நிஷ்கபட மனமுடைய சாதுக்களால் வெல்வித்தும் வருகின்று ரென்றும், உண்மையி னிமித்தம் தளர்ந்து வருந்தல் ஒப்பற்ற வெற்றி யடைதற்குரிய ஆண்மையே யென்றும், பத்தருக்கு மரணம் நித்தியத்துக்குப் போரும் வாயிலென்றும் தெரிந்தேன்" என்று கூற, மிகாவேல் "இதுவே பூரண ஞானம். இந்த அறிவுக் கேற்க உன் செயல்களிருக்கவேண்டு மென்பதையும் பத்தி ஒழுக்கம் பொறுமை ஆகியவைகளோடு அன்பும் உடையவனாயிருத்தல் வேண்டுமென்பதையுந் தெரிவாயாக. நீ இவ்வளவும் உடையவ னானல் சுவர்க்க நீக்கத்தினுல் துன்பமடையாமல் இச்சுவர்க்கத் தினும் மிக இனியசுவர்க்கம் உன் உள்ளத்துள்ளேயே உடையவன் ஆவாய்" என்று கூறி அத்தூதர் தலைவன் ஆதாமோடும் அக்குன்றி னின்றிறங்கினன்.

66. இறங்கியபின் ஆதாம் ஏவாளைத் தூக்கம் நீக்கச் செல்லுமுன்னமே துயிலகன்றிருந்த அவள் அவன் வரவேற்று "எங்கு சென்றிருந்தாயென்பதையறிவேன். கடவுள் நித்திரையிலும் கூட இருந்தருளிச் சொப்பன வாயிலாக யானறிய வேண்டியவற்றை அறிவித்து என் மனத்தை ஆறுதலையடையச் செய்தார். நீ எங்கு போகவேண்டினும் அங்குவரச் சித்தமாயிருக்கின்றேன். என்னால் தாமதம் நேரவேண்டுவதில்லை. உன்னோடு போவது இங்குவாழ்வதே. உன்னையின்றி இங்கிருப்பது இதைவிட்டு மனவருத்தத்தோடு அகல்வதே. இம்மையில் எனக்கு யாவும் நீயே. என்னால் யாவும் இழக்கப்பட்டாலும் என் வித்தாகிய என் சந்ததியால் யாவும் மீட்கப்படுமென்னும் தேற்றரவோடு இதைவிட்டு அகல்கின்றேன்" என்று கூறினாள்.

67. இதன்மத்தியில், மிகாவேலுடன்வந்த கெருபியர் சுவர்க்கத்தைத் தம் வசப்படுத்தினார்கள். அவன் தனது கடைசிக் கடமையை நிறைவேற்றுவானாகி ஆதாம் ஏவாள் இருவரையும் இருகையிலும் பிடித்துச் சுவர்க்கத்தின் கிழக்கு வாயிலைநோக்கிச் சென்று அதைக் கடந்து கீழே யிறங்கிச் சமதலமாகிய ஏதேன் தேசத்தில் அவர்களை விட்டுவிட்டு மறைவாயினான்.

86. அவர்கள் திரும்பிப் பார்க்கச் சற்று முன் வரையும் தங்களுடைய ஆனந்த ஸ்தானமாயிருந்த சுவர்க்கத்தின் கீழ்புறமெல்லாம் தேவனது சுவாலிக்கும் வாள் வீசப்பட்டுக்கொண்டும், அச்சுவர்க்க வாயில் பயங்கர முகங்களும் அக்கினிப் படைகளும் நெருங்கி மொய்க்கப்பட்டுக்கொண்டுமிருந்தன. அவர்கள் இனி என்றுந் திரும்பாதபடி அந்த ஆனந்த க்ஷேத்திரத்தினின்று துரத்தப்பட்டதை நினைத்து இயல்பாகத் துளித்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, இந்தப் பேருலகில் நிலையாகத் தங்குமிடத்தை எங்கே தெரிந்தெடுக்கிறதென்று மயங்கியும் வாக்களித்தபடி தெய்வம் வழிகாட்டுமென்னும் நம்பிக்கையுடையாராய், எதிரே அளவின்றிப் பரந்து கிடந்த அறியாத பூமண்டலப் பரப்பை நோக்கி, ஏதேன் தேசத்து வழியே, கையோடுகை கோத்துக்கொண்டு மெள்ளமெள்ளச் செல்வாராயினர்.

69. ஆதாம் ஏவாள் இவ்வாறு செல்லுங்காட்சி நம்மனத்தே நிகழா நிற்கச் சுவர்க்க நீக்கக் கதைமுற்றுப் பெறுகின்றது.



# சுவர்க்க நீக்கம்.

## மொழிபெயர்ப்புப் பாயிரம்.

ஏன்ற ஒன்றுக்கொன் றிடைநெடுங் காலங்கள் இறந்த
மூன்று காலத்துத் தோன்றினர் மூன்றுமர் கவிஞர்;
ஈன்ற நற்கிரீ சித்தலி இங்கிலாந் தென்னும்
ஆன்ற தேயங்கட் கணியென விளங்கினர் அனையார்; (௧)

முன்னர்த் தோன்றியோன் உயர்அர்த்த கவுரவ முதிர்ச்சி
தன்னில் யாரினும் மேலவன், தகுசெய்யுள் நடையின்
உன்ன தத்தினில் அத்தகை யோன்நடு உற்றோன்,
பின்னு தித்தவன் இரண்டினும் எவரினும் பெரியோன்; (௨)

இயம்பும் முன்னையோர் இருவரைத் தந்திட்ட இயற்கை,
தியங்கி அன்னதின் மிக்கது செய்யவல் லாதே,
தயங்கும் அம்முனோர் இருவர்கள் தம்மையும் இயைத்து,
வயங்க லுற்றமூன் றுவனை வகுத்தது மாதோ: (௩)

சிரல் ஓர் பால்அமிழ்ந் தோர்புடைக் கிளம்பலே சிவணா,
ஒருபெ ருங்கவிப் பரிதியே, கிரீசினில் உதித்துத்,
திருமி இத்தலித் தேயத்துத் திகழ்ந்து, பின் செல்வம்
மருவும் இங்கிலாந் திடையுற்று வயங்கிற்று மன்னோ: (௪)

அந்த ஆதித்தன் தன்னிலே அகல்வுறு அளவும்,
உந்த வாரிதி பெருக்குவற் றொழிமட்டும், உருண்ட
இந்த மாநிலம், எலாம்வல இயக்குதற் கருத்தா
தந்த ஆற்றினே, அநிர்வின்றிச் சுழன்றிடு தனையும், (௫)

ஒக்க ஊக்கமோ டுறுநிறம் உளத்தினுக் குதவி
மிக்க இக்கவி கருத்துறும்; இவன்திரு மித்த
தக்க இந்தஞா பகப்பெருஞ் சாதனந் தானும்
தொக்க மாந்தர்க்கு நிலைத்தஅற் புதமெனத் துலங்கும்: ()

எனமு ஞேர்வியந் தெவனை எங் நூலைத் தினர்கள் ?
அம் பில்ட்டன்செய் அத்தகு சுவர்க்கநீங் கத்தை
மனிய தென்றமிழ் விருத்தத்தால் வகுக்கெனப் பெரியோர்.
பனிய சொற்றுணை கைக்கொண்டு பகர்ந்திடப் புகுந்தேன். ()

காதை நாயகன் கடவுளே; கதைநிகழ் களனே
மீத லத்தொடு பாதலம் பூதலம்; விடயம்,
பேதம் இன்றி, மாந் தருங்கெலாம் உரித்தெனப் பெரிதும்
ஓத நின்றகாப் பியத்திறன் அளியனோ உரைக்கேன். (அ)

நரியை எய்தகோல் உருவினும் நாண்தரும், கரிகொல்
அரியை எய்தது பிழைப்பினும் இழுக்கன்றென் றுன்னோர்
கரைவ துன்னியாற் கெளியன கழறுதல் தவிர்த்துப்
பெரிய இன்னகாப் பியமொழி பெயர்த்திடல் பெட்டேன். ()

வழுதி நாட்டிடை வளவநா டுற்றதே மானும்
பழுதில் சோழன்வந் தானெனும் பழம்பதி யோன்; அச்
செழிய நாட்டுறு சேரநா டெனத்திகழ் தென்னம்
பொழில் வளம்பொலி வெள்ளக்காற் புதுக்குடி புகுந்தோன்;

எமாது தொண்டைமண் டலகுலத் தினர்இரண் டிராமர்
சமானர், ஆனைமே வழகப்ப தராபதி தளவாய்
குமார சாமிவேந் திவர்கள்கோக் குடிச்சம்பந் தங்கொள்
பெமான்; மெய்ச் சுப்பிர மணியன் என் பெயரன்; என் பெய
ரன்: (கக)

சாற்றும அன்னவன் தனயன, என தனையன, எத் தலமும்
பொற்று மாப்புகழ்ப் பழநியப் பத்திருப் புனிதன்
தேற்றி என்னையுங் கலைபயிற் றியநன்றி சிந்தித் .
தேற்ற அர்ப்பிதம் அவற்கென இதைச்சமர்ப் பித்தேன். ()

புதல்வன் தந்தையை உவபபிக்கும் நிமித்தத்துப் புகன்ற
இதுவெ னும்முண்மை மனக்கொள்வ ரெனின்உயர் புலவர்,

குதலே வாய்மகார் ஈன்றவர் மகிழ்வுறக் குளறும்
அதனிற் குற்றம்ஆ யாமைபோல், இதனினும் ஆயார். (கங)

உரை மிலிட்டஆ தவன்கருத் தாயபே ரொளியுள்
விரவும் ஓர்சிறி தெளியனேன் வெண்மதி மீதே
அரிது வீழ்ந்திட அதன்பிர திபலமே யாகப்
பெரிய தாயவை யகமுற்ற நிம்மொழி பெயர்ப்பே. (கச)

கருத்தெ லாம்ஒரு வான்கவி கருத்துக்கள், கருத்தை
விரித்த சொல்லெலாம் ஒருமுனி வியன்சொற்க ளாக,
உரித்திற் கோட்டக்க திதனினெற் குண்டென்றும், உதனில்
தரித்த கோதுகள் பொறுக்கென்றும் சாற்றல்பே தைமையே.

பெரியர் கூறிய தென்னின்மற் பேதையர் பிதற்றும்
உரையும் கேட்பது கடனெனக் கேட்குவர் உலகோர்;
அரிய அங்கிலே யமாகவி அரசனைத் ததாயான்
கரைவ தற்குந்தம் செவிதரல் கலைஞர்க்கு முறையே. (கரு)

அமண் மதத்தசிந் தாமணி ஆதிநூல் ஏனைச்
சமய வாணரும் பேணுவர்; அன்னதே தகையக்,
கமைய யேசுவின் அடியவர் கலையன்றி யிதனை
மமர் இலாப்பிற மதத்தரும் போற்றுதல் வழக்கால். (கஎ)

# சுவர்க்க நீக்கம்

## முதற்காண்டம்.

மாறுடன் முனட் பரன்பணி கடந்ததும், மரணம்
ஆன வெப்பவன் தருஞ்சனதன் நுகர்ச்சியால் அவனிக்
கூன வன்றுயர் யாவையும் உடனுற மிருந்துந்
தான் அடைந்தது? அத்தவிர் மரக்கனி தனையும், (க)

பிழைத்த அம்முதல் நாளினூர் பெருந்தகை நரன்யாம்
இழந்த வுற்றதித் திபத்துவம் சுவர்க்கம் என்பனநம்
உழைத் தரூஉந்துணை ஒருவுமின் பதவியுங் குறித்துத்
தழைத்த பாடலால் என்றுடை நாவின்று சாற்றாய், (உ)

ஆதி ஆய்ந்தெடுத் தாண்டசா திபருங்கா திபினை
சோதி வானமும் பூமியும் தோன்றுரு வில்லாப்
பூதி யச்சமட் டியினின்றும் போந்தவா முதற்கண
ஓது வித்தஅவ் இடைத்தொழில் உடையமோ சேந்து, (௩)

மோடு யாவருங் காண்டகா வகைகெப்வ முகிலான்
மூட வுற்றஓ ரேப்புசி னுப்என மொழியும்
பீடு மேவிய சிகரமேற் பெரிதருள் சுரந்து
கேடு தீர்அருள் வாக்கருள் செய்தவா இசாய்! (௪)

ஆவயின் தனின் மிக்கினி யனவெனச் சீயோன்
மாவி லங்கலை, எருசலேம் எனும்நகர் மாட்டு
மேவும் ஆலயப் பாங்கின் விளங்குசீ லோவா
வாவி மையனத் துவந்தனை வதிந்தனை என்னில், (௫)

ஆய்கு நின்றருள், துணிந்*த' சாதாரண கதியோ
டோங்கி ரோம கிரேக்கர்செய் யுளினுயர்ந் துறவும்
ஈங்கி யாருங்கத் தியபத்தி யத்தினும் இயம்பாப்
பாங்கு டைப்பொருள் பாடவும் படருமென் கவிக்கே. (௬)

வேறு.

மக்கள் கைத்த லத்தி யற்றி வைத்த கோவில் யாவினும்
மிக்க தென்று வாய்மை தூய்மை மேய நெஞ்ச ஆலயம்
புக்க தேவ ஆவியே! புரிந்து யான்சொ லப்புகும்
தக்க காதை முற்றுமே தகத்தெ ரிந்து ளாயரோ, (௭)

ஆத லான், வி சேட மாக ஐய நீ,நி கழ்ந்தயான்
ஓதி டத்தெ ரித்தி, ஏதும் உள்ள நாய நாள்முதற்
பேதுறு துளாய்; புறு பிறங்கு தன்சி றகைக்குமேல்
ஏதம் ஓவு சிறைவி ரித்தி ருத்த தோற்றம் என்னவே, (அ)

உருவி லாஅ கண்ட பாத லத்து மீது றுதுநீள்
பரிய பார சிறைவி ரித்தி ருந்து, பாய பாதலம்
கருவு யிர்த்து யிர்க்க ணங்கள் காட்டி டச்செய் தாய்;என
நீ'ருஅ கத்தி ருண்ட யாவை அன்ன வைவ யக்கியும், (௯)

தாழ்ம னத்தி றன்கள் ஒக்கித் தாழ்ந்தி டாது தாங்கியும்,
ஏழை கூறு காதை மாண்புக் கேற்ப ஈறி லாதவன்
நாளில் ஞான மும்ம ளித்தர் மாட்டு நாதன் காட்டிய
வாறி நீத முந்தெ ரிக்கு மாற ருள்செய் வாயரோ. (௧0)

வேறு.

செப்பிய எர்முதற் சென்ன காரணர்,
ஒப்பிலான் பேரருள் உறப் பெற்றிடவர்,
எப்பெரும் போகமும் இனிது துய்த்திடும்
அப்பெரு வாழ்விடை அமர்தல் மேயவர், (௧௧)

---

* த'—தஅ; இதுபோலக் குறியிடப்பட்டு வரும் எழுத்துக்களை இவ்வாறே பொருளுக்கேற்பப் பிரித்துக்கொள்க.

விளங்கும்ஓர் பொருட்கன்றி வேறு பூவும்
இலங்கமில் பொருட்கெலாம் இறைமை ஏழும்
நிலக்கண்அவ் வொருபொருள் நிமித்தம் சாரற்
கலத்தகும் அடிமையின் கழுவு றிஇயரோ, (உரு)

மற்றிறை கற்பனை வரைக டக்குமா
முற்றிய காரணம் முதற்கட் சோறி,ஆழ்
பெற்றிய நிரயமும் பிரான் உலோகமும்
உற்றன ஒன்றும்நிற் கொளிப்ப தில்லையால். (கசு)

கருத்தனைப் பகைத்திழி கலகம் அன்னவர்
வருத்தனை யறச்செய வஞ்சம் முன்செய்த
ஒருத்தன்யா ரென்னில்,வெவ் வுரக ரூபங்கொள்
திருத்தவிர் நரகம்ஆள் தேவ தூதனே. (கஎ)

அனையவன் தான்,தன தகச்செ ருக்கினால்
தனையிறைப் பரற்பிறை தன் கணத்தொடும்,
வனையரும் இபற்பர மண்ட லத்தினின்
நினையலுற் றிரியுற இழிந்து வைகும்நாள், (கஅ)

மானவர் வாழ்வுகாண் மனப் பொறாமையின்
வானவன் மாட்டுள வயிரத் திற்கிளர்
ஈனவஞ் சத்தினால் யாவ ருக்கும்தாய்
ஆனவள் தனைமருட் டியவ னுமரோ. (கசு)

தன்னொடு சமானராம் தலைவர் தம்மினும்
உன்னத மாம்படு உள்ளத் துன்னினன்,
கொன்னுதன் படைத்துணை கொண் டெதிர்த்திடின்
மன்னுயர் வொப்பிலா வரதன் தன்னையும், (உ0)

ஒத்திட லாமென உளத்து நம்பினன்,
அத்தன துபாஅரி ஆத னத்தனும

இத்தகை கெழுமிய தானம் ஏதமில்
நித்திய நீதியான் நிருமி தஞ்செயூ
வைத்திருந் தனன், மூனம் வணங்கு தன்னையும்
பத்தியின் றெதிர்த்தஅப் பதித தூதர்க்கே. (௩௧)

இங்ஙனே அவர்க்குமுற் றிருளின் காப்பனே
தங்குவெஞ் சிறைக்களம் சமைபட் டுள்ளதால் ;
அங்கண்மா ஞாலத்தின் அகட்டி னுக்குமேர்
பொங்கும்அண் டச்சுவர்ப் புறத்தி னுக்குமே (௩௨)

இடைஉள தூரம திரண்டொ டொன்றினே,
அடல்கெழும் அவர்க்கென அமைத்து வைத்தஅப்
புடைஉள திறையவன் புடைநின் றும்மிருள்
உடைபர மண்டல ஒளியி னின்றுமே. (௩௩)

எவ்விடத் திருந்தனர் இரியுண் டார்கள், அச்
செவ்விடத் தினுக்குமிச் செவ்வி சேர்ந்துழல்
வெவ்விடக் கும்முள வேறு பாடந்தோ !
ஒவ்விட உரைப்பதொன் றொன்ற தரோ. (௩௪)

தன்னொடு தள்ளுண்டார், சாடு தீயின்ஆய்த்
துன்னுவெஞ் சூறையிற் சுழலும் பௌவத்திற்,
கொன்னுற அமிழ்ந்தமை குறித்து நோக்கினன்,
சொன்னஅத் தீயவன் துரித மாகவே. (௩௫)

வடுத்தரு பிழையினும் வலியி னுந்தனக்
கடுத்தவன், பிலித்தியா வதிற்பன் னுள்கழீஇத்
தொடுத்தபெ யல்செபு என்னச் சொல்பெயர்
எடுத்தவன், அயற்புரண் டிடலும் கண்டனன். (௩௬)

பிரதம பகைஞனும் பெட்பிற் சாத்தப்பேர்
பரஉல கினின்இடப் படும்அன் னன்பயங்

கரிச்சத் தங்கெடக் கழற்றி னன்இது
திரமொழி யாற்பெயல் செபுவை நோக்கியே. (௫௭)

வேறு.

"ஐய நீஅந்த ஆண்டகை யேயெனில்,
ஐய கோரவ் வளவுவீழ்ந் துற்றனை!
ஐய ஒள்ளிய ஆனந்த நாட்டொளிர்
ஐயர் பல்பதி னாயிரர் மட்கவே, (௫௮)

நவ உயர்ந்த சவியின் விளங்கிய
அவனின் எவ்வள வம்மமா றுற்றனை:
ஒவி ஒருப்படும் ஓர்உடம் பாட்டொடும்,
செவிய ஐக்கிய நோக்கமுஞ் சிந்தையும், (௫௯)

மன்ற மாண்பு மருவம்மு யற்சியில்
துன்ற பாயம்நம் பிக்கையின் துல்லியம்
ஒன்று பாகமும் ஒக்கஎன் றன்னொடும்
அன்று சேர்த்திட்ட அன்னனே நீயெனில், (௬௰)

இன்றோர் தோல்வியின் ஏய்சம நாசமும்
உன்ற னைபெயொ டொன்றுறச் செய்ததால்:
துனறெம் மட்டுயர் தூவிடம் நின்றெமட்
டொன்று தாழிடம் வீழ்ந்துறு கின்றனெம்; (௬௧)

இடையிற் றூரம், எறுழ், நமின் எத்துணை
உடையன் அன்னன், உருமுப் படைகொளும்
அடைவின், என்பது காட்டிடும்; அப்படைத்
திடம் அதன்முன் தெரிந்தவர் யாவரோ. (௬௨)

ஆயி னும்மவ் வடற்படைக் காதல், மைந்
தேய அத்தகு வென்றியன் இன்னமும்
காய் சினத்திற் கடவெதற் காதல் யான்
பாய நெஞ்சம் பயங்கது வுற்றரோ, (௬௩)

செய்த செய்கை பிழையெனச் சிந்தையிற்
பைதல் உற்றிட வேணும்,— பசுங்கதிர்
மெய்தி ரிந்தும் வியத்தக மாறுபா
டெய்தி டாத்திட சித்தத் தினையுமே, (சுச)

எனு துயர்ந்த தகைமை யினைஅனுன்
அநாய மாக அவமதி செய்தமை
உனு எழுங்கடுங் கோபத் துதித்தவன்
தனுது பாலுறும் சிந்தை தனையுமே, (சுரு)

மாற்ற வேணும்,— கருதிலன் : மற்றஅச்
சீற்ற மே, எத் திறத்தரி னுந்திறம்
ஏற்றமா உடை யானொடும் ஏற்றபோர்
ஆற்ற என்னை அமைத்ததும் அன்றியே, (சுசு)

சீறி ஆர்க்கும்அத் தீஎழு போரிடை
ஏறும் ஆயுத பாணியர் எண்ணிலர்
வீறு மேவிய விண்ணவ ராயவர்
தேடி என்னொடும் சேர்தரச் செய்ததே. (சுஎ)

ஆய தேவர் துணிந்தன ராய், அவன்
நாய கத்தை வெறுத்தனர் நன்கெனை
ஏயும் அன்னவன் தன்னினும் ஏற்றமா
வாயும் நாயக னாக மதித்தரோ, (சுஅ)

மன் பெரும்பர மண்டலத் தோர்வெளித்
துன் பறந்தலை துன்னுபு, தோற்பவர்
இன்ப வென்றியர் யாரென் றயிர்ப்புற
வன்ப மைந்து மலைத்தவெம் போரினே, (சுகூ)

சாற்றும் அன்னவன் சத்தியுட் சான்றதாம்
ஆற்ற லுக்கெதிர் ஆற்றல் கொளீஇஎதிர்

ஏற்ற னன்அரி ஏற்றனை யின்னிலை
மாற்றிக் கம்பம் மருவச்செய் தாரரோ. (௫0)

அனைய போரிடைத் தோல்வி அடைந்தனென்
எனினும், யாவும் இழந்தனென் இல்லை:எள்
தனையும் யாரும் அடக்கரும் தன்மைய
மனமொ டூஞ்சலஞ் சாதிக்கும் வாஞ்சையும், (௫௧)

மாள்வில் வன்பகை மையொடோர் போழ்தினும்
தாழ்தல் அல்ல நிணங்கல் தவிர்த்திடும்
காழ்கொள் தீரமும் அன்றிப் பகைஞரால்
வீழ்வு றாமைக்கு வேண்டுவ மற்றவும் (௫௨)

உடைய மேன்மை, உறுசினத் தாயினும்
அடலி னனும்,அ வன்வலி திறப்பறித்
திடவொ ணோன்ஒருக் காலும். இவ் வெள்ளதோள்
மிடலி னுக்கு வெரீஇச்சற்று முன்பரோ, (௫௩)

தன்ன தாட்சி இனித்தரிக் குங்கொலோ
என்ன ஐயமுற் றுனே இறைஞ்சுபு
முன்னர் என்றன் முழுந்தாள் படியிடூஉ
மன்னி யென்ன வழுங்குதல் செய்தரோ, (௫௪)

அனையன் ஆற்றல்தெய் வீகத்த தாமென
மனதிற் கோடல்கீழ் மைத்ததே; மற்றஃ
தினைய வீழ்இவ் விழிகதி தன்னினும்
நனி இழுக்கொடு நாணமும் நல்குமே. (௫௫)

தேவ தூதுவர் திண்மையும், திவ்வியம்
ஆவ கொண்டமை அன்னவர் ஒள்ளிய
தாவில் மேனியும், சத்தம், ஊழினல்,
வீவு றுத்தகை மேவுத லானுமே, (௫௬)

நிகழ்ந்த போரிடை நேர்ந்த விளைவினால்
அகம் படிந்த அனுபவம் நம்மசே
வகங்கு றைத்தில தாய்வரு முன்னறி
வுநந்து சால உதவிய தானுமே, (ருஎ)

இனிச் சயத்தினை எய்துதல் முன்னினும்
நனிச்ச யம்மெனும் நம்பிக்கை கொண்டுநாம்,
நுனிச்ச மாப்படை நோன்மையி னென்னினும்,
தனிச்ச வெய்யவஞ் சத்தினு லேனுமே, (ருஅ)

இன்று வென்றிகொண் டேமுற் றருள்ஒரீஇ
மன்ற வான்தனி ஆளுநம் மாத்தெவுக்
கொன்றலா என்றும் ஓயகி லாதபோர்
துன்ற ஆற்றத் துணிந்திட லாமரோ. (ருகூ)

வேறு.

இன்னணம் நெடுமொழி இரைந் தறைந்தனன்,
உன்னருஞ் சஞ்சலம் உழந்து மாழ்கியும்,
அன்ன பாடண்டன். மற் றவற்கஞ் சாச்சகன்
பின்வரு மாறெதிர் பேசி னனரோ. (சுO)

வேறு.

"அரசர்க ளேறே! உன்றன் ஆணையின் ஆற்றற் பந்திச் [கை
சுரதளம் நடவி, வெம்போர் தொடுக்குபு, துண்ணென் செய்
வெருவிலர், மிகும்ஆ பத்துள் விண்ணுல கினுக்கு நித்த
நிருபனைப் புகுத்தன் னோன்ம கோன்னத நிலைமை மன்னோ

சிங்கல்இல் வலியா னேதற் செயலினு னேஊழ் பூனோ
தங்கிய தெனச்சொ திப்பான் தாக்கின மடங்க லேற்றுத்
துங்கஆ தனத்த னேக சூரர்க்கோர் தலைவ! துக்கம்
பொங்குற இரிய லுற்றுப் புன்மைசேர் தோல்வி யெய்தா ()

பரவுல கிழக்க யாமிப் பருவலிப் படைகள் யாவும்
வெருவர அழிந்திவ் வாறு வீழ்ந்தயர்ந் துற,அப் போரில்

மருவுநீ முடிவைச் சால மனன்உறத் தெளிய நோக்கித்
தெருமரல் உறுகின் றேன். அத் தெய்வதச் சேனை, அந்தோ!

தேவரும் தேவத்தன்மை சிவணிய பொருள்கள் என்ப
யாவும்எவ் வளவை நாசம் எய்துறும் தகைய அந்த
வீவுமே வினா;மேல் வீவு மேவில: என்னை எனில், யாம்
மேவுமெய்த் தேசு முற்றும் விளிந்தும், இன் பந்து வாழ்தல்

ஈங்குறும் முடிவில் துன்பத் திடைஅமிழ்ந் தறழிந்தும்,
ஓங்கிய உள்ளம் ஓவா ஊக்கத்தோ டொருவ ராலும்
ஆங்கடக் கரிதா யுள்ள தடான்றுநம் ஆற்றல் நந்தம்
;
பாங்குதா ழாது மீளும் பான்மைத்தா யுள்ள தன்றே. (கரு)

என்னினும், யாவும் வன்மை இன்றிஅத் தகுநந் தானை [ன்
அன்னணம் சிதைக்க வொண்ணு தாதலின் எல்லாம் வல்லா
என்ன,வே றெண்ண மாட்டா தின்றுநான் என்று நின்ற
,
முன்னமை வென்றோன், ஆவி மொய்வலி முழுமை யாக ( )

எஞ்சிட நமது பால்விட் டிருத்தல்,நம் திறத்தின் அன்னோன்
நெஞ்சுறு கறுவு தீர நெடுந்துயர் நாம் உழந்து
மஞ்சொடு தாங்கற் கேனும், மற்றவன் போரிற் கொண்ட
வெஞ்சிறைத் தொழும்ப ராஇவ் வெவ்விய நிரய நாப்பண் ( )

தீபிடைக் கடிய வேலை செய்திடல் அந்த காரம்
மேயின பாத லத்தில் வேவினர் தொழில் இயற்றல்
ஆயஎவ் வேவ லேயும் அனையவன் இச்சை ஆறே
ஏயது புரிதற் கேனும் எனில், பயன் அதனைல் என்னே?(கஅ)

அன்றியும் குறைவு றாத ஆற்றலும் ஈறில் வாழ்வும்
ஒன்றிய தாழி தானும உலப்பினும் உலவாத் தண்டம்
,
கன்றியாம உடைந்தற் கென்னில், கழறுவாய் அதனைல் யாது
நன்றென ஓம்,வை சாசர் நாயகன் நவில்வான் வல்லே. (க௯)

வேறு.

தொன்மை மேனிலை யொழிந்துள தூத, எத் திறத்தும்
வன்மை உண்மையின் மனக்களிப் படைதரற் பாலேம்;
மென்மை, செய்படு வினைத்துவத் தெஃதுமே வுழியும்,
புன்மை ஆர்அருர் புணர்க்குறும் தகையது காண்டி. (எ0)

ஈது நிற்க. யான் இசைப்பது திறமெனக் கோடி :
ஏதும் நன்றொரு போதும்யாம் இயற்றுகேம் அல்லேம்;
தீது, நாம்எதிர் தெவ்வெறுத் திடும்தகைத் தால், எப்
போதும் மற்றது புரிவதே நமக்கினி தாமால். (எக)

ஆயி னும்மவன் எதிர்அறி அறிவினால் யாம்செய்
தீய நின்றுநன் றெய்துமா சிந்திப்பின், அவ்வா
றேயொ ழுதுமாற் றிடுதலும் நலன்நின்று தீது
வாய ஆற்றலும் ஆகநம் மாறிலாப் பணியே. (எ௨)

என்னி னைப்பது பிசகில தெனின், இவா றியற்றல்,
இன்னல் அன்னவன் எய்தப்பல் முறைஇழைத் தன்னான்
உன்னும் உட்கருத் துன்னுமா றுறப்பெறு ஆக்கிப்
பின்னம் உற்றிடச் செய்யலாம் பெற்றிமை உடைத்தால். ()

தெறு சினத்தினன், நந்தமைச் செயித்துளோன், சிந்தைக்
கறுவு தீர்த்திடு, நமைத்தொடர், கருவிகள் யாவும்
மறுவ லும்பர மண்டல வாய்தலிற் போய்ப்புக்
குறு திறம்பணித் தனன்; உது நோக்குதி உற்றே. எச()

வான் விளிம்பினின் றியாம்விழும் அமையத்து மறுகி
மேல் நிவந்துறக் கொதித்தஇவ் வெவ்வழல் வேலை
தான டங்கின தால், நமைச் சாடுற விடுத்த
ஆன கந்தக ஆலிமா மழைஅகன் றமையால். (எரு)

செம் மினாற்சிறைத் தீவிர வேகவெவ் வசனி
அம்ம தாக்கிடு விசையெலாம் அற்றது போலும்;

இம் மகாஎலே இலாதபா தலமெலாம் இரைத்துச்
சும்மை செய்தல்இப் பொழுதொழிந் துள்ளதை யன்றே. ()

அற்றம் வாய்த்தது, நமதடை யலற்குநம் திறத்தின்
உற்ற தோரிகழ்ச் சியினெனி னும்முறச் செலுத்தி
யிற்ற கோபத்தின் என்னினும் ஆகுக, இன்னே
மற்ற வற்றம்நாம் வழுவுறா வகைசெயல் வேண்டும். (எஎ)

பார்க்கின் றுய்கொல் அதோ!மனம் பதைக்கும்பாழ் வெளி
ஏர்க்கும் நாசத்துக் குறையுளே, இறப்பமட் கியதாக் [மை,
கார்க் குறூஉச்சுடர் கால்பயங் கரஒளி அன்றி
ஆர்க்கும் வேறொளி யாதுமில் லாதவை அம்மா! (எஅ)

இங்கு யாம்உழி தரப்புரி இவ்வெரி அலைநீத்
தங்கு சேறும்; செலீஇஇவேப் பாறுமா றுண்டுத்
தங்கு மேல்அயர் வுயிர்க்குதும்; தவச்சித றுண்டு
வெங்கண் உற்றுள படைமைபமீட் டொருவழிச் சேர்த்தே, ()

ஈது தொட்டுநம் பகைஞனை இதனின்மேல் இலையென்
றோது வெய்யதொந் தரைஉறுத் துதலும்உற் றுளநம்
சேத நீத்திடு தலுமிந்தத் தியஆ பத்தாம்
ஏத மாற்றுத லும்பெவா றியற்றலாம் எனவும், (அ0)

நன்மை எய்துறும் எனும்நம்பிக் கையின்எவன் புதிய
வன்ம னேதிடம் அடையலாம் எனவுமற் றதுவும்
இன்மை யேல்நிரா சையினின்றும் எத்தகைத் துணிவு
துன்ன லாம்என வும்மியாம் கலந்துசூழ்ந் திடுவாம்." (அக)

வேறு.

சாத்தன், இன்னணம் அயலுறு சகன்முகன் நோக்கினன்
இவைசாற்றித்—தீத்த ரங்கமேல் நிமிர்த்திய சிரமுறச், சேநத
தீப் பொறிகான்று—நேத்தி ரந்தயங் குற,உடல் ஆன்றதாய்

நீளிதாய் நெடுந்தூரம்—நீத்த மீக்கவி ழாமித வாஉற, நெடிது மேவினன்மன்னே. (அஉ)

காத்திரத்தின்அன் னோன்,தொனூல் மிகப்பெரும் காத திர ரெனக்கூறும்—ஏத்து விண்பிறந் துறுதயித் தானியர், சூப் பித்த ரினையேற்ற—பூத்த லேச்சனிப் புறுதயித் தியர்பிரை யாரிசு, பூர்வீகம்—வாய்த்த தாரசு நகர்க்கயல் உறுகுகை வதி தைவன், இவர்நேர்ந்தான்: (அங)

அன்றி ஆழியிற் சரிபபன எவற்றினும் ஆற்றவும் பெருந் தேகம்—துன்ற ஈசன்ஆக் கியலெவி யதனெனச் சொல்பிரா ணியையொத்தான்.—மன்ற (வாரியாத் திரிகர்கள் வியப்புற வருந்திடு மாறே)அவ்—வென்றி மீனம், நார் வேப்புறத் தார்த் தெழும் வெம்பெரும் கடல்மீதே, (அச)

வருத்தம் இன்றித்தன் னிபல்பினிற் றுயின்றிட, வளரிரு ளிடைப்பட்டுத்,—தரித்த எல்லியிற், செலவுறுங் குறுசிறு தனி க்கல மீகாமர்—கருத்தின் ஈதொரு தீவெனக் கருதிப்பல் காற் றமை நங்கூரம்—உரத்த அன்னதன் செதிள்பொதி சருமத்தின் உறுவிடுறு வினராக, (அரு)

பொங்கு கங்குல்கார்ப் படாம்கொடு கடலினைப் போர்த் திட நனிவெட்ட—துங்க வைகறை உறுதுபா ணித்திடு துணை யுமோ துறுங்காற்றுக்—கங்கொ துக்குற அதன்அயல் அமர்வ ரால்; அச்சல சாம்போன்று—வெங்கண் மணீணா நா யகன்தவ நீளிய மேனிவார்ந் துறமன்னே, (அசு)

அழல்செய் வேலைமீக் கிடந்தனன் தளைஉறீஇ; அவணின் றும் எந்நாளும்—எழுதல் செய்யவென் னினுஞ்சிர நிமிர்த்திட வென்னினும் வல்லானுய்க்—கழிவ னென்றென்றும், கருதிய வினை கனைதடை யின்றுற்ற—முழுதும் ஆள்பரன் திருவுளத் தநுஞையை முயங்கில னெனின் மாதே. (அஎ)

அன்ன ணம்பரன் அநுமதி யளித்தது, அனையவன் நீங்கேனோர்—துன்னு வான்முயல் காலேயில் அவன்மிகத் தொடுத்துச்செய் பிழையாற்ருன்—மன்னு தண்டமிக் கெய்த வும், மற்றுந்தன் வன்மமெல் லாம்,தன்னுல்—பன்னு தீவழி யதனிடைச் செலுத்திடப் பட்டமா னுடனுய்கே, (அஅ)

முடிவில் நன்மையும் கருணையும் இரக்கமும் முழுமுதல் அருள்செய்யும்—படிஇ ழைத்தகன் றிருமுன்பு தனக்குச்சம் பவித்திருந் தவற்றின்மும்—மடிக நித்துறு நிலேருலே யும்பா மன்சின முஞ்செய்த—கொடுவினேப்பய னுந்தவ உறுந்ததும் கொதித்துநோக் கவுமன்றே. (அகூ)

அனைய வேலேகின் றெல்லேயின் அவன்தன தாற்றவும் பேராக்கை—யினே நிமிர்த்தினன்; நிமிர்த்தலும் இருபுடை யி னும்பினர்த் துரத்துண்ட—கனல்சு வாலேகள், கூம்பிய நாமசி கை கனேச்சரிந் திடக்கான்று—பனுத ரங்கமாய்ச் சுருண்டி டை யினின்வெருஉம் பள்ளஞ்செய் தனவன்றே. (௯௦)

பின்ன னுன்விரி சிறையொடும் மேக்குறப் பெயர்ந்திருள் நிறவாயு—முன்ன நிந்திலாப் பொறையவன் மெய்யின்கீழ் முயங்கிப்பெய் தாசிற்ப—அன்ன தன்மிசைக் கவிழ்ந்துறீஇப் பற ந்தனன், அம்மமுன் சொனதாய—வன்னி வேலேவெவ் நிரவத் திக் கொண்டுசு வாலேசெய் தெனமன்னோ, (௯௧)

மருவு கட்டியங் கியின்விடா தெரிவதை வன்னிலம் எனலாமேல்—தரை யெனப்பெறும் தகையவன் றலத்திழிந் தனன் .நிறத் த் துமாதோ—பெருநி லத்துள்நின் றெழுஞ்சண்ட மாருதம் பிலோரசு முனைநின்றும்—ஒருருவட்டி னேப் பறித்த லும் பறியுண்ட உழையினே நிகர்த்தன்றே; (௯௨)

அன்றி வெவ்விடி எனப்பிளி றெத்திறு அடுக்கலின் தகர் பக்கம்—நின்றோர் குன்றைஅவ் வளிவிசைத் தெறிந்திட,

நிறையஇந் தனம்ஏய்ந்து—கன்று நீக்கது வியல்பின்அம் மலை க்குடர்,கால்விசை யாற்றீழுண்—டொன்றுவேகத்தா துப்பொ ருள் தம்மின்மேக் குற்றுந்த ஊனைக்கே (கூங)

விஞ்சு றுங்கடுப் புதவிக்கீழ் மிகுந்திட விடுத்திட்ட கருக் குண்ட—மிஞ்சு ஊன்மணத் தத்தகா பக்கமே விழைந்ததத் தகுதானம்—தஞ்சம் ஈசன்தந் திடப்பெறுன் தாள்இணை தங் கிடம் ஆயிற்றவ்—வஞ்ச னைத்தொடர்ந் தடைந்தனன் அவண் அவன் மருங்குறு சகன்மாதோ. (கூச)

அனைய தன்மையர் இருவரும் நிரையத்தின் அமர்தரும் எரி வேலை—தனைய கன்றுதப் பினமை,தெய் வத்தகை தாழு டை மையினும்முன்—இனைய லுற்றிழந் துளவலி மீளவும் இசைந்தமை யினுமன்றி—மனு பரம்பரன் அருளின்அன் றெ னஇறு மாந்தனர் தழுள்மன்னே. (கூரு)

வேறு.

"இன்ன நாடோ, இந்நிலமோ, இவ்வெங் குளிரும் வெப் பும்உறும்—இன்ன இடங்கொல் லோதுறக்கத் திடா யாமேற் றிடக்கடவேம்—இன்னல் தரும்இவ் விருளோஅவ் வெல்லுக் கிணையா ஏற்பதும்" என்—றின்ன காலை அழிந்துளதா துவர் கோன் இயம்பிப் பினும்இசைப்பான். (கூசா)

"நன்றற் றுக, இன்றிறையா நண்ணும் அன்னோன் எது நீதி—என்று விதிக்க விதித்தபடி இயைக்க வல்லான் ஆதலி னால்.—ஒன்றும் மனோதத் துவங்களின்ஒத் தூற்ற மதனால் நமின்மேலாத்—துன்றும் அவன்பால் நின்றுநெடுந் தூரத் திரு த்தல் நனிநன்றே. (கூஎ)

தருக விடைநீர் களிப்பென்றும் தங்கும் ஆனந் தத்தலங் காள்!—வருக வருக பயங்கரங்காள்! வருக தாழ்ந்த பிலஉலகே!

—அரிய ஆழ நரகே'கா லத்தான் இடத்தான் மாறிடுதல்—மரு வா மனத்தேன் நின்புதுக்கா வலனேன் வரவேற் றிடுவாய.

மனமே தனக்கு வாழிடமாம், மனம்தன் னுள்ளே பவர்க் கத்தைத் — துனுவான் சுவர்க்க மதுவாக்கச் சுவர்க்கம் பவர்க் கம் ஆக்கவல்லும்.—தவரிவான் உருமின் எவரின்உயர்ந்தோன் தனக்குத் தாழ்வாம் தாழ்வொழிய—எனவாற் றுனும் குறை யில்லா திருக்கும் முறையே உளென்என்னிவ், (கககூ)

முன்னம் இருந்த படியென்றும் முற்றும் உளெனேல்,யாங் கணியான்—மன்னி யிடினும் அதனுலென் ? மற்றிங் கெனி னும் சுவாதீனம்—துன்னி வாழ்தும். இங்கணியாம் துய்க்க நோக்கி அழுக்கறுக்கும்—அன்ன பொருள்ஒன் றும்படைத் தான் அல்லான் எல்லாம் வல்லானே. (கOO)

இங்கு நின்று நமைத்துரத்தான்; யாம்ஓர் கவற்சி யிலா தாட்சி—இங்கு புரிய லாம்;நரகின் எனினும் இறைமை நயத் தகும்;ஈ—திங்கென் கருத்தால்; வானிடைத்தொண் டியற்று குடியா வாழ்தலினும்—இங்கு நிரயத் திறையவனு ஏய்தல் இனிய திெனியதரோ. (கOக)

இதுநின் றிடுக. நமதுமனக் கியைந்த உணமைத் துணைவர் தமைப்—பொதுவில் நம்மோ டிவ்வழிவு பொருந்தி னோை இவ்வாறு—மதிமா றாந்து (தற்சேர்ந்தார் மறப்பெய் துநச் செய்)இந்நீத்தம்—அதன்மீக் கிடக்க விடுத்தும்,-யாம் அமர்இவ் வல்லற் றலத்திடையே (கOஉ)

அடையற் பால பருந்துநம்மோ டடைதற் கேனும், சித ர்ந்துள்ள—படையைச் சேர்த்தி உயர்துறக்கப் பால்மீட் பன மீட் டிடஅலது—சுடும்பிப் பவர்க்கத் திடைத்தோற்ப தோற்க இனும்ஓர் முறைமுயல்வுற்—றிடுதற் கேனும்,அழையாமே தா ழ்த்தும்,- இருப்ப தெவன்கொல்லோ ?'' (கOங)

வேறு.

இன்னணஞ் சாத்தன் இயம்பப் பெயல்செபு என்பவன்
எதிர்மொழிவான்—"என்னவும் வல்லவன் அலதேவ ருக்கும்
வென் றிட்டமை யொண்ணாத—மின்னு தளத்தலை வா! (யாம்
சற்றுமுன் மேவிய வாறே)மா—உன்னதம் நின்றவர் வீழ்ந்
துள தன்மையை உன்னும் இடத்தினரோ (௧௦௪)

அதிசயம் அன்றெனை அற்புழி பிரமையொ டவ்வெரி
அலைமேலால்—இதுபொழு திழிதரு கிடையின் மரீஇயினர்
என்னினும், ஆபத்தும்—விதிர்பய முட்பல மேவுழி ஊக்கம்
மிகுந்து விளைத்ததனை—சதுவுநம் பிக்கை கடந்தசெவ் வியிற்
பல யாற்செவி யுற்றதனை (௧௦௫)

எங்களைத் தத்தொனி யினும் அவர் கன்கறித் திடும் அறி குறி
த்தொனியாய்—முந்துதெவ் வைரஎதிர் மோதும யத்தமர்
முனைமின் முர்க்ததனை—அந்த உன் வாய்த்தொனி யதையொ
ரு முறைகேட் டனரெனின், நூதனமா—உந்து மனோதிட
மொடு தொலை மெய்வலி ஒல்லையின் உறுவரரோ." (௧௦௬)

வேறு.

இன்னது கூறி முடித்ததோ இலையோ எனுமுனங் கூளி
கட் கிறைவன்—மின்னிடு வானத் தியற்றுண்டு விருத்தம் மே
வுபு திணமையும் வாய்ந்து—துன்னிய பாரப் பெரும்பரும் பரி
சை கோடக்குண்டு சுவல்நின்று நாலப்—பன்னிய எரிவெங்
கடற்கரை நோக்கிப் படர்ந்தனன் விரைவொடு மாதோ. ()

தக்கணி நாடன் கலிலியோ என்னும் சாத்திரி பிசோலி
யங் குன்றின்—மிக்குயர் தான மீதிருந் தானும்,மேயஆர் நோ
வின் தாழ் படிகர்—புக்குநின் றானும், புகர்உறு தனது பொழி
நிலா மண்டல மதனில்—தொக்கமுன் காண நிலம்நதி மலை
கள் தோன்றுவ காணும் அ தாத்தால், (௧௦௮)

சேய்த்தின் ஆர் பொருள்கள் அண்ணிய வாகத் தெரித்
திடு கருவியின் உதவி—வாய்த்து மாலையின்கண் நோக்கிடப்
பெற்ற வட்டவான் மதிகிரர்ந் ததை, அச்—சாத்திரம் மாத் தோ
ளில் தூங்குகே டகத்தின் தடங்கொள்மண் டலவடி. வம்மா.
—ஏத்தும் ஆயவன்கை ஈட்டியி னோடும் இசைபவுற நோக்குற
மிடத்தே, (௧௦௯)

மாக்கலத் தரசொன் றினுக்கியை கூம்பு வகுக்குமா குறை
த்தார் வேயின்—பொருப்பமர் பரம்பா விணுமுயர் விருக்கம்
புன்தண்டே ஆகும். நீல் வானத்—தரைக்கண்முன் இனிது
சரித்தல்போலாது தளர்நடை கொளீஇ அழற் றரைமேற்—
பெருத்ததள் ளாட்டம் தவிர்க்க அவ் வீட்டி பிடித்தனன்
ஊன்றினன் நடந்தான். (௧௧௦)

தீயின்வெஞ் சுவாலை விதானஞ்செய் விண்கீழ்ச் செறி
வெளி தவச்சுடப் பெற்றான்—ஆயினும் அவ்வெப் பாதிய
பொறுத்தல் ஆற்றினன், அனையவன், அந்தக்—காயழற்
கடலின் கரைமிசை நின்று, கருத்தழிந் தவராய்க் கிடக்கை
—மேயின தனது தெய்வதப் படையை விளித்தனன், அழை
த்திடு காறும். (௧௧௧)

கான் அடர் விருக்கத் துயரிய வளர்ந்த கப்பிணம் பின்னிக்
கா வணஞ்செய்—தானமாம் வாலம் புரோசத்தின் நதிகள் தம்
மிசை இலையுதிர் பருவம், ஆனகா லத்துச் செறிசருகென்ன
அவர்குழீஇக் கிடந்தனர்; அன்றி—ஈனமோ சஞ்சேர் பகை
மையிற் பார்வோன், இவுளிமா வீரர்களோடுமே (௧௧௨)

அன்னிய தேச வாசராக் கோசேன் அமர்வுற்ற இசர
வேலர்கள்—பின்னுறத் தொடர்கால், இவர், கரை யேறப் பெற்
றனர், அவர்பிணத் திரளும்—சின்னபின் னஞ்சேர் தேருருட்
டிரளும் சிதறின மிதந்திடக் காணத்—தன்னலை களினால் அ
வரைஆழ்த் திட்ட தகையசெங் கடலினை மாதோ (௧௧௩)

அடர்விசை வளியால், படைகொள் ஓரியன்தான், அலமரச் செய்யுங்கால், அந்தக்—கடல்மிசைச் சிதறிக் கிடக்கும்பாசியையும் கடுத்தனர்; வீழ்வழி வெய்தி—உடல்பயங் கரவிகாரமுறுயர் தமையின் உறுமலைப் பொடும்அழற் கடல்மேல்—மிடைவுறீஇப் பொதிந்து கிடந்தனர்: அவரை விளித்தனன் பிலம்எதி ரொலிக்க. (கககூ)

"அரசர்காள்! ஆதி பந்தியத் தீர்காள்! அடுபடை வீரர்காள்! சுவர்க்கம்—விரவுமெர வரினும் சிரேட்டர்காள்! முன் அவ் விண்ணுளீர், இனிஇழந் தவரோ—மருவிய நித்த ஆவியர் தமையிம் மலைப்பக லாதுறின்; மற்றவ்—வரஉல கத்துப் படுகர்போ லிதிற்கண் வளர்கின்றீர் இனிதினே அதனால் (ககரு)

செருஇடை உழந்த சிரமத்தின் அயர்ச்சி சேர்ந்தநும் ஆற்றல்அத் தளர்ச்சி—ஒருவஇங் கிளைப்பா றுறக்குறித் தனிரோ? உமைச்செயித் தோனேயிவ் விழிவு—தருகிடக் கையினே வணக்கஞ்செய் வான்நும் தம்முளே உறுதிசெய் தனிரோ?—[புரிசெயல் யாவும் தவிர்ந்தனிர் கிடக்கை பொருந்தினீர் புகலுவீர் மாதோ.] (ககசு)

அவ்விசய யத்தோன், தெய்வத கணம், தம் அரும்படைக் கலத்தொடு கொடிகள்—எவ்வயின் களினும் சிதறின கிடக்க, எரிக்கடல் மிசைச் சுழல் வுற்றுக்—கவ்வையிற் கிடக்கை காண்கின்றான். அன்னோன் கடியவே கப்படை வீரர்—செவ் விசை தெனவான் வாய்தவி னின்று தெரிந்தனர், உடனிவண் இழியா, (ககஎ)

இழிதக வெய்த இன்னதோர் கிடக்கை யினிற்கிடந் திடு நமே லேறிக்—கழியவும் மிதித்துத் துகைப்பர்; அதாஅன்றிக் கடற்பள்ளத் தழுந்துபு கழியா—அழிவுற அசனித் தொடரின் யாத் தமிழ்ப்பர்; ஆகலின், அயர்ச்சியை நீத்து, விழிமின்கள், எழுங்கள் அன்றெனின் என்றும் விழுந்தவா கிடந்திடு வீரே."

வேறு.

என்ற சொற்செவி ஏற வே,அவர் ஏன்ற காவலில் தூங்குபு—நின்ற சேவகர் அஞ்சு நாயகர் நேரிற் காண்டலும் நித்திரை—நன்று நீங்குறு முன்வி ரைந்து நடுக்கொ டும்மெழுந்தாங்கு,நாண்—ஒன்றி ஒல்லையின் ணிற்சி றைவிரித் துக்குதித்தெழுந் தாரரோ. (கககூ)

எழுந்த எண்ணிறந் தார்கள்,தீநிலை ஏய்ந்த தங்கறி யாரலர்—அழுங்க வாட்டும் உபாதி யும்அறி யார்கள் அல்லர்க ளானுங்கோன்—வழங்கு சொற்பணிந் தேகி வானிடை வட்டமிட்டுக் குழீஇனார்,—கெழும்ப வர்க்க முகட்டின் கீழ், உம்பர் கீழ்அ யற்கனல் சூழவே. (க௨O)

முன்ன கித்துதே யத்தின் தீயநாள், மோசே தன்கையின் மொய்ம்பொடு—மன்னு தண்டைத் தரைக்கண் நீட்டி வருத்த, வக்கிர மாகவே — பன்னு கீழ்வளி யொடுப றந்துபாடண்ட பார்வோன்றன் நாட்டின்மேல்—தென் இராளென நின்று, நீல்நதித் திரம் முற்றும் இருட்டவே (க௨க)

செய்த வெட்டுக் கிளிக் கரும்குயின் செவ்வி தொர்ந்துவிண் ஆர்ந்தனர்.—வெய்தன் ஞர்பெருங் கோன்தன் ஈட்டியை மேக்கு யர்த்தி விதிர்த்திடா—ஐது செல்திசை யைக்குறிக்க, அசைவி லாது,திண் கந்தகப்—எய்து கல்லின் இறங்கி மூடினர் ஏய அவ்வெளி யாவுமே. (க௨௨)

குடி மிடைந்த வடாது திக்கின் கொடுங் குளிர்ப்பனி தோய்வயின்—இடமி ருந்து,முன் தானி யூப்பொடி றையின் மாநதி தாய்த்தென்பால்—கெடும் உகாந்தவெள் ளம்மெனப் பம்பிக் கிப்பி ராற்றி னுக்குந்தென்—புடையின் ஆபிரிக் காச்சுரம்வரை போமி லேச்சர் குழாமுமே (க௨௩)

பிவணி லாதத் தறைக்கண் மொய்படை சேர்பெரும் சிறு யூகங்கள்—சிவரும் ஆதிபர், தத்தம் யூகத்தி னின்று, தம்பெரு நாயகன்—எவணிநின் முன்னெ நாடுமு, அவண் எய்தினர்; உரு வத்தினுல்—உவமம் ஆகுவர் தேவ ருக்குயர் வாவர் மானுட ருக்கரோ. (கஉச)

வானின் முன்அரி ஆத னத்து வதிந்த ராச மகத்துவர் —ஆன மாஅதி கார ஆதிபர் ஆயி னும்மவர் பேர்வினின்— மான சாதனம் ஒன்றி னும்இலே, வானின் முன்செய் கலாதி யால்—வான வர்திரு நாம அட்ட வணையின் நீக்குனு மாற்றி னே.

இனுமே வாளெச்ச மாம னித்தரால் ஏய் புதுப்பெயர் பெற்றிலர்.—பினர்,சிராமயன் மனுடர் பத்திமைப் பெற்றி சோதிக்கு மாறருள்—புனித மார்சம தங்கி டைத்தலிற் பூமி யெங்கும்போய், வஞ்சத்தால்—பனுவெம் பொய்யினுல் மக்க ளுட்பெரும் பாலர்த் திவழி உய்த்தரோ, (கஉசு)

அவர்தம் சிட்டிக ளுங்க ருத்தன்தொண் டன்ன வர்கை விடச்செயூ—அவர்கள் உற்பவ கார ணத்தின் அருந்தெய் வி கத் தகைமையை—அவர்வி ழிப்புலன் கான லாகாத தைப்ப லப்பல காலத்தே—அவர்கள் தாழ்விலங் கின்னு ருக்கொள்விம் பங்க ளாகத்தா பித்தரோ, (கஉஎ)

வெப்அங் விக்கிர கங்கட் குப்பொனின் மேவ லாகும்ஆ டம்பரம்—ஏய்உ லாச மதச்ச டங்குக ளிற்சி றப்புச்செய் வித் திடுப்—பேயி னம்தெய்வ தங்க ளாமெனப் பேணு வித்தா ள், மக்களால்—ஆய பல்பெயர் விம்பம் எய்திவாழ்ந் தார்பு றம் மதத் தேயத்தே. (கஉஅ)

வேறு.

அந்த நாள்அவர் பெறுபெயர் எவையென் பதூஉம்,அன் னுர்பெருங் கோன்அழைத் திடலால்—கொந்து திப்பள்ளி நின்

றெழீஇத், தலைமை கொளாத ஏனையர் குழூஉகன் றுறவும்,—
தந்தம் மாட்சியின் முறைத்தனித் தனியே சார்ந்தி யார்முதல்
யார்கடை ஆக—முந்தன் ஞானின்ற கனையுற்றூர் அதுவும்,
முறைமை யின்வகுத் தருள்கவா கீசாய். (கஉக)

வேறு.

விழுகிர யத்தினின்றும் வெளிப்படூஉ மேதினிமேல்,
விழும்இரை தேடியலே காலத்தே, மிகுநாள்கள்
* தாழலுற்ற பின்,இறைவன் தளிபலிபீ டப்பாங்கர்
தாழலுறு தம்முடைய தளிபலிபீ டமுந்துணிபால் (கஉப)

தாவித்துச், சுற்றுப்உள புறச்சமயச் சாதியர்கள்
சேவிப்ப மரீஇச்,சீயோன் திகழ்தளியுட் கெருபிகளின்
தூவிக்கி ரகநாப்பண் போரானித் தொனியோடு
சீவிக்கும் ஏகோவா திருமுன்அஞ்சா தெதிர்நின்று, (கஉக)

நின்றமையோ டமையாமே இடைஇடையே நின்மலன்றன்
முன்றுகருப் பக்கிரகத் துள்ளும்போய் அருவருப்புந்
துன்றுதம பீடங்கள் துலங்குறஅங் கவ்விறுவிக்
கன்றுறுகுற் றெத்தபயங் கரக்கிரியைக் கவிற்றுமே (கஉஉ)

புங்கவனுக் கேற்புறச்செய் புனிதக்கிரியை
அங்கவற்குப் பயபத்தி அமைவொடுசெய் பண்டிகைகள்
பங்கமுறச் செய்திட்டுப், பரமன்ஒளிக் கெதிர்துணிந்து
தங்கள்இருள் கிறீஇயவர்கள் சாற்றும்அந்த தலைவர்களே.

அன்னவருள் முதற்கண்வந்தோன், ஆரும்வெருஉம் மோ
ளோகாம்—மன்னனர பலிச்செந்நீர் வாரியும்,-தற் கிடேபெரியா
த்—துன்னு மகார் கதறுநாற் றொனி, முழவு பறைமுழக்க—
மன்றொனியி னிடைஅமிழ்ந்து, வார்செவிசா ரானிடினும், ()

* தாழல்—தங்கல்.

தன்னுடைவெம் பயங்கரவிக் கிரகத்தின் சார்எய்த
வன்னிவழி யேஅந்த மகாரைச் செலுத்தலுறும்
அன்னைபிதா அழுகண்ணீர் ஆறும்,-தோய் ஆகத்தான்.
இன்னவன்,அம் மோனியரால், இரப்பாஎன் னும்மிடத்தும்,

மற்றதனைச் சூழ்ந்துபுனல் மலியும்வெளிப் பரப்பிடையும்,
செற்றருகோப் பொடுபோசான் தேயங்க ளினும்,தென்பால்
முற்றிஅன்னார் இராச்சியத்தென் முடிவுதெரித் திடும்அருநோ
உற்றவட திரத்தின் உழையும்வணங் குறப்பெற்றான். (கநசு)

தறுகணொடும் இறைவனுக்கத் தனைஅருகுற் றதிற்றிருத்தி
உறுதலின்றி, அறிவின்ஒப்பார் உயர்வார்கள் இல்லாமை
பெறுசாலோ மோனைமனம் பேதுறுத்து வயமாக்கி,
இறைவனது தளிக்குநேர் எதிர்வரைசப்பொற் றையின்மேலால்

தளிதனக்குக் கட்டுவித்தின் னோம்என்னும் தாழ்படுகர்
அளவுபுதான் உறைதருதோப் பாக்கினன். அஃததனன்
விளுதோப்பேத் தெனும்நாமம் மேயது;பின் அளற்றொப்பாக்
கொளலுற்றுக் கருங்கெகனா எனும்பெயரும் கொண்டதுவே.

அனையவற்குப் பின்வந்தோன், ஆரோவேர் நகர்தொட்டு
மனுநேபோ மட்டுந்தென் வயின்ஆப ரீம்மலைத்தென்
வனம்வரையும், சிகோன்என் மன்ஆட்சி உறும்எப்போன்
பனும்ஓரோ னயீம்என் பதிகளினும், இவற்றப்பால் (கநக)

உணங்கலில்முந் திரிகைவனம் உடுத்தசிபி மாநகர்ச்சார்
இணங்குறுபூம் படுகரினும், எலெயாலே நின்றும்கீல்
அணுங்கரைய உப்பேரி அளவும்,மோ வாபியர்கள்
வணங்குபய பத்திகொள்கிர் வாணக்கா மோசு மன்னோ.(கசo)

வயங்குநீல் நதிநீங்கி வழிக்கொளும்இ சரவேலர்
தயங்குசித்திம் எய்தஅவர் தமக்குப்பின் கேடுறப்ப

இயன்றகா மச்சடங்கவ் விடைத்தனக்குச் செயஅவனை
மயங்குவித்த காலேஉற்றுன் மறுபெயர்பே யோர்எனவே. ()

அங்கணின்றும் மோளோகாம் ஆட்கொலேனுன் பொழிற்கய
[ல்அப்
பொங்குபழிக் குன்றளவும் போய்மதன கிரியைபராய்த்
தங்க,விர கம்பகையின் சார்உறச்,செய் தான்,யொசிபாத்
துங்கன் அவர் தமைநரகுள் தூரத்துநாள் வணாயினுமே. ()

அவ்விருவ ரொடும்அடைந்தார்,அயிப்பிராத் தெனும்பழம்பேர்
ஒவ்விவடா தெல்லேயென உறுநதிக்கும் சிரிபாலைவச்
செவ்வெகித்தி னின்றுமிரி சிறுநதிக்கும் இடையுளநா
டெவ்வயினும், பாகாலீம் என்றும்அட்ட ரோத்தென்றும் ()

பன்னும்இனப் பொதுநாமம் படைத்நதிரு நிறத்தினரால்.
அன்னவருள் முற்பெயரோர் ஆடவர்கள், பிற்பெயரோர்
மின்னிடையார். இவ்வண்ணம் மேதகும்ஆண் பெண்வடிவு
மன்னுமவர்க் கெவ்வாறு வாய்ந்தவெனின், அறைகிற்பாம்:—

ஆபதம்கூக் குமஉடல்,சந் தவயவத்தாற் பிணிப்புண்டு
பாயதொழில் சிறிதுமட்டுப் படுதலின்றி, இடையூறு
ஏயும்நம தூனுடல்போல் இறுந்தகைய வல்லென்பு
வாயும்ஆ தாரமதா வகுக்கப்ப டாததுவாய், (௧௬௫)

விரிந்திடவோ சுருங்கிடவோ விளங்கிடவோ இருண்டிடவோ
புரிந்ததெது அதுவாகிப் புவிஅகன்று வளியின் உலாய்த்
திரிந்திடவும் நன்றெனினும் தீதெனினும் மனத்தினிடை
இருந்ததுசெய் யவுமிசிரம் இல்பொருளாற் சமைப்புண்டே, ()

பாவும்எந்த உருவாவும் பரிணமிக்குந் தகையதுவாய்
மேவலுறு துணையானே, வேண்டுருக்கொள் திறமெய்தி
ஆவியர்,இச் சையினுறே, ஆணுவார், பெண்ணுவார்,
ஓவலிலா தாணுபெண் ஒருங்காத லுடுவலரே. (௧௬௭)

இனையகணங் களினிமித்தம் இசரவே லர்தமக்கு
மனுகளோகண் ஆயபெரு வாழ்வினைநீத் தவ்வாழ்வின்
புனிதபலி பீடத்தைப் போற்றாது விலங்கினியல்
துனைகடவு ளாைஇழிவு துனவிழுபு தொழுதனரால் : (கசஅ)

இதனிமித்தம் தலையிறக்கம் இகல்செருவின் உற்றிழிந்த
எதிரிகள்ஈட் டி.ளின்வீழ்த் திடப்பட்டார். இக்கணங்கள்
அதைடிதனைச் சூழவந்தாள் தோன்றும்இளம் பிறைவடிவ
மதையுடைகோ டுகளுடைய அந்தரோத் தென்பாளே. ()

அவளைஅத்த ராத்தியென்றும் ஆகாய அரசியென்றும்
நவிலுற்றார் பெனிக்கியர்கள். ஙளிர்தருகங் குலில் நிலவில்
நுவல்சீதோ னிபகனியர் தோன்றுபிரார்த் தனைக்கடன்கள்
நிவள்பாட லொடும்அவள்ஒண் சிலையினுக்குச் செலுத்தின
ரால். (கருo)

பயர்சீபோ னினும்அவள்சீர் பாடாமே ஒழிந்ததன்றங்
கிழுவரைமேல் அவள்தளியை, இயல்பாற்சா ன்ருனெனினு
வருபிலைப்பத் திமைத்தையலார் மருட்டமருண் டிழிவிப்ப|ம்
மிகவணங்கு, பெண்டிர்சொற்கேள், வேந்துகட்டு வித்தானல்.

அடுத்துத்தம் மூசுற்றுன். ஆண்டுதோறும் அவன் லிபனோன்
இடைப்படுஉம் இரணம்,சி ரியகுமரி யரைஉருக்கி
உடற்றி, அவற் குற்றதெண்ணி, ஒருகோடை நாள்முழுதும்
நெடுத்துமோ கனக்கண்ணி சொலிப்புலம்பச் செய்ததன்றே.

இவ்வண்ணம் அவற்குவிழா எடுக்குங்காள், மந்தகதிச்
செவ்விய அடோனி,சுதன் சென்னபருப் பதம்நின்று,
பௌவம்நோக் குபுசிவந்து படர்ந்ததன் செந்நீரை
ஒவ்வொராண் டிணுப்புண்உறும் உவன்செந்நீ ரென்றெணவே.

இனையவிர கம்விளக்கும் இச்சரிதம், சீயோனின்
மனியமட வியரையும்அவ் வாறுமபல் உறுத்த, அவர்
புனிதகிகே தனவாயிற் புடையும்அவன் பொருட்டு மயல்
கனிதருகீ தம்பாடிக் கவன்றுபுலம் புற்றதனை (கருச)

கண்டனன்மற் றெசேக்கியேல், கடவுள்ஞா னத்தின்வழி
விண்டிடத்தன் விழிகளினால், வேறுமதம் மதிமருண்டு
கொண்டயூ தாநாட்டுக் குடிகள்புரி துன்மார்க்கம்
மண்டுவிக்கி ரகவணக்க வகைபினைநோக் கியகாலை. (கருரு)

பின்னையெய்தி னன்,கடவுள் பேழைகவர்ந் திடப்பட்டுத்
தன்றனிவை கியஞான்று, தலையொடுகை மற்றதனால்
மன்ற இறுந் திடப்பட்டு, வார்மிருக வடிவத்தைத்
துன்றியதன் சிலை,பங்கம் துனித்தளிவாய் தற்படியில் ()

குப்புற்றுக் கிடந்து,தற்கை கூப்புநரை வெள்குவிக்க,
வெப்புற்ற துக்கமெய்யே மேயோனால்; தாகோனுச்
செப்புற்ற பெயரினன்;கீழ்ச் சேல்வடிவ மேல்மனுட
மெய்ப்படிவ உற்பாத மேனியன்;முந் நீர்வாசன்; (கருஎ)

ஆயினும்உன் னத்தானத் தசோத்தேயில், அவன்தனக்கோர்
கோயில்சமைத் திடப்பெற்றுக் கொளீஇப்பிலிஸ்தி யாவென்ன
ஏயதேயத்தினிற்காத் தெக்கிரன்அக் கலோன்எலையாம்
பாயகா சாஇவற்றிற் பபத்தி செயப்பட்டான். (கருஅ)

அவற்றொடர்ந்துற் றனன்ரிம்மோன்; ஆபனு பருபாராம்
தவத்தெளிவுற் றொளிர்நதிகள் தம்வளத்தீ ரத்திடைஏர்
சிவக்குமனே கரத்தமக்கார் நிகேதனன்;இ வனும்கடவுள்
உவக்கும்ஆ லயசேவைக் கூறுதுணிந் திழைத்தோனால். ()

துன்னுதன தொண்டருள்ஓர் தொழுநோயன் தனைத்தோற்
[றோ
மன்னனைப்பெற் றனன்;தன்னை வாகைகொண்டும் தனைவண
ங்கும்

உன்னறிவில் ஆகாசென் றுரைக்கும்அவ்வேர் நினைப்பரன்தன்
மின்னுபலி பீடத்தை வெறுத்தகற்றி விடச்செய்தே, (கசுo)

செப்பதனுக் கீடாகச் சீரியரின் பீடத்தை
ஒப்பதொரு பிடிகைகாட் டுறுத்தனன் அம் மன்,அதன்மேல்,
தப்பிடுமா தனக்குவெரிக் தந்ததெய்வ தங்களுக்கே,
கைப்பிறைக்காம் தகனபலி களைச்செலுத்தித் தொழுமாறே.

சேர்இவர்பின் எய்தியதா' சிரிசை'சிசோ' ரசுமுதலாம்
பூர்வபிர பலநாமம் பூண்டியற்கை தனின்இல்லாக்

கோரவடி வால்மாயக் குசலத்தால், மதாவேசம்
கூடும்எகித் தியரைஅவர் குருமாரை மதிமருட்டி, (கசு௨)

நார்உடைவே டம்தவிர்த்து நாற்கால்மா வேடம்எய்தித்
திரிகடவு ளரைத்தொழுவான் செய்ததெய்வ கணமால்.இம்
மிருகபத்தித் தொற்றினின்றும் விலகிலர்கள் இசரவேல்
உரியவரும் என்பதவர் உடைஇரவற் பொன்னதனை (கசுங)

உயர்தரும்ஓ ரேப்பினிற்கன் றுருவாக்கும் நாள்விளங்கிற்
றியலுறுமிப் பாவமதை இரட்டித்தான், தாவீதின்

பெயரனுக்குப் பகைஅரசன், பெத்தேல்தாண் நகர்களிற்றன்
செயசிருட்டி கனைப்புல்மேய் சேங்கன்றுச் செய்துவைத்தே.

ஆக்கினன்இவ் வுருவாக, அந்நெறித்தை இசரவேல்
மாக்கள்அகல் ஓர்இரவ'ச் நாடர்முதல் மக்கள்தமைக்,
காக்கும் அவர் கதறுதெய்வ கணமுதல்என் றவற்றெருடுமோர்
தாத்திறுற் சங்கரித்த தனிஏகோ வாவினையே ! (கசுரு)

இறுதியின்வர் தெய்தினன்பே லியாள்.இவனின் மிகுகாமி,
மறநெறியை அதன்பொருட்டே வாஞ்சைகொள்அவ் வளவி
ழிஞன்,

துறும்ஒளியின் னின்றும்வீழ் தூதருள்இன் றிவற்கென்று
நிறுவுதளி இலைத்;தூபம் நிமிர்பலிபீ டமும்இன்றே : (ககச)

ஆயினும்தே வாலயத்துள் ஆற்றவும்வேள் விழவியற்றி
ஏயபலிப் பொருள்பறித்த ஏலியின்புத் திரரொன்னத்
தீயவராய்ப் பூசகர்நாத் தொராய்காம், அடுத்தடுத்தார்
கோயில்பலி பீடங்கள் குடிகொண்மார் இவனினுமே ? ()

ஆரமைவகள், அரமனைகள், அளவிகந்த களியாட்டும்
விரகமூர்ந் கர்செயலும் வினைத்தலின்ஆம் பேரோதை
பெரிதுயர்கோ புரமீப்போய்ப் பெருகியிட்டுக் காமமலி
புரிகள், இவற் றுள்ளும் இவன் போதஅர சியற்றுகின்றான்.

எல்லி,இரு ளினைத்தெருக்க ளிடைப்பரப்பும் அமையத்தே,
ஒல்கலின்றிப் பெலியாட் குரியமக்கள் அகந்தையறின்
மல்லல்மது வெறியின்இறு மாந்துலவித் திரிகின்றார் ;
அல்லல்புரி அவர்தம்ம அதிக்கிரமச் செயல்களுக்கே, ()

அனையவைமுன் னிகழ்சோதோம் அமர்தெருக்காள்!,கிபியாவில்
பினைஉடைமா னக்கேட்டிற் பெருங்கேடு விளையாமை
உனிவிருந்தோன் மனையைவிருந் தோம்புமனைப் புறந்தள்ளி
இனைஇலச்சைக் குட்படுத்த இரவே!நீர் கரிகூறீர். (கஎ0)

வேறு.

இனையோர்தரத் தெறுழின்முத லினர்.ஏனைய தலைவர்
நனிசீரின ரெனினும்மவர் நாமஞ்சொலின் விரியும் [த்தோர்
அனையோர்இனத் தர்கிரேக்கர்தே வராய்போற்றினும் அளி
எனவான்புவி யினைக்கோடலின், அவர்பின்னரென் போரே.

தனிவான்தலை மகன்,தைத்தன்,எண் தவிர்எச்சமொ டுளனால்
அனையான்சன னப்பாத்தியம் ஆம்ஆட்சியைப் பறித்த

சரியாம்இன வலும்அக்கதி சார்ந்தான்தனக் கிரியாள்
இனிதின்றதன் னினுமொய்ம்புள யூப்பிததரி னூலே. ()

அவ்வாறுவவ் வரசாண்டனன் யூப்பித்தர்.மற் றறைந்த
இவ்வானவர் முதற்கட்கிரீட் டை'தாவின்எய் தினர்;பின்
செவ்வாம்ஒலிம் பசின்தண்பனிச் சிகரத்து'யர் வானு
உவ்வானவர்க் காமத்திவா யுவின்மண்டலம் உறைந்தார். ()

சில்லோர்செல்டி வெற்புத்தொட னுத்தோரியர் இருந்த
எல்லாஇடத்தி னும்வாழ்ந்தனர். ஏனோர்கிழச் சனியோ
டொல்லாநிரி யாவாரிதாண் டேற்றேடிஇத் தலியுற்
றல்லாந்துகெல்ட் டிக்கெய்திஈ ருந்தீவுகள் அலைந்தார். ()

வேறு.

இனையஇவர் அனைவருமற் றனேகர்களும் வந்துகுழீ இ னா;க விழ்ந்த—கனவாட்ட முகனெடுநின் றுநொனினும், தலை வணம்பிக் கைநீங்காது—மனியதுவும் எய்தியபா சத்துமுற்றும் தாம்கசியா மையும்சோக் குற்றுத்—துனியசிறு மகிழ்வனையார் வதனத்தே மழுக்கமொடு தோன்றிற் றன்றே. (கஎரு)

அன்னதோற் றம்அவன்ஆ னனத்தினும்அத் தகைத்தோ ற்றம் அமைத்த தேனும்—தன்னியல்பாம் தருக்குநிலை ஒலைமீ ட்டுப் பயன்நிறைந்த தாகத் தோற்றி—உன்னுபயன் உண்மை யின்இல் லாஇடம்ப வசனத்தால் உவர்த ளர்ச்சி—துன்னுதயி ரியத்தைமேள எழுப்பிநிலை நிறுத்திஉறு துனுக்கம் தீர்த்தான்.

பின்னர்,மிகும் ஒலிக்காளம் போர்த்தொனிசெய் தலும் தனது பெரும்ப தாகை—தன்னைஉயர்த் திடுகவெனத் தக்கண மே பணித்தனன்.அத் தகவார் வேலை—என்னதெனச் சுதந்த ரித்தோர் நீளியோன் ஆசாசில் எனும்செராபி—மின்னிடும்அவ் வரசகேதனத்தை உடன் துகில்அவிழ்த்து விரித்து யர்த்தான்.

அன்னதுபூ ரணமாக உயர்த்திடலும், அயிர்பொன்றல்
அரதனத்தால்—மின்னுறப்பித் திரித்தசொரபியர்விருது செய
சினத்தால் விளங்கிக், காற்றின்—முன்னலைபோல் அலைந்துற்
கை யெனமிளிர்ந்த திச்செவ்வி முற்றும், நாதம்—மன்னும்
உலோ கத்தாய காகளம்போர்த்தொனிசெய்த மன்றமாதோ.

கேதுயர்த்தப் படைமுழுதார்ந் திடும்ஒளிரும் பியின்முக
டெழித்தப் பால்யூர்—ஆதிபிருள் எமட்டிஅர சாள்நாட்டை
அச்சுறுத்த தல்வி னாடி—சேரதினம் பன்னிறத்த பலாயிரமற்
றையநுடங்கு துவச ஈட்டம்—மீதொர்கணைத்தொருங்குயர்த்
தப் பட்டுவின்னைத் திடைநன்கு விளங்கிற்றன்றே. (கஎக)

அவற்றினொடும் உடன்எழுந்த, நெருங்கிட்டிப் பெருங்கா
ட்டோடடர்சிரவும்—தவத்தொடர்ச்சி அடர்ச்சிவரி சையுற
ச்சேர் அளவில்பரி சையும்அப் போதே.—சவிச்சதுரத் திணியூ
கம் ஆகித்தோ ரியமுறையிற் றழுங்க லுற்ற—செவிக்குழலின்
இசைக்கிசையப் பதம்பெயர்த்து நடந்தசேனை மாதோ.

அனையஇசை எத்தகைமைத் தெனின், அறைதும்:- மே
ஞட்போர்க்காயத் தஞ்செய்—முனைவீரர் திரம்உச்சம் உறச்செ
ய்து,மூர்க்கவெறி மூட்டா தாகி,– இனைமரண பயமுமுது கிட
அல்ல திழிந்துபின்வாங் கிடச்செ யொண்ணுத்—தனிஉறுதி
கெழீஇயதுணி வாயபராக் கிரமத்தைத் தந்த தன்றே. ( )

அன்றியும்அம் மியர்சுரத்தால் உளக்குழப்பங் களைத்
தடைசெய் தாற்றிச் சாந்தம்—நன்றுறுத்தும் ஆற்றலொடும் நா
ராதல் சுராதல் நனும் கவற்சி—துன்றும்ஐயம் பயம்துக்கம்
துன்பிவற்றை நெஞ்சினின்றும் துரத்தும் வன்மை—ஒன்றிய
தால். ஆயவர்கள்,ஒருப்பாட்டின் ஆம்ஊற்றம் உறவும் காட்டா.

குறித்தஅலை வறுகருத்துக் கொளீஇ,எரிமண் மிசை
நடக்கும் கொடுந்துன் பத்தை—மறப்புறச்செய் இனியகுழ

விசையின்வழிப் பதம்பெயர்த்துமெளன மாச்சென்—றேறும்
த்தலைவன் பார்வைஅரு குறலும்நின்றூர்; அவிர்படைபூண்
டிறப்ப நீண்டு—செறித்துளாட் டிச்சிலிர்ப்பாற் றெவ்வர்அஞ்
சச் செய்முன்அணி திகழத் தோன்றி (க அ ங)

மிருதலைவன் பணியினிறுத் திட்டிகே டகத்தொடுறு மே
ளுள் வீரர்—நிகருறத்தம் நோன்றலைவன் பணித்திடுகற் பனை
நோக்கி நின்றூர் தாழ்ந்து.—செறுபடைபூண் அவர்அணியூ
டொய்யெனத்தன் தேர்ந்தகண்கள் செலுத்தி அன்னூர்—வ
கையுறநின் றிடுமுறையும் வானவர்நேர் தோற்றமொடு வளர்ச்சி
தானும் (க அ ச)

நன்கறிய அந்நின்ற படைமுழுதும் நோக்குகின்றூன்,
நவில் அத்தானை—யின்கணம்எத் துணைத்தென்னக் கடைசி
யாக் கணிக்கின்றூன்.இப்போ தன்னுன்—தன்கருத்துத் தருக்
கெய்திப் பூரியா நின்றதன் சத்தி நோக்கி — வன்கடினம்
உறீஇத்தன்னின் மகிழாநின் றதுஎனெனின் வருக்கின்றுமால்.

இப்படையோ டெமிப்பின் மனிதசிட்டி தொட்டிதுகா
றீண்டி மொய்த்த—எப்படையும், குரண்டஇனத் தொடுபொ
ருத நனிகுறுகி யிடுதே கத்த—அப்படையிற் பெரிதாகா: பில
கரவிற் பொரும்அரக்கர் அனிகத் தோடும், ஒப்பஇரு பக்கம்
உம்பர் சேர்நிப துரோசமா உயுத்தம் தம்மில் (க அ கூ)

பெரிதுடன்றோர் களும்,பிரித்தா னியஆர்மோ ரியநாட்
டுப் பிரபுவீரர்—அருமையொடு சூழவிளங் கியோன்யூதர் மக
ன்ஆர்த ராம்வேந் தின்சீர்—மருவுறுகட் டுக்கதைகற் பிதசரி
தம் சொல்படையும், மாந்தல் பான்ஆப்—பிரமாந்து தாமக்கு
மொராக்கோதி ரபிசாந்தாம் பேரூர் தம்மில். (க அ எ)

திருவ அப்பார்த் திவன்கால முதல்நிகழ்ந்த பரிவீரர்
சிலம்பப் போரில்—பொருதகிறித் தியமகம தியவயவர் அனை

வரும், சீர் புனைசார் லீமான்—உரியதன்பி ரபுவீர ரொடும்
பொருந்த ரபியாவில் உடன்று மாய,—ஒருமையொடா பிரிக்க
கரை உறுபிசட்டா நின்றவண்உற் றுடன்றிட் டோரும் ()

ஆய இப்பல் சேனைகள், வீ ரரின்கணங்கள் அனைத்துமொ
ன்று அமைந்திட் டாலும்—ஏய இத்தா னையினெதிர்நோக்
குழிச்சாலச் சிறியனவாம் இவணம் மாந்தர்—மேயதிறல் சிறி
தானும் ஒப்பாகாப் பேராண்மை மிக்கா ரேனும்—பாய இந்தப்
படைஞர்கள் தம் தலைவனுக்குப் பயந்தடங்கிப் பணிந்து நின்
[றார்.

உருவொடுசா யலின் அவன், மற் றோரினுமே லாகவீ
றுறஉ யர்ந்து,—பொருவுசிக ரியெனநின்றான்; தொல்லொளி
முற் றிழந்திலன், முன் பொலிவு விஞ்சி—மருவொளியின் மி
கைதவிர்ந்த அழிவடைஓர் உம்பர்தலை வனிற்சற் றானும்—அ
ருகிவிளங் கினனல்லன்; அடிவானில் மூடுபனி அமரும் காலை,

அவ்வானூ டொளிகுறைந்து தோன்றுதய ஞாயிறு
போல் அவிர்ந்தான்; அன்றி—ஒவ்வாலோன் பின்நின்று, மழு
ங்கியதன் னிமித்தங்காட் டொளிகள் பாதிக்—குவ்வானர்
மிசைவீசி, அரசர்இராச் சியகலகம் கூடுமென்று—வெவ்வாகு
லங்கொளச்செய் கிரகணசூ ரியன்போன்றும் விளங்கினனால்,

இவ்வணம்பட் கியும்அவன் மற் றியாரினும்மேம் பட ஒளி
ர்ந்தான்; எனினும், அன்னான்—செவ்வதனத் திடிஉழுா ஆழ்
தழும்பிருந்த; சாம்புகவுட் டேத்து றைந்த—கவ்வை; மறற்ஞ்
சாத்திரம், பதறுதே பழிவாங்கக் காலம் நோக்கும்—வெவ்வ
கந்தை புருவத்தே விளங்கலுற்ற; விழி கொடுமை மேய
வேனும்,— (கக௨)

பாவம்அவ னுடன்செய்சகர் அலஅவற்பின் பற்றிச்செய்
பரிச னங்கள் — ஆவரெனர்குரியர், இப்போ துறுநிலையிற்
றவப்பெத பாம்ஆ னந்த—மேவியவாழ் வொருக்காலுற் றவர்,

பல்கோ டியர்,அவன்தீ வினைப்பொருட்டுக்—காவல்விண்ணை
இழந்திடுமோ முறைபுரியப் பட்டும்அவன் கலகத் தாலே ()

நித்தியஆ னந்தநிலை நீக்குண்டும் அவற்குண்மை நீங்கா
ராய்(மெய்—மைத்தஒளி யுற்றும்) நிற்கும் நிலையும்அவர் தமக்
கென்றும் மாறாத்துன்பே—வைத்தபகு தியெனஉற நெறிசெ
யப்பட் டதும்பார்த்தம் மணிக்கண் தாங்கள்—மெத்துபச்சாத்
தாபம்அநு தாபமெய்து குறிகாட்டி, மிளிர்ந்த மாதோ. ()

ஒளிகுன்றி நின்றஅவர், வனத்தெனினும் நகத்தெனினும்
உயர்ம ரங்கள்—கிளர்மின்னின் அழிவுற்ற போதிலைநீங் கியும்
முழுதும் கெடாத உச்சி—களிஞெடுபோழ் வெளியில்நிறப கடு
த்தனர்:கோன் பேசமுயல் கையுறப், பாதி—வளையமென
இருசிறையும் வளைந்தன்று ஞேடுதலை வரையுஞ் சூழ்ந்தார்;

அறைவகேட் டிடும்அவா வான்மௌன மொடுநின்றார்.
அன்னோன் மூன்று—முறைபேச முயன்றனன்;மும் முறையும்
நாண் தடுத்தும்பின் முதல்வர்க் கேற்ப—உறைகண்ணீர்
தடைகடந்து குதித்துவெளி யொழுகியிட்ட தொருவா றீற
றிற்—பறைமொழிகள் இடைஇடைநெட் டுயிர்ப்பினடச்சிக்
குண்டுவெளிப் பட்ட மாதோ. (ககசு)

வேறு.

அழியாத பலாயிர ஆவியிர்காள்! அனைத்தும்வலன் அன்
றிமற் றேவர்களும்—விழையாவலி யிர்!புக ழற்றதன்றவ் வியன்
போர்,அதன் வெம்முடி வானது,இவ் —உழையோடுசொ
லக்கசப் பாய்மிகஅச் சுறுத்திந்நிலை மாறிய தன்மையுமே-
வழுவாது விளக்குறு கின்றபடி மாதுக்க கரத்தின தென்
னினுமே. (ககஎ)

ஆனாலும்இவ் வாறொருங் கேதிரண்டிவ் வளவோர்ப்பொடு நின்றிடு சேனைமுனம்—*நோனுமல்எவ் வாறெனி னும்பினி டுே நடங்கும்மென, முன்னும்இப் போதுமுள — நாநானுப வம்முழு தங்துணையா நன்குன்னியும், எந்த மனோபலவான்— தானுவது முன்னறி தல்வலனோ? சமர்தோற்றுள இப்பொழு தாயினுமே, (௧௯அ)

அபலோடிடத் தாம்துரத் துரைடமையால் அவ்வானுல கடைவெறி தாகிவிடச்—செயுமாறள வற்றஇவ் வாற்றலுடைத் திண்சேனை யெலாஞ்சுய சத்தியினால் — உயரா எளி தேமி சைச் சென்றுதம துரிமைச்சுய வைப்பினை மீளவுந்தம்—வய மாக்கிட வல்லுநர் அல்லரென, மனத்துள்ளெவ ரென்னி னும் நம்புவரோ? (௧௯௯)

இயலும்பொது நன்மை யினுக்கெதிரா யான்கொண்டஎந் நோக்கம தாலெனினும்—அயர்தீங்கெதி ரின்றுமி யான்விலகுற் றதினென்னினும், கெட்டதன் றல்நமது—நயமென்ப தற் காருக சான்றுபர நாட்டின்படை யாவையும்.அன்ன நன்றாட் — டுபெரும்தனிம் கோலவன், தொன்றுதொட்டே உளதாய புகழ்த்திற னுற்கொலரோ. (௨௦௦)

எல்லாக்குடி யின்சமம தந்தினிற்கொல் இமைபூர்வ வழக்கம தாற்கொலிபாம்—ஒல்ஆகவத் தைதத்தொடங் கும்மளவும் உள்ளத்து விசாரம தோர்சிறிதும் — இல்லாதவன் போல் அசைஇ வேந்தர்சிறப் பெல்லாம்நனி தோன்றிடக் காட்டு புதன்—வல்லாற்றல் கரந்துசிங் காதனமேல் மகிழ்வாகவை குற்றனன்.அக்கரவே, (௨௦௧)

அன்னானைவெல் வான்நமை ஏவிநஞ்சி ரழிவைவவிளைத் தன்றினி மேல்அவையான் — வன்மேன்மைதெ ரிந்துளம், நம்முடைய வலியும்மறி வாம்;அத னல்வலிய — முன் நாம் அமர் துவண்டுவம் அல்லம்,அவன் மூட்டுஞ்சமர்க் கும்வெரு

*நோனுமல்—பொறுமல்.

வோம்:நமுடம்—பின்னுற்றலின் மிக்க மனோபலமற் றெஞ்சுற் றதி ராசிய மாஅதனுல் (உ௦உ)

சதிசர்ப்பனே செய்துமெய் மொய்ம்பினெல்லா தனைநன கு முடித்திட லாம்அதனுல் — விதிர்தோல்வியின் யாமுனம் பட்டறிந்த விதமேஅவன் எவன்வலி யொன்றுகொடே— எதிர்வோனேவெல் வோன்அவன் ஓர்அுரைத்தெவ் வினே யேசெயிப் போனென நம்மிடையோர்—மதிகற்குவன். வெள் ளிடை யேபுதுப்பு வனங்கள்பல தோன்றிட லாகுமன்றே: ()

அந்தப்புவ னத்துளொன் ருக்கிவல்லே அனேயான் தன தாரரு ளாளர்களாச்—சந்தப்பர லோகமைந் தர்களொடும் சம வாழ்வின ராவொரு சாதியரை—உந்தத்தலத் தேகுடி யேற் றிடத்தன் உளத்தேகுறித் தானென ஓர்வதந்தி—மூந்தப்பர மண்டலத் தேமிகவு முழங்குற்றெவ ணும்பர வுற்றதரோ. ()

எற்றென்றறி தற்பொருட் டென்னினும்அவ் விடனெய் தமுதற்புறப் பட்டிடுவோம்:—அற்றன்றெனின் வேறிடம் ஏகு தும்இவ் வளற்றுக்குழி யிற்கொரு காலமுமே—சற்றும்பர மண் டலத் தாவியரைத் தடுத்துச்சிறை செய்துவைக் குந்திறமே —மற்றின்று; பிலத்திருள் நீடவரை மறைவாக்குபு வைத்தல் செல் லாததுவே. (உ௦௫)

ஆனுலும் இவ் வெண்ண முழுச்சபைசேர்ந் தாராய்ந்து திறப்படுத் தற்குரிய.—மேல்நாம்அமை வாக இணங்கலுறும் விருப்புச்சிறி துங்கொளற் கேதுவிலே;—ஏனேவெனில், யார் நமுட் கீழ்ப்படிதற் கிசைவார்;அத னுல்,வெளி யாயினது—தா னேனு மறைந்தது வேயெனினும், சமரோதனை யப்பட வேண்டுமரோ. (உ௦௬)

வேறு.

என்றலும்அம் மொழியைஅங்கி கரித்துறுதி செய்தற்
கேற்றகுறி யாகமிக வலியகொரு பியரின்
துன்றுதொடை நின்றுருவிப் பல்கோடி ஒள்வாள்
துள்ளியெழ உடன்தோன்று சோதிநெடுந் தூரம்
சென்றளற்றிற் சூழ்ந்தொளிசெய் தன்று.மகோ னதன்மேற்
சீறிஅழன் றனர்கையிற்சிக் கெனப்பிடித்த படையால்
மன்றபரி கைபிற்றாக்கிப் போர்முழக்கம் புரிந்து
வான்முகடு நோக்கிஅறை கூவிஆர்ப்ப ரித்தார். (உ0எ)

வேறு.

அன்னவர்க் கயல்மே விற்றோர் எரிமலை. அதன்அச் சஞ்
செய்—உன்னத உச்சி கொட்புற் றுயர்புகைப் படலை யோடு
வன்னியும் உமிழ்ந்த தந்த வரைப்பிற பாக மெல்லாம்—மின்
னுக்கிட் டத்தின் மூடுண் டாடிபோல் மிளிர்ந்த தோற்றம், ()

கந்தகக் கலப்பின் ஆகிக் கனிந்தொடு கலந்த லோகம்·
அந்தவெற் பகட்டின் உண்மைக் கையமில் அடையா ளம்.
அவ்—விந்தம்நோக் குறுவி சைந்தென் றிருபடைப் பிரி
வொன் றோர்வேந்—துந்துதா னைக்கு முன்னர் உற்றகும்
தொடுதற் கானும் (உ0௯)

மதிள்வளர்த் திடுதற்கானும் மண்வெட்டி குந்தா லங்
கொண்—டதர்முன்செல் படைத்தி ரட்கொப் பாச்,சென்று
தவ்யூ கத்துக்—கதிபதி யென நடாத்தி னவன்,விண்ணி னின்
றும் வீழ்ந்த—இதரர்யா வரினும் நேர்மை எஞ்சியோ னும்
மோனே. (உக0)

ககனலோ கத்தும், அன்னான் கண்ணொடு கருத்தெப்
போதும்—மிகவுங்கீழ் நோக்கிக் காலின் மிதிக்கும்பொற்
றளச்செல் வத்தைச்—சுகமுதிர் பரமா னந்தக் காட்சியிற் றுய்

த்தி டுந்தெய்—விகபுனி தத்த எவ்வெப் பொருளினும் வியந்த மாதோ. (உகக)

மனிதர்க்கும் முதற்சு ரங்க மறுத்திடும் வழிப யிற்றி—அனையன் தூண் டிடப்பு தைந்தாங் கமையிற்றீங் கிழைத்தல் செல்லாத்—தனமிமித் தம்சு பாவம் தவிர்சுத ரெனப்பு வித்தாய்—கனியுறு குடர்பி டுங்கிக் களித்தவர் கொள்ளை கொண்டார். (உகஉ)

கடிதவன் ஏவ லாளர் கணம்ஒன் றப் பொருப்பின் ஆன்ற படிவடு இழைத்துத் தங்கப் பழுக்கள்பேர்த் தெடுத்த தள்ள விடையும்பொன் விளையு மோவென் றெவருமே வியத்தல் வேண்டா—விடம்நிகர் விலைமி கும்மவ் விளையுளுக் கேற்ற தம்மே. (உகங)

நரர்அருஞ் செயல்மெச் சிப்பா பிலோன்நகர் எகிப்து நாடாள்—அரசர்கட் டடமேம் பாடு வியந்துபா ராட்டு கிற்போர்,—கரையரும் பலத்த வாகக் கைத்தொழிற் றிறம்வி ளங்க நிருமிக்கப் பட்ட, செய்தோர் நினைவென்றும் நிற்பச் செய்வ (உகச)

ஆயமா ப்ரப லத்த அந்தநிர் மிதங்கள் இந்தத்—தியது அவர்தம் வேலைத் திறத்திற்கீழ்ப் படுதல் காண்க:—ஏய்ஒர்நா ழிகையிற் செய்வர் எவரிதிவர், அவர்எண் ணில்லார்—ஓய்வி லா தாயு ளெல்லாம் உழைத்தரி தினிற்செய் வேலை. (உகரு)

எரிமலை அயல்வெ ளிக்கண் மடைவழி எரிவே லைத்தீ—வருவித்தத் திரவத் தீயின் ஓட்டம்கீழ் மருவச் செய்த—கரிசறு பலகு ழிக்கண், மற்றொரு கணம்,க ளிம்பு—விரவிய கனத்த லோகம் வியத்தக உருக்கிப் பின்னர் (உகசு)

பலஉலோ கமும்வெவ் வேறுப் பகுத்துமேல் மிதக்கும் மாசு—விலகநீக் கியதப் போதே வேறொரு குழாம்,த னைக்

குள்—இலகுபல் வகைஅச் சுச்செய் தின்சுர வாத்தி யத்திற்
பொலிவுறு தொனிவி ருத்தி புரிதரும் உறுப்பு மாதோ, ()

ஒருமுறை ஊதத் தன்பால் உற்றகாற் றினைஅ நேக—
நிரையபல் குழலு ளெல்லாம் நிரப்பல்போற் குழிகள் நின்றும்
உருகிய உலோக நீரை வியத்தகும் உபாயத் தானே—சுரிபல்
உட் குழியின் அவ்வச் சுள்ளெலாம் நிறைத்த தம்மா. ()

மாப்பெரு மாளி கைஒன் றக்கணம் மண்ணின் றுவி—
மீப்படக் கிளர்வ தேபோல், விம்மியத் தினிப நாதம்—நாப்
பயில் கீதஒதை உடனெழு, நன்கெ ழுந்த—தேற்புடைக் கோ
வில் வண்ணம் ஏயவிர் மிக்கப் பட்டே. (உகக)

அதிற்,சுவர்ப் பாதித் தூண்சூழ்ந் தமைந்த;பொற் குறு
க்கு விட்டம்—பதித்ததோ ரியசிற் பத்தின் படிச்செய்தூண்
மேய; அன்றிப்—புதுக்கபோ தகம்ஒ வங்கள் பொறித்தபோ
திகையும் உள்ள:—செதுக்கிச்சித் திரித்த பொன்னிற் செய்
தது முகடு மாதோ. (உஉ0)

திகழ்அசி ரியாஎ கித்துத் தேயங்கள் ஒன்றை ஒன்று—
மிகுசெல்வ மொடுசம் பத்தில் வெல்லுவான் முயன்ற மே
னாள்,—பகர்தரு பாபி லோன்மெம் பாடுசால் கெயிரோ என்
னும்—நகர்கள்முன் பின்னெய் தாச்சீர் நண்ணிஒங் குன்ற
காலை, (உஉக)

பீலசு செராபி சென்னும் பெயரிய தமதெய் வங்கள்
சால்பொடு கோவில் கொள்ளச் சமைத்தஆ லயங்க ளேனும்
ஏனும்தம் அரசர் வாழ்தற் கெடுத்தமா ளிகைக ளேனும்—
சீலமெய் திம்மா டத்துச் சிறப்பின அல்ல மாதோ. (உஉஉ)

எழுதரா நின்ற மாடம் ஏற்றபூ ரணஉ யர்ச்சி—கழுமலும்
கம்பம் இன்றி நின்றதக் கணம்ம டக்குக்—கெழுவிய கடைதி

றப்பக் கிளருமென் சமத ளத்திற்—குழுமிய ஆன்ற பல்லுட்
கூடங்கள் தோன்ற லான. (உஉ௩)

வளைவுறு முகட்டி னின்று மந்திரோ பாயத் தானே—
கிளர்பல கிரையா நாற்றிக் கீற்கட்டி மண்ணி னுள்ளால்—
விளைஎண்ணெய் முறையே பெய்து மிளிர்பல தகழி மீன்
போல்—ஒளிர்பல்தீ பங்கள் விண்ணின் றொளிர்தல்போல்
ஒளிர்ந்த மாதோ. (உஉ௪)

அற்புத ராய்ப்பல் கூட்டம் அவாய்ப்பட படத்துள் போ
கச்—சிற்பமே வியந்தார் சில்லோர் சிலர்சிற்பி திறம்வி யந்தார்.
முற்படும் இறைவர்க் கெல்லாம் முதலிறை மேம்ப டுத்து—நிற்
புற வைத்த ராச நிலையின்வாழ் செங்கோற் றாதர், (உஉ௫)

அவரவர் ஆதிக் கத்துள் அவன்வைத்த சுரரிட் டத்தை
உவகையின் ஆள்கிற் போர்வாழ்ந் தோலக்கத் திருப்பப் பொ
ன்னுட்—டிவர்சிக ரிகளி னேடும் எடுத்தபல் உயர்மா டத்தும்
செவிதின்இவ் யவனன் செங்கைத் திறம்விளங் கியதை
யன்றே. (உஉ௬)

பூருவ கிரிசின் அன்னுன் புகழ்நின்ற தன்றி அங்கண்—
ஆர்பவர் வணங்கப் பட்டான்;அசோனிய நாட்டி னோர்தன்
பேரைமல் சிபெரன் றோதப் பெற்றனன்; விண்ணின் றன்
றுன்—சோரவீழ்ந் தகைநூப் பித்தர் சுளித்துத்தன் துறக்
கம் நின்றும் (உஉ௭)

ஒளிர்பளிக் ககப்பாப் பித்திக் குப்புறம் எறிந்த வாற்றால்
களிதரு புலவி தொட்டு நண்பகல் மட்டும் அப்பால்—மிளிர்
உச்சி முதல்நீ காரம் வீழ்அந்தி வரையுமாக—அளவின் ஓர்
கோடை நாள்வீழா நின்றத் தமனப் போதில், (உஉ௮)

எரிபுவீழ் மீன்போல் விண்ணுச் சியினின்றீ சியக டற்
கண்—அருலெம் னுசுத் தீவுற் றனனென்றோர் கதைஅன்

ஞோர்கள்—கரைதல்மெய் யன்றென் னென்னிற் கலகஞ்செய் மற்றைத் தூதர்—திரையொடும் அவன்வீழ்ந் தானல் நீண்ட கா லக்கு முன்னே. (உஉகூ)

உயர்ச்சிய சிகரி பொன்னுட் டுறுத்தமை, வீழ்கால், ஒன்றும்—பயப்பட வில்லைப்; பல்லெலாந் திரபலந் தினுந்தப் பாதை—அபார்ந்துங்குப் புவிழ்ந் தப்பட் டனன்,அழல் நிர யத் துந்தன்—முயற்சிய குழாத்தி னோடும் முயன்றுகிர் யிதஞ் செய் தற்கே. (உ௩0)

வேறு.

இதுபொழுது தூதருள்ஏள் ஞவலினஞர் சாத்தானும் இறைவன் ஏவ—முதிபபடை டெபங்கும்விரைந் தெய்துபுகண் டார்மதிக்கும் முறைமை போடும்—அதிர்தருகா களமுழ க்கி, அனைபவன்தன் பிரபுக்கள் அனைவர் கூட—வதிஅரச தானிபதாய் உயர்சருவ பைசாச மந்திரத்தில் (உ௩க)

தக்கணமே சிரியமந் திரசங்கம் கூடும்,அதிற் றரத்தி ஞதல்—எய்க்குப்கிய மனத்தாதல் உறஅருகர் படைப்பகுதி எவற்றும் உள்ளோர்—ஒக்கவரு கெனவிளித்தார். அவர்களு ம்அங் குடனே,நூற் றுவர்க ளாயும்—தொக்கஆ யிரராயும் பரிசனங்கள் நிரைநிரையாச் சூழவந்தார். (உ௩உ)

அகலமிகு தலைவாயில் தோரணவாய் தல்கள்முத லாய எல்லாப்—புகுமிடமும் நெருக்குண்ட; அவற்றுளுஞ்சங் கங் கூடும் புடை பரந்த—தகுசபை, (மே ஞள்ஆய்த தாரிகளா யேசுமதத் தறுகண் வீரர்—பகர்தருவெங் குரகதம்ஏ றுநின்று சாரிவரல் பயின்று மாதோ (உ௩௩)

இகழ்வில்அக்கி ராசனத்தின் உறுமகம தியஅனையன் எதிரி னேயே—தொகையஅவ்வீ ரருட்சிரேட் டரைப்பிரா ஞபாயத் தொந்த யுத்தத்—திகலுதிரோ ஈட்டிப்போர் புரி

குறிரோ என்றறைகூஉம் இடமாய் வேலி—தகவளைந்த களரி ஒப்பத்) தடவியதே யெனினும்அதன் தரைசா லாதே ()

தரைமிசைவெள் ளிடைதனினும் ஒருவர்சிறை ஒருவர் சிறை சார்ந்து நிஞ்சிச்—சரசரென இரைதரஅத் தூதர்செறி தலின்,நெருக்கம் சால மேய—திரவிஇட பத்தின்உலாம் இள வேனி லிருந்துவிற்றே னீக்கள் தங்கள்—விரவு தொகைக் குஞ்சினைக்கூட் டினைச்சூழ உலாவிடுவான் வெளியே உய்ப்ப,

உலாய்அலைந்து புதுப்பனிப்புல் மலரின்உற்றும், கமழ் செப்புதி தூட்டப் பட்டுப்—பலாலஇருற் சடிநகர்க்குப் புடை நகராய் அமர்சமமென் பலகை உற்றும்—கலாம்அகல்தம் இராச்சியகா ரியங்களினைத் தம்முள்ளே கலந்து பேசிக்—குலாவுவபோல் வாதசஞ்சா ரத்தூதர் நனிமிடைந்து குழுமி னரே. (உகசு)

கடுநெருக்குற் றிடுபொழுதோர் குறிகாட்டப் படலும் அம்ம கணமுன் னந்தான்—புடவிமைந்த ரெனும்அரக்க ரினு ம்பெரிய தேகிகளாய்ப் பொலிந்து நின்றார்—உடல்கழிய வுங்குறுகு குள்ளரினும் வியத்தகத்தம் உருவம் குன்றி—அடைவொடும்அம் மியஇடத்துள் எண்ணின்அடங் காதவ ராய் அடர்ந்து நின்றார். (உகஎ)

இன்னணம்கின் றவர்இமய மலைக்கப்பால் வாழ்குறட்சா தியனை ஏய்த்தார்;—பின்னையும்உச் சியின்மேலால் வெண்மதி காண் போனுய்த்தன் பிறங்கும் ஊர்தி—தன்னைநிலத் தருகு செலுத் தாநிற்ப,அரணியத்தின் சமீபத் தாதல்—தென்னமர் ஊற் றருகாதல் நள்ளிரவிற் களியாட்டுச் செய்வவாக, ()

ஒல்லுநெடும் பொழுதுகழிந் திரவின்இற்குத் திரும்புழ வன் உட்கிப் பார்வை—அல்லதுபா வனைதனிற்காண் கூளிக ளொத்தனர்.களிப்போ டாட்டிற் கூர்ந்து—செல்லுமனத்

தவை,தம்உலா சப்பாட்டின், அவற்கவசம் செய, ஒருங்கே சொல்லரிய அச்சமொடு மகிழ்வெய்தி அவன்னெஞ்சம் துடிக்கு மாலோ. (உகூக)

இன்னவா றுடற்பொறைதீர் ஆவியர்,தம் மாப்பெரிய யாக்கை சாலச்—சின்னஉரு வாச்சுருங்க,முன்போலஎண் ணிலராகத் திகழ்ந்தா ரேனும்,—வெந்நிரய சபைநடுவண் நெருக்கின்றி மேவினரால், மிகவும் உள்ளே—துன்றொதுக்க அந்தரங்கத் தலத்தியல்பாம் வடிவினராய்த் தொகையிலாராய்,

தேசுப்பொற் றவிசின்உப தேவர்களாய், மந்தணமந்திரம்நடாத்த—முசுற்றுச் சேராபியகெருபியமா பிரபுக்கள் மொழிநீத் துற்றார்—ஓர்சற்றுப் பொழுதுபினர்ச் சபைகூட்டு பத்திரிகை உவர்கள் கேட்க — வாசிக்கப் பட்டதப்பால் அனையர்மகா லோசனைசெய் வானுற் றாரால். (உசக)



# சுவர்க்க நீக்க வசனம்

## முதற்காண்டம்.

### மனிதன் பதவி யிழத்தலாகிய நூலின் விஷயமும், வாக்குத் தேய்வத்தையும் தேவ ஆவியாரையும் பிரார்த்தித்தலும்.

[கடவுளால் பல ஜாதியார்களிலுந் தக்கவர்களென்று] தெரிந்தெடுத்தாட் கொள்ளப்பட்ட [இசரவேலர் (Israelites) என்ற] ஜாதியாருக்கு ஆதியிலே வானமும் பூமியும் எவ்வாறு தோன்றினவென்று முதலிற் கற்பித்தவராகிய மோசே (Moses) யென்பவருக்கு உச்சியானது யாவர் கண்ணுக்கும் புலப்படாதபடி [தெய்வீகமான மேகத்தால்] மூடப்பட்ட ஓரேப்பு (Oreb) சீனாய் (Sainai) என்று பெயர்பெற்ற மலைச்சிகரத்தின் மேலிருந்து கிருபை கூர்ந்து அருள் வாக்குக் கொடுத்த வாக்கணங்கே! (Muse) ஆதியில் மனிதன் கடவுளுடைய கற்பனையைக் கடந்ததையும், மரண காரணமான எந்த மரக்கனி நுகர்ச்சியினால், பூமியிலே சகல துன்பங்களும் சாவும் வந்து சேர்ந்தனவோ? அந்த விலக்குவினைமரக்கனியையும், பிழைசெய்த முதல் மனிதனிலும் உயர்ந்த வேறொரு மானுடன் [ஆகக் கிறிஸ்துநாதர் அவதரித்து அம்முதல் மனிதன் பிழையினால் நாம் இழந்திருந்த] சாகாத் தன்மையையும் சுவர்க்க வாழ்வையும் எமக்கு மீட்டுக் கொடுக்கும்வரையும் யாம் நீங்கியிருந்த ஆனந்த பதவியையுங் குறித்து எனது நாவினின்று கூறுவாயாக. [மேற்கூறிய மலைச்சிகரமாகிய] அந்த இடத்திலும் அதிக மனரம்மியமானவைகளென்று சீயோன் (Sion) மலையிலும் எருசலேம் (Jerusalem) என்னும் நகரத்துள்ள கடவுளது கோவிலருகே விளங்கும் சிலோவா (Siloa)த்தடாகத்திலும், நீவாழ்ந்தால், அங்கிருந்து துணிவுடைய தாய் வழக்கமாகக் காணப்படாத [பறக்கும்] கதியோடு கிரேக்கருடைய கவி [ப்பறவை]களிலும் உயர[ப்பறக்க]வும் இதுவரையும் யாவரும் வசனத்திலாவது பாட்டிலாவது கூறியிராத பொருள்களைப் பாடவுங் கருதுகின்ற என்கவி [ப்பறவை]க்கு, அருள்செய்வாயாக.

மனிதர் கையினாற் செய்த ஆலயங்களெல்லாவற்றினும் மேலானவையென்று பரிசுத்தமும் உண்மையும் நிறைந்த [அன்பர்] நெஞ்சக கோவில்களில் வாழுந் தேவஆவியாரே! (Divine Spirit) யான் சொல்லக் கருதும் கதை முழுதும் நீர் தெரிந்திருக்கின்றீராதலால், நிகழ்ந்த சரிதமெல்லாம் யான் கூறும்படி [மேற்கூறிய வாக்கணங்கினும்] விசேடமாக நீர் எனக்குத் தெரிவித்தல் வேண்டும். நீர் யாதொன்றும் தோன்றியிராத காலந்தொட்டுப் பேதமடையாமலிருக்கின்றீர். [அடைகாக்கும்] புறாவானது தனது முட்டையின் மேற்சிறகு விரித்திருக்குந் தோற்றம்போல, உருவில்லாத அகண்ட பாதலத்தின்மேல் உமது பெரிய சிறகுகளை விரித்திருந்து அப்பாதாளம் கருவுயிர்த்து அதில் உயிர்கூட்டங்கள் தோன்றும்படி செய்தீர். இத்தன்மையுடைய நீர் எனது மனத்தில் [இருளுற்று] விளங்காதவைகளை விளக்கி, எனது மனோசத்திகளில் தாழ்வுற்றவைகளை உயர்த்தி [அவைகள் மறுபடியும்] தளர்வுற்றுத் தாழாதபடி தாங்கிக் காத்துக் கடவுளது நித்திய ஞானத்தையும் அவர் மனிதர் திறத்தில் செலுத்தும் நீதியையும் யான் கூறுஞ் சிறந்த கதையின் மகத்துவத்துக்குத் தகுதியாக நிரூபிக்கும்படி அருள் செய்வீராக.

## சாத்தானால் மனிதன் பாவஞ்செய்தல்.

கடவுளுடைய பேரருள் மிகவும் பெற்றவர்களாய் எந்தப் போகமும் இனிமையாக அனுபவிக்கும் வாழ்விலே வாழ்ந்துகொண்டிருந்த எமது ஆதிப்பெற்றோர்கள், [இதன் கனி தின்னாதிருப்பீராக என்று விலக்கப்பட்ட விலக்கு வினை மரமாகிய] ஒரு விலக்குப் பொருளொழிய, பூமியின்கணுள்ள அளவற்ற சகல பொருள்களையும் ஆளும் உரிமையுடையாராயிருந்தும், அவ்வொரு விலக்கினிமித்தம், அவர்களைப் படைத்த கடவுளின் அடிமைத் தன்மையினின்றும் விலகி அவர் கற்பனையைக் கடக்கும்படி செய்த காரணத்தை, [தேவ ஆவியாரே!] முதலிற் சொல்வீராக. பரமண்டலமாவது ஆழ்ந்த நரகப்பிரதேசமாவது நீரறியாதபடி ஒளிப்பது ஒன்றுமில்லையன்றோ. கடவுளுக்கு விரோதமாக அவர்களை அந்த இழிவான கலகஞ் செய்யும்படி வஞ்சனை செய்து முதலில் தூண்டியவன் யாவன் என்னில், நரகத்தில் வாழ்வோனும் பாம்பின் உருவெடுத்தோனும் ஆகிய [சாத்தன் என்னும் பெயருடைய] தேவதூதனே. அவனே, கடவுளுக்கு விரோதமாகத் தன்னைச் சேர்ந்த தன் தூதகணத்தோடும் தன் அகந்தை காரணமாகப் பரமண்டலத்தினின்றுந்

துரத்தப்பட்டு வாழுங்காலத்திலே, [ஆதாம் ஏவாளாகிய ஆதி மக்களு டைய வாழ்வைக்கண்டு உண்டாகிய] பொருமையினாலும் [கடவுள் விஷயத்திற் கொண்டிருந்த] வர்மத்தினாலும் அதிகரித்த வஞ்சனை யினால் மனுஷ ஜாதியாரின் மாதா [ஆகிய ஏவாள்] ஏமாறும்படி செய்தவன். அவன் தன்னோடொத்த தலைவர்களினும் அதிகமேன் மையடையும்படி ஆசை பூண்டு, தன் தூதகணமாகிய படையைத் துணையாகக் கொண்டு எதிர்த்தால் உயர் வொப்பில்லாத கடவுளை யொத்திடலாமென்று உறுதியான நம்பிக்கை கொண்டவனாகிக் கடவுளுடைய சிங்காதனத்திலும் [வேறொருவருக்கும் பாத்திய மில் லாததாய்] பொதுமையற்ற அவருடைய ஆட்சியிலும் அவருக்கு விரோதமாக இச்சைவைத்துப் பரமண்டலத்திலே இறுமாப்புடைய படையை அணிவகுத்துப் [பத்திக்கு விரோதமாகிய] பதிதப்போர் செய்தான். அப்போர் துரிதமாக ஒருபயனுமின்றி முடிந்தது. அவன், சருவல்லமை யுடையானை அஞ்சாது போர்க்கழைத்தானதலால், அடி யற்ற பாதாளத்திலே [முடிவற்ற] துன்பமடைந்து [தண்டிக்குந் தீயாகிய] சிக்ஷாக்கினி மத்தியில் என்றும் முறியாத விலங்கு பூண்டு கிடக்கும்படியாக, பிரகாசமான பரமண்டலத்தினின்று தலைகீழாய் [இடிகளாற்றுக் குண்டு தீப்பற்றிச்]சுவாலித்தெரிந்துகொண்டு பயங் கர வேகத்தோடு விழ, அவனை எல்லாம்வல்லார் வீசியெறிந்தார்.

## பரமண்டலத்தினின்று நரகத்தில் வீழ்ந்த உடனே சாத்தான் அடைந்திருந்த நிலைமை.

இறக்குந் தன்மையுடைய மனிதருக்கு வருகின்ற இராப்பகல் கூடியாகின்ற நாள் ஒன்பது கொண்டகாலம், அவன் என்றுஞ் சா வாத்தன்மையுடையானாயினும் உணர்வு கலங்கி, பயங்கரமான உரு வமடைந்திருந்த தூதகணத்தோடு உருண்டு புரண்டுகொண்டு [நரகத் திலே உள்ள] தீக்கடலிற் கிடந்தான். ஆயினும் அம்மட்டோடுந் தணி யாமல் அதிகரிக்குந் தேவ கோபத்தை அவன் இன்னமும் அனுபவி க்கும்படி அவன் விதியிருந்தது. எப்படியெனில், [திரும்பப் பெரு தபடி] இழந்துவிட்ட ஆனந்த வாழ்வும், [எவ்விதத்தாலும் நீக்கமுடி யாது] நிலைத்த துன்பமும் அவன் மனது வருந்தும்படி செய்தன. பெருந்துன்பம் மனக்கலக்கம் என்பவைகளோடு, கடினப்பட்டபகை மையையும் உறுதியான கர்வத்தையும் [பார்க்கும் பார்வையி னால்] தெரிவிக்கின்ற கண்களைச் சூழவுஞ் செலுத்தித் தேவ

தூதர்கள் எவ்வளவு தூரம் பார்க்கக்கூடுமோ அவ்வளவு தூரம் ஒரே பார்வையாக அங்கேயொழுங்கில்லாது துக்கரகரமாகவிருந்த பாழிடத்தைப் பார்த்தான். பார்ப்பவர்கள் மனம் பதைபதைக்கும்படியான ஓர் இருள் நிறைந்த சிறைக்கூடம் [தீமேலிட்டெரியும்] ஒரு பெரிய சுள்ளைபோல எரிந்து சூழவும் சுவாலை வீசியது. ஆனாலும் அந்தச் சுவாலை, பிரகாசமற்றதாய், அங்குள்ள துன்பக் காட்சிகளைப் பிரயாசமாகப் பார்த்தறியும்படியான இருளுடைத்தாயிருந்தது. அந்தத் துன்பமிருந்தஸ்தலம் துக்ககரமான இருண்ட நிழல் பரவியிருந்தது. அத்தலத்தில், சமாதானவாழ்வும் எய்ப்படைந்தோர் இளைப்பாறுதலும் அசாத்தியமாக விருந்தன; [துன்பமடைந்தவர்கள்] எல்லாருக்கும் வந்துறுவதின்ற [துன்பமொழிந்து இன்பமனுபவிக்கும் நற்காலம் வருமென்னும்] நம்பிக்கை பிரவேசித்தல் கூடாமையாயிருந்தது: அங்குற்றவர்களை முடிவில்லாத ஹிம்ஸையினலைடையும் துன்பமும் முற்றும் எரிந்து அற்றொழியாத கந்தகம் எப்பொழுதும் எரிவதனால் நிரம்பும் அக்கினிப்பிரவாகமும் இடைவிடாது தொந்தரித்துத் துன்பஞ் செய்தன. இத்தன்மை பொருந்திய தானமானது நித்தியமாகவுள்ள நீதியுடைய கடவுளால் [வந்தனை செய்யப்பட்டு வந்த தம்மைப் பத்தியில்லாமல் எதிர்த்துக்] கலகஞ் செய்த அத்தூதர்களுக்காகச் சித்தஞ்செய்து வைக்கப்பட்டிருந்தது. இங்கே நிறைந்த இருள் மத்தியில் அவர்களுடைய சிறைச்சாலை செய்யப்பட்டிருந்தது. அத்தூதர்களுக் கென்று குறித்த அவ்விடம், கடவுளிடத்திலிருந்தும் பரமண்டல ஒளியிலிருந்தும், பூமி மத்திக்கும் அண்டச் சுவருக்கும் இடையே உள்ள தூரம் மூன்று கொண்ட தூரத்திலே, அமைக்கப்பட்டிருந்தது. அவர்கள் எந்த இடத்திலிருந்து [துரத்துண்டு] விழுந்தார்களோ, அந்த நல்லிடத்துக்கும், [இப்பொழுது கிடந்து வருந்தும்] இந்தத் தீயிடத்துக்கும் ஆ! எவ்வளவு பெரு வித்தியாச மிருக்கின்றது. அவன் தன்னோடு [பரமண்டலத்தினின்றும்] தள்ளப்பட்டவர்கள், சாடுகின்ற தீயினலாகிய சூறைக்காற்றிலடிபட்டுச் சுழலுகின்ற தீக்கடலில் சோர்ந்து அமிழ்ந்து கிடந்ததையும் அவர்களுள் [அதிகார] பலத்திலும் பாவத்திலுந் தனக்கடுத்ததானமுடையானும் [இப்போது கூறுங்காலத்துக்குப் பின்] நெடுங்காலஞ் சென்று பிலிஸ்தியா (Philistia-Palestine) நாட்டிலே பெயல்செபு (Beelzebub) என்று பேர் பெற்றோனும் ஆகிய தேவதூத தலைவன் தன் பக்கத்தில் புரண்டுகொண்டு கிடந்ததையும் பார்த்தறிந்தான். (கடவுளுக்கு) முதல் விரோதியா

கிய காரணத்தால், பரமண்டலத்தில், சாத்தான் (Satan) என்று பெயரிடப்பட்ட அவன், அங்கு பயங்கரமாகச் சப்தமில்லாமலிருந்த நிலைமை திடீரென்று நீங்க, அந்தப்பெயல்செபுவை நோக்கித் தைரிய மான வசனங்களாற் பின்வருவதைச் சொன்னான்.

## சாத்தான் பெயல்செபுவைநோக்கி அவர்கள் சாகாத் தன்மையை நினைப்பூட்டித் தைரியப்படுத்தல்.

நீ [யான் பரமண்டலத்தில் இருந்த காலத்தில் என்னுடைய உபசேனாபதியாக விருந்த] அவனே யென்னில், எவ்வளவு [தூரம் கீழே] விழுந்திருக்கின்றாய்! அந்தச் சோதிமயமான ஆனந்த க்ஷேத்தி ரத்திலே, தாங்களும் பிரகாசமுடையவர்களே ஆகிய பல்லாயிர தேவர்களும் மழுக்கம் அடையும்படி மிகச்சிறந்த தேஜஸோடு விளங்கிய அவனினின்றும் எவ்வளவு மாறுதல் அடைந்திருக் கின்றாய்! ஒருமனப்பட்டுச் செய்த உடன்படிக்கையும், ஒற்று மையான நோக்கங்களும் யோசனைகளும், [கடவுளை யெதிர்ப்ப தாகிய] அந்தப் பிரபலமான முயற்சியில் அமைந்த சம நம்பிக்கை யும் சம அபாயமும் ஆகிய இவைகளால் அப்போது என்னோடு சே ர்த்திடப்பட்ட அவனே நீ என்னில், ஒரு தோல்வியிலே அடைந்த சமநாசம் இப்போது உன்னை யென்னோடு சேர்த்திருக்கின்றது. எவ் வளவு உயரமான இடத்திலிருந்து எவ்வளவு தாழ்வான இடத்தில் விழுந்திருக்கின்றோம்! இடிப்படை கொண்டதனால், அவன் நம்மி னும் எவ்வளவு வலியனாயினான் என்பதை மேற்கூறிய இரண் டிடத்துக்கும் இடையே உள்ள தூரம் காட்டுகின்றது. அதுவரையும் அந்தப் பயங்கரமான படையின் பலத்தை அறிந்தவர்கள் யார்? [ஒருவருமில்லை யென்றபடி] ஆயினும் அந்த வலியபடைக்காவது, அந்த வெற்றிபெற்ற வலியோன் இன்னமும் கோபத்தினால் நம்மேற் செலுத்தக் கூடிய எதற்காவது பயந்து யான் முன் செய்தது பிச கென்று விசாரப்படவாயினும், (உடம்பின் ஒளியாகிய வெளியொளி மாறியும்) மாறாது நிலையாயுள்ள மனத்தையும் எனது உயர்ந்த நிலை மையை அவன் மதியாது தாழ்த்தியதனால் உண்டாகிய கோபத்தி லே தோன்றி அவனிடத்திலே வைக்கப்பட்டிருக்கிற அவமதிப் பையும் மாற்றவாயினும் யான் கருதவில்லை. அக்கோபமே யாவரி னும் மிகுந்த வலிமையுடைய அவனை யானெதிர்க்கும்படி செய்த தன்றி, அப்படி எதிர்த்தபோரில் ஆயுதந் தரித்தவர்களாய் அளவற் றவர்களாயுள்ள தேவர்களை என்னோடு சேரும்படி செய்தது. அத்

தேவர்கள், துணிந்த நெஞ்சினராகி அவனுடைய ஆட்சியை வெறு
த்து அவனுக்குப் பதிலாக என்னைத் தலைவனாக ஏற்றுக்கொண்டு,
பரமண்டலத்திலே, ஒரு வெளியிலே அமைந்த போர்க்களத்திலே.
எப்பக்கம் தோற்கும் எப்பக்கம் ஜெயிக்குமென்று சொல்லுதல் கூடாத
தாயிருந்த யுத்தத்திலே அவனுடைய சத்திகளெல்லாவற்றினும்
சிறந்த சத்திக்கு, ஏற்ற, மாறான சத்திகொண்டு எதிர்த்துப் போர்செ
ய்து, அவனுடைய [அசையாத நிலைமையான] சிங்காதனமும் நிலை
குலைந்திருக்கும்படி — அவனுடைய ஆட்சிக்குச் சஞ்சலம் உண்டா
கும்படி—செய்தார்கள். அந்த யுத்தத்தில் தோல்வியடைந்தேன் [என்
பது உண்மையே] ஆயினும் அதனால் என்னை? யான் முற்றும்இழந்து
விடவில்லை. [சிறிதேனும் யாவராலும்] அடக்குதற்கரிய மனமும்,
நினைப்பைவிட்டகலாத பழிக்குப்பழி வாங்கும் விருப்பமும், என்றும்
அழியாத பகைமையும், எதிர்த்து வணங்கவாவது இணங்கவாவது
ஒட்டாத தைரியமும் ஆகிய இவைகளேயன்றித் தோல்வியடையா
மைக்குவேண்டிய மற்றவைகளும் யான் உடையேனாயிருக்குமேன்
மையை அவன் பயமுறுத்தலினாலாயினும் பலத்தினாலாயினும் என்
னிடத்திலிருந்து வலாற்காரமாகப் பறிக்கும்படி நான் ஒருக்காலும்
இடங்கொடுக்க மாட்டேன். சற்று முன்னே இந்த என்னுடைய
தோள்வலிக்கு அஞ்சித் தன் ஆட்சி நிலைக்குமோ நிலையாதொழியு
மோ என்று சந்தேகங் கொண்டவன் முன் வணக்கஞ்செய்து முழந்
தாள்படியிட்டுநின்று 'மன்னித்தருள்வாயாக' என்று விண்ணப்
பித்து, அவனுடைய வல்லமையைத் தெய்வீகமானதென்று மதிப்
பது இழிவே. அவ்வாறு செய்வது நாம் இப்போது வீழ்ந்து கிடக்
கும் இழிவினும் அதிகமான மானபங்கத்துக்கும் இலச்சைக்கும் ஏது
வாகும். தேவர்களுடைய பலமும் பிரகாசமான பொருள்களால்
ஆக்கப்பட்டுள்ள அவர்களுடைய தேகச்சத்தும் ஊழினால் என்
றும் நாசமடையாதவைகளாக ஆக்கப்பட்டிருப்பதனாலும், நிகழ்ந்த
யுத்தத்திலே நேர்ந்த முடிவினாலே நாமடைந்திருக்கும் அநுபவ
மானது நமது சேவகத்தன்மையைக் குறையாமல் வருங்காரியம்
அறியும் அறிவை மிகவும் அதிகரிப்பித்திருப்பதனாலும், நாம்
வெற்றியடைவதில் முன்னிலும் அதிக நிச்சயமான நம்பிக்கை
கொண்டு, இப்போது வெற்றியாளனாய் மிகுந்த களிப்போடு கொ
டுங்கோல் செலுத்தி வானத்தைத் தனியே ஆளும் நமது பெரும்
பகைவனுக்கு [அவன் சமாதானமாவதற்கு] ப்பொருத்தமில்லாத

என்றும் ஓயாதபோரை, ஆயுதத்தையாவது, வஞ்சனையையாவது துணையாகக்கொண்டு செய்யத்தீர்மானிக்கலாம்.

[கடவுளுக்குத் தொண்டு செய்தலினின்றும் நீங்கியதனால்] பதி தறிய அத்தேவதூதன், மனத்திலுள்ளே மிகுந்த துன்பமடைந்து வருந்திக்கொண்டிருந்தும், இவ்வாறு திடமாகத் தன் ஆண்மை பாராட்டிப் பேசினான். தைரியசாலியாகிய அவனுடைய தோழன் [ஆகிய பெயல் செபு] பின்வருகிறபடி மறுமொழி கூறினான்.

## பெயல் செபு அழியாத வாழ்வு அழியாத துன்பத்துக் கேதுவாயிருக்கலாமென்று, மறுமொழி கூறல்.

ஹே ராஜேந்திரா! உன்னுடைய ஆஞ்ஞையைத் தலைமேற்கொண்டு, அணிவகுத்த தேவசேனையை நடத்தி, திடுக்கிடும் தொழில்களில் நெஞ்சங்கலங்காதவர்களாய், கொடிய போர் தொடுத்து, பரலோகத்துக்கு என்றென்றும் நிலையாக உள்ள அரசனை ஆபத்துக்குட்படுத்தி, அவனுடைய அதி உன்னத நிலைமையானது, [சேனை முதலிய] பலத்தினாலோ, [அவனுக் கொருவரும் எதிரியாக இல்லாதிருந்த] தற்செயலினாலோ, [மாறுபடக்கூடாத] விதியினாலோ, தங்கியிருந்த தென்பதைச் சோதித்தறியும்படி அவனை எதிர்த்த சிங்காதனாரூடராகிய பல குரூபருக் கொருதலைவனே! துக்கம் மிகும்படி நிலையழிந்து இழிவான தோல்வியடைந்து நாம் பரலோகத்தை யிழக்கவும் இந்தவலிய சேனைகளெல்லாம் நாம் இப்போது காணுகிறபடி பயங்கரமான நாசமடைந்து கீழே சோர்ந்து வீழ்ந்து கிடக்கவும் அந்தப் போர்முடிந்த முடிவை [மனதிலழுந்தும்படி] நன்றாக நோக்கி யறிந்து விசனமடைகின்றேன். அந்தச் சேனைகள் தேவரும் தெய்வத்தன்மையுடைய பொருள்களும் எவ்வளவு நாசமடையக் கூடுமோ அவ்வளவு நாசமடைந்திருக்கின்றன. அதற்கு அதிகமான நாசம் ஏன் அடையவில்லை யென்னில், நம்முடைய தேகப்பிரகாசம் முழுதும் அழிந்தும், நம்முடைய இன்பவாழ்க்கை இங்குள்ள முடிவில்லாத துன்பத்துள் முழுகியும், நம்முடைய உள்ளமும் ஊக்கமும் ஒருவராலும அடக்குதற் கரியவைகளாக இருக்கின்றன; அன்றியும் நம்முடைய [இப்போது சிறிது நீங்கி யிருக்கும்] தேகதைரியமும் சீக்கிரமாக நம்மிடம் திரும்பிவரும் தன்மையுடையதாக விருக்கிறது. (நம்முடைய சேனை போன்ற ஒன்றை, சருவவல்லமையினா லன்றிச் செய்வது அசாத்திய மாகலால், அவன் எல்லாம் வல்லானென்று,

அதற்கு விரோதமாக எண்ண முடியாமல், நான் இப்போது நிர்பந்தப்பட்டு நினைக்கிறது) நமது வெற்றியாளன் நம்முடைய உயிரையும் வலிமையையும் நம்மிடம் இருக்கும்படி விட்டிருத்தலானது நம்முடைய விஷயத்தில் அவனுடைய சலஞ்சாதிக்கும் வன்மத்தோடுகூடிய கோபந்திரும்படி நாம் துன்பத்தை நன்றாக அனுபவித்துத் தாங்கும் பொருட்டாயினும், [யுத்தத்திற் செயித்து ஆட்படுத்திய] போரடிமைகளாய் இந்த நரகமத்தியில் தீயிலே வேலை செய்தல், இருள் நிறைந்த பாதாளத்திலே தூதர்தொழில் புரிதல் ஆகிய வேலைகளில் எதையாவது அவன் இட்டப்படி ஏவியதைச் செய்யும் பொருட்டாயினும் என்றால், அப்படி விட்டிருப்பதனால் பிரயோசனம் யாது? அன்றியும், நாம் குறைவற்ற பலமும் முடிவற்றவாழ்வும் உடையவர்களாயிருப்பது, [ஊழிகழிந்தாலும் கழியாத]நித்திய தண்டனையை அடைவதற் கென்றால், அதனால் நாம் என்ன நன்மையடைவோம்? என்று கூறியதைக் கேட்டவுடனே [தன்தோழன் மனத்திடம் தளர்வதைத் தெரிந்து அவனைத் தைரியப்படுத்தும்படி] பைசாசத்தலைவன் (ஆகிய சாத்தான்) சீக்கிரமாகப் பின்வருகிறபடி விடைகொடுத்தான்.

### சத்துரு கருதியதை முடியாது தடுத்தொழிக்கவாவது கூடுமென்று சாத்தன் மறுமொழி கூறுகிறன்.

பழைய பதவி யிழந்திருக்கும் தூதனே! [வலிமையுடைமையினால் நாம் எவ்விதத்திலும் சந்தோஷமே அடையவேண்டும்] பலவீனமானது, நாம் எதாயினும் செய்தல், செய்யப்பட்டனுபவித்தல் ஆகிய இருவகை வினைகளில் நாம் எதை அடைந்தாலும், நமக்குத் துன்பத்தை யுண்டாக்கும் தன்மையுடையது. இது நிற்க. நான் சொல்வதை நீ உறுதியாகக் கொள்வாயாக. நன்றான எதுவும் நாம் செய்யவே கூடாது. தீது, நம்முடைய பகைவனுக்கு வெறுப்புண்டாக்குவதாயிருப்பதால், அதை யெப்போதும் செய்வதே நமக்கு இனிமையானது. ஆயினும், அவன், பின்நடப்பதை அறியும் வல்லமையினால் நாம் செய்யுந் தீங்கிலிருந்து நன்மைவிளையும்படி, கருதினால், அவன் கருத்து நிறைவேறாமற்செய்து, அவன் செய்யும் நன்மை தீமையாக மாறும்படி செய்வதே நம்முடைய நீங்காத வேலையாகக்கடவது. யான் நினைப்பதில் தவறுதல் இல்லையானால், நாம் அப்படிச் செய்வது, அவனைப் பலதடவை மனவருத்தமடையும்படி

செய்துநன்மைசெய்யக் கருதும் அவன் உட்கருத்துக்களெல்லாம் அவனெண்ணப்படி முடியாமற் செய்யக்கூடிய தன்மையுடையது.

**பின்பு, "அடித்துக்கொண்டிருந்த சண்ட மாருதம் அமர்ந்துவிட்டது; நாம் கரைக்குப்போய் ஆலோசனை செய்வோமாக" என்று சொல்லுகிறான்.**

கோபத்தையுடையவனாகிய நமது வெற்றியாளன், நம்மைத் தொடர்ந்து அவனுடையவன்மத்தைத் தீர்க்கும் [இடி மின்னல்முதலிய] கருவிகள் யாவற்றையும் பரமண்டல வாசலுள்ளே திரும்பிப் போம்படி ஆஞ்ஞாபித்திருப்பதைப்பார். நம்மைத் தாக்கும்படி விட்ட எரிந்துவிழுந்துகொண்டிருந்த கந்தகமழை ஓய்ந்துவிட்டதனால், நாம் பரமண்டலத்து வாசல் விளிம்பினின்றும் விழுந்தபோது மறுகிமேலெழுந்து கொதித்துக்கொண்டிருந்து நம்மை ஏற்ற இந்த அழற்கடல் அடங்கியிருக்கிறது. சிவந்த மின்னலைச் சிறகாகக்கொண்டு கடுவேகமுடையதாயிருந்த இடி, முன் இந்த எல்லையற்ற பாதாளமெல்லாம் இரைந்துகொண்டிருந்தது இப்போது தன் தாக்குகின்ற விசை முழுதுஞ் செலவழித்துவிட்டது போல, அதன் இரைச்சல் ஓய்ந்திருக்கிறது. இப்பொழுது வாய்த்திருக்கும் சமயம் நம்முடைய பகைவனுக்கு நம்மிடத்திலுண்டாகிய இகழ்ச்சியினாலாயினும் ஆகுக, கோபத்தை மிகச்செலுத்தி அது இற்றொழிந்துபோனதனால் ஆயினும் ஆகுக, அந்தச் சமயத்தை வீணே போகாமல் நாம் பயன்படும்படி செய்யவேண்டும். அதோ இருக்கிற பாழ் வெளியையும், அது நாசத்துக்கு உறைவிடமாய் நீலநிறமான சுவாலையினின்றும் மங்கித்தோன்றும் ஒளியையன்றி வேறு எந்த ஒளியும் இல்லாதிருப்பதையும் பார்க்கின்றாயா? இங்கே நம்மை அலைத்துப் புரட்டுகின்ற தீ அலையை நீங்கி அங்கே செல்வோம். அங்கே இளைப்பாறுதற்கிடம் உண்டென்னில் இளைப்பாறுவோம். பின்பு, சிதறுண்டு கிடக்கிற நம்முடைய படைகளை ஒருமுகமாகச்சேர்த்து, இது முதல் நம்முடைய சத்துருவுக்கு,எவ்விதம் அத்தியந்தவருத்தம் உண்டு பண்ணலாமென்றும், நாம் அடைந்திருக்கிற நஷ்டத்தை எப்படிச் சீர்ப்படுத்தலாமென்றும், நமக்கு நேரிட்டிருக்கிற கொடிய ஆபத்தை எவ்வாறு நிவிர்த்தி செய்யலாமென்றும், [நாம் நன்மை அடையலாமென்று நம்முடைய மனதிற்றோன்றுகிற] நம்பிக்கையிலிருந்து என்ன மனோதிடம் அடையலாமென்றும், ஒரு நம்பிக்கையும் இல்லையாகில்,

...ரிக்கையினின்றும் என்ன துணிவு பெறலாமென்றும் கலந்து ஆலோசனை செய்வோமாக.

### சாத்தானது பிரமாண்டமான தேகத்தின் உவமானம்.

சாத்தான், இவ்வாறாகத் தன் சமீபத்திற் கிடந்தோனுடன் முகத்தை நோக்கிப் பேசி, நெருப்பலைமேல் தன்னுடைய சிரசைத் தலை உயர்த்திருக்கவும், தன் கண்கள் தீப்பொறி சிதறி விளங்கவும், தன்னுடைய உடல் கவிழ்ந்தவாறே நெடுந்தூரம் அகன்றும் நீண்டும் தோன்றவும், அக்கினிக்கடல் மேல் மிதந்துகொண்டு கிடந்தான். பழைய பாடல்களில் பிரசித்திபெற்ற பெருங் காயமுடையவர்களென்று சொல்லப்படுகிற விண்ணிற் பிறந்த தயித்தானிய, (Titanians) ஜூப்பித்தரோடு (Jupiter) போர்செய்த பூமியிற் பிறந்த தயித்தியர், (Titan) பிரையாரிய, (Briareos) பூர்வீகமான தாரசு (Tarsus) நகர்க்கருகுள்ள குகையில் வாழ்ந்த தைபன், (Typhon) ஆகிய இவர்களோ டவன் தேக ஆகிருதியில் ஒத்திருந்தான். அன்றியும் கடவுளாற் படைக்கப்பட்டுள்ள சகல நீந்தும் பிராணிகளெல்லாவற்றுள்ளும் பெருங்காத்திரமுடைய லெவியதன் (Leviathan) என்னும் கடற் பிராணியையும் ஒத்திருந்தான். (இப்பிராணியைக் குறித்து [அதிசயமாகக்] கடற்பிரயாணிகள் சொல்லுகிறபடி, நார்வேக்கடலின்மேல் இது தற்செயலாக நித்திரை செய்யும்போது இராத்திரி (வர இருள்) சூழ்ந்து, அப்பாற் பிரயாணஞ் செய்யமாட்டாமல் தடையுண்ட சிறிய கப்பல் மாலுமிகள் அநேக சமயங்களில் இது ஒரு தீவென்று நினைத்து இதனது காற்றுக் கோதுக்கமான பக்கத்தில் செதிள்பொதிந்த தோலின்மேல் நங்கூரம்போட்டு, கடல், இரவினால் இருளாகிய போர்வை கொண்டு மூடப்பட்டு, 'எப்போது வரும் எப்போது வரும்' என்று விரும்பிக் காத்திருக்கும் உதயகாலம் வரும்வரை, தங்குவார்கள். இது கிடந்தபடியே, சாத்தான் தனது பிரமாண்டமாக நீண்ட உடலோடு விலங்கு பூட்டப்பட்டு அழற்கடல் மேலே கிடந்தான்.

### சாத்தான் தீக்கடலினின்று எழுந்து போதல்.

தன் தீய எண்ணங்களை அவன் இஷ்டப்படி தடையின்றி நிறைவேற்றும்படி, சகலமும் ஆளும் பராபரனுடைய திருவுள்ளப் பாங்கும் அநுமதியும், அவனுக்கு இருக்கவில்லையானால், அத்தீக்கடலினின்று எழுந்திடவாவது, நிமிர்ந்து தலையெடுக்கவாவது வல்லமையில்லானாய் எந்நாளும் கிடந்திருப்பான். (அவ்வநுமதி தெற்காகக்

கொடுக்கப்பட்டதென்றால்,) அவன் மற்றவர்களுக்குத் தீங்குசெய்ய
முயல்வதினால் அறிந்தறிந்துச் செய்யுங் குற்றங்களால் மிகுந்த தண்
டனைக்கு ஆளாவதன்றி, அவனுடைய வன்மமெல்லாம், அவனால் தீய
வழியில் செலுத்தப்பட்ட மனிதனுக்கு முடிவில்லாத நன்மையை
யும் பொறுமையையும் இரக்கத்தையும் கடவுள் அருளும்படி செய்த
தன்றி, தனக்கு முன்பு சம்பவித்திருந்ததிலும் அனேக மடங் கதிக
மான நிர்க்குலைவையும், தேவ கோபத்தையும், தீவினைப்பயனையும்
தான் பொருந்தும்படி செய்வதையும் அவன் மனங் கொதித்து நோ
க்குவதற்காகவே.

## இரண்டு தூதர்களும் தரையை நோக்கிப் பறத்தல் ; தரையின் விவரணம்.

அந்த எரியினின்று சீக்கிரமாக அவனுடைய மிகப் பெரிய தே
கத்தை நிமிர்த்தினான். நிமிர்த்தவே, இரண்டுபக்கத்திலும் பின்னாகத்
தள்ளப்பட்ட சுவாலைகள் குவிவான உச்சிகளைச் சாய்வாக வீசிச்
சுருண்டு மடிந்து அலைகளாகி [சாத்தான் கிடந்த இடமாகிய, இருப
க்கத்து அலைகளுக்கும்] இடையே பயங்கரமான பள்ளமுண்டாக்
கின. பின்பு சிறகுகளைவிரித்து உயரப் பறந்து, அங்குள்ள கரு
நிறக்காற்று முன்னறியாத தாகிய (அவன் உடற்) பாரத்தின் கீழமு
ந்த அதன்மேல் படுத்த வண்ணமாகப் பறந்து சென்று, முன் சொ
ன்ன தீ எரிக்கப்போன்ற தீயினால் எரிவதுபோல கட்டித் தீ இடை
விடாதெரிந்து கொண்டிருக்கும் ஒன்றை, நிலமென்று சொல்லாமா
னால், தானும் அப்பெயர் பெறத்தக்க [அவ்வேரிக்கரையாகிய] கடின
மானதலத்தில் இறங்கினான். நிறத்திலே, அந்தத்தலமானது, பூமி
யின் கீழ் உள்ள காற்று வேகத்தினால் [பூகம்பம் உண்டாகி அத
னால்] பிலோரசினின்று (Pelorus) ஒரு குவடு பறிபட்டபோது பறி
பட்டபாகம் தோன்றும் தோற்றத்தை யொத்திருந்தது, அன்றி இடி
போல முழக்கஞ் செய்யும் (எரிமலையாகிய) எத்தினாமலையின் (Etna)
தகருண்ட பக்கத்தினின்றும் ஒரு குவடு அக்காற்று விசையாற் பறி
பட, அம்மலையின் எரி பொருள் நிறைந்த தீப்பற்றுந் தன்மையுடைய
குடல்கள் (அவ்விசையினாலேயே) எரிமூண்டு எரிந்தெழும்பும் தா
துப் பொருள்களின் வேகத்தினால் உயர்ந்து அக்காற்றுக்கு (அதிக
வேகங்கொடுத்து) உதவி, அவ்வெத்தினாமலையின் தகருண்ட பக்கத்
தில் கந்தகாதிக் கருக்குண்ட அடிப்பாகம் மிகுந்திருக்கும்படி
விட்டபோது அவ்வடிப்பாகந் தோன்றுந் தோற்றத்தை ஒத்திருந்

தது. இவ்விதமான இடமே, ஈசன் அருள்பெறுதானது பாதங்கள் இளைப்பாறும்படி தேடிக் கண்டுபிடித்த இடம். அவன் பின்னே அவனுக் கடுத்திருந்த தோழனும் தொடர்ந்து அங்குபோய்ச் சேர்ந்தான். அந்தத் தீக்கடலினின்றும் தப்பி வெளிப்பட்டது, தங்கள் தெய்வத்தன்மையினாலும், முன் நீங்கியிருந்த பலம் திரும்பவரப்பெற்றதனாலும் என்றும், ஈசுரானுக்கிரகத்தினால் அல்ல என்றும் அவர்கள் தங்களுள் இறுமாப்புற்றார்கள்.

### சாத்தான் தனது புதிய வாசஸ்தலத்தை வாழ்த்தல்.

அழிவடைந்துள்ள தேவ தூதத்தலைவன் இந்தச் சமயத்தில் [அவர்கள் இறங்கிய இடத்தை நோக்கிப்] பின்வருமாறு கூறுகின்றான்:—"இந்த நாடோ! இந்த நிலமோ! இந்தக் கொடுங்குளிரும் கொடுவெப்பும் உள்ள இடமோ! நாம் பரமண்டலத்துக்குப் பிரதியாக ஏற்றுக்கொள்ள வேண்டும்? துக்ககரமான இந்த இருளோ, அந்தத்திவ்விய ஒளிக்குப் பதிலாகப் பெற்றுக்கொள்ள வேண்டியது? இப்போது அரசனாயுள்ளவன், இன்னது நீதியென்று விதிக்கவும் விதித்தபடி நிலை நிறுத்தவும் வல்லவனாதலால், அவையெல்லாம் அவன் கருத்துப்படியே யிருக்கட்டும். மனோசத்திகளால் நம்மை ஒத்துப் பலத்தினால் நமக்கு அதிகனாகிய அவனிடத்திலிருந்து நாம் எவ்வளவு தூரத்தில் இருக்கிறோமோ, அவ்வளவும் நல்லதே. நித்தியானந்தத் தலங்களே! நீங்கள் எனக்கு விடை கொடுப்பீர்களாக. பயங்கரங்களே! வருவீராக. பாதாளமே! நீயும் வருவாயாக. ஏ அரிய ஆழமுடைய நரகே! காலதேச பேதத்தால் மாறுதல் அடையாத மனத்தை உடையேனாகிய உன்னுடைய புதிய அரசனை வரவேற்றுக் கொள்வாயாக. மனமானது [மற்றொன்றையுந் தனக்குச் சாரிடமாக வேண்டாது] தனக்குத்தானே இடமாயிருக்கிறது. அது [சுகம் அநுபவிக்கும் சுபாவமுடையதா யிருந்தால் நரகமத்தியிலும் சுகம் அடைவதாயும், துக்கம் அநுபவிக்கும் சுபாவமுடையதா யிருந்தால் சுவர்க்க மத்தியிலும் துக்கம் அடைவதாயும் இருப்பதால்] தனக்குள்ளே நரகத்தைச் சுவர்க்கமாக்கவும் சுவர்க்கத்தை நரகமாக்கவும் வல்லது. இடி ஒன்றினால் அதிகனாகிய அவனுக்குச் சற்றுத் தாழ்ந்திருக்கும் தாழ்வொழிய, வேறெந்தவகையிலும் குறையின்றி நான் இருக்கவேண்டிய படியே: முன்னிருந்ததுபோலவே எப்போதும் இருக்கின்றனன் என்னில், நான் எங்கிருந்தாலும் என்ன? இங்காயினும நாம் சுவாதீனராக வாழ்வோம். இங்கு, நாமனுபவிக்கப் பார்த்துத் தான்

பொறுமை கொள்ளும்படியான பொருளொன்றையும் எல்லாம் வல்லான் படைத்து வைக்கவில்லை. ஆதலால் அவன் இங்கிருந்தும் நம்மைத் துரத்த மாட்டான். இங்கு நாம் கவலையில்லாமல் அரசாட்சி செய்யலாம். நரகத்திலாயினும் இராசாங்கம் ஆசைப்படத்தக்க தென்பது என் அபிப்பிராயம். பரமண்டலத்தில் தொண்டுசெய்வதிலும் நரகத்தில் அரசாளுதல் நல்லதே.

### சாத்தான் பெயல்செபுவை நோக்கி அவர்கள் துணைவர்களை எழுப்ப வேண்டாமோ வென்றுகூற அவன் சம்மதித்தல்.

"இது நிற்க. மனமொத்த உண்மைத் தோழர்களாயும் நம்மோடு சமமாக இந்த அழிவடைந்தவர்களாயும் உள்ளவர்கள் இப்போது காணப்படுகிற நிலைமையில் யார் தன்னைச்சேர்ந்தாலும் அவர்களை மறதியடையச் செய்கின்ற இந்த எரிமேற் கிடக்கும்படி விட்டும், நாம் இப்போதிருக்கின்ற இந்தத் துக்கஸ்தானத்திலே அடையக்கூடியதை நம்மோடு அவர்கள் பகுந்தனுபவிக்கவாயினும், சிதறுண்டிருக்கும் படையைத் திரட்டிப் பரலோகத்தில் மீட்டக்கூடியதை மீட்கவாவது இந்தச் சுடுநரகில் தோற்கக் கூடியதைத் தோற்கவாவது இன்னம் ஒருதடவை முயற்சி செய்யவாயினும், அவர்களை அழையாமல் தாமதித்துக்கொண்டும் இருப்பானேன்?" இவ்வாறு சாத்தான் கூறப் பெயல் செபு மறுமொழி கொடுக்கிறான். "எல்லாம்வல்லான் ஒருவனொழிய வேறுயாராலும் வென்றிருக்கக் கூடாத பிரகாசமான சேனைக்குத் தலைவனே! எவ்வளவு அபாரமான உயரத்தினின்றும் அவர்கள் வீழ்ந்திருக்கிறார்களென்பதை யோசிக்கும்போது அதிசய மல்லவென்று சொல்லும்படியாக, அந்த எரிக்கடலில் (நாம் சற்று முன் கிடந்தபடியே) உணர்ச்சி யிழந்து மயங்கி இழிவாய்ப் படுத்துக்கிடக்கின்றார்கள் என்றாலும், அவர்கள் பல ஆபத்துக்களும் பயங்களும் அடைந்தபோது மிக உறுதியான ஊக்கத்தை உண்டாக்கியதும், நம்பிக்கை கடந்த அபாய சமயங்களில் அவர்கள் பல தடவை கேட்கப்பட்டதும், எதிரெதிராக நிற்கும் பகைவர்களைக் கிட்டி எதிர்க்கும் சமயங்களில் எல்லாத்தொனிகளிலும் அவர்கள் நன்றாக அறிந்து கொள்ளும் அறிகுறித் தொனியாய்ப் போர்முனையி னின்று சத்தித்ததும் ஆகிய உன்குரலை ஒரு தடவை கேட்பார்களானால் அவர்கள் உடனே நூதனமான தைரியம் அடைந்து இழந்த மெய்வலியையும் திரும்பப் பெறுவார்கள்."

இது சொல்லி முடியுமுன், அவ்விருவருள் மேலானவனாகிய பைசாசத்தலைவன், பரமண்டலத்திற்செய்யப்பட்டு வட்டமாய் கட்டியாகவும்கனமாகவும், உள்ள பெரிய கேடகம் பின்புறந்தூங்க, தீக்கடலின்கரையைநோக்கிச்செல்வானாயினான். அவனதுதோளில் தூங்கிய அக்கேடகத்தின் விசாலமான விருத்தவடிவமானது, தக்கணி நாட்டவராகிய கலிலியோ என்னும் வானசாஸ்திரி மாலைநேரத்திலே பிசோலிமலையின் உயரத்துள்ள ஓரிடத்திலிருந்தாவது,ஆர்னோபள்ளத்தாக்கிலிருந்தாவது களங்கமுள்ள நிலாமண்டலத்தில் ஓடுகின்றமுன் பார்த்திராத நிலங்கள் மலைகள்கடல்கள் ஆகியவைகளைப்பார்க்கும் ஆசையினால் தூரதிருஷ்டிக்கருவி வாயிலாகப் பார்க்கின்ற சந்திரனது வட்ட வடிவத்தை ஒத்திருந்தது. அவன் கையிற் பிடித்திருந்த ஈட்டியோடு ஒப்பிட்டுப்பார்த்தால், ஒருபிரதானமான மரக்கலத்துக்குப் பாய்மரமாகும்படி வெட்டப்பட்டதாய் [மிக உயர்ந்த மரங்கள் வளரும்] நார்வேயிலுள்ள மரங்களெல்லாவற்றிலும் உயர்ந்ததாயுள்ள மரம் ஒரு சிறு கைக்கொம்பே ஆகும். முன்பு பரமண்டலத்தின் நீலநிறமான தளத்தில் இனிதாகநடந்ததுபோலன்றி இங்கே எரியும் தரைமேல் தளரும் நடைகொண்டு, தள்ளாட்டத்தை நீக்கும்படி அவ்வீட்டியை ஊன்றி நடந்தான். [தீத்தரைமேல் நடப்பதன்றி] தீச்சுவாலையால் விதானிக்கப்பட்ட விண்முகட்டின்கீழ் தீக்காற்றடித்துச் சுட்டு வருத்தப்பட்டானானாலும், தீக்கடற்கரை மேலேநின்று, உணர்விழந்து வசமற்றுக்கிடந்த தன்னுடையபடைகளை அழைக்கும்வரையும், அத்துன்பமெல்லாம் பொறுத்துக்கொண்டான்.

## தீக்கடலிற்கிடக்கும் தேவதூதர்களின் நிலைமை.

நெருங்கிய விருட்சங்கள் உயர்ந்து வளைந்த கொம்புகள் ஒன்றோடொன்று பின்னிப் பந்தரிடப்பெற்ற வாலம்புரோசத்து நதிகளில் இலையுதிர்காலத்தில் [அம்மரங்களினின்றும் உதிர்ந்து அளவற்றவைகளாய்ப் பசுமையோடு மரத்திற்றங்கி யிருந்த பழைய பதவி இழந்தவைகளாய், சார்பின்றி நீர்மேல் மிதப்பவைகளாய்] நெருங்கிக் குவிந்துகிடக்கும் சருகுகளை அத்தூதர்கள் [தாமும் எண்ணிறந்து பழையபதவி யிழந்து வாடி நிறங்கெட்டு அநாதரவாய்த் தீக்கடல்மேல் மிதத்தலால்] ஒத்திருந்தார்கள், அன்றியும், [தங்கள் தேசத்திலே பஞ்சம் உண்டானபோது உயிர்வாழும்படி] பரதேசிகளாய் எகிப்து தேசத்திலுள்ள கோசேன் (Goshen) நாட்டிற்றங்கிய

இசரவேலரை (Israelites) [அவர்கள் தேசத்துக்குத்திரும்பும்படி முதலில் விடைகொடுத்துவிட்டுப் பின்பு கொல்லத்தொடர்ந்த] இழிவான மோசங்கலந்த பகைமையுடையவனுய் எகிப்து தேயத்தையாளும் பார்வோன் குதிரைப் படைவீரர்களோடு தொடர்ந்தகாலத்திலே, அங்கு இசரவேலர் [கடக்கஇருந்த செங்கடல் கடவுள் அருளால் நடுவே கரைதோன்ற வழிவிட்டு விலகக்கடந்து] அபாயமின்றிக் கரையில்நின்று, தங்களைத்தொடர்ந்துவந்த எகிப்தியருடைய பிணத்திரள்களும் தேருருளைக்கூட்டங்களும் மிதப்பதைக்காணும்படி அந்த எகிப்தியரை நீரில் அமிழ்த்திக்கொன்ற செங்கடலை [வாள் தண்டாயுதம், அரைக்கச்சு ஆகிய இவைகளையுடைய தோற்றத்தோடு நட்சத்திர மண்டலத்தில் காணப்படும்.] ஆயுததாரியான ஓரியன் (Orion) மிகுந்த வேகமுள்ள காற்றினுல் சுழலச்செய்யும்போது சிதறுண்டு மிதக்கும் கடற்பாசியையும் ஒத்தவர்களாய், தலைவீழ்ச்சியும் கேட்டையும் அடைந்து, பயங்கரமான வேற்றுரு அடைந்ததனுல் மலைப்புற்று தீக்கடல்மேலே நெருங்கி (அக்கடலை) மூடிக் கிடந்தார்கள். இவ்வாறு கிடந்தவர்களைச் சாத்தான் ஆழமான நரகமெல்லாம் எதிரொலி ஒலிக்கும்படி கூவி அழைப்பானுயினுன்.

## சாத்தான் பரியாசமொழிகளால் அவருக்கு நாணமுண்டாக்கி எழுப்புதல்.

அரசர்களே, அதிபதிகளே, அதிவீரர்களே, பரலோகத்தவர்களியாவரினும் சிறந்தவர்களே, முன் அப்பரலோக முடையவர்களாயிருந்தீர்கள் : உங்களிடத்து இப்போது காணப்படும் மயக்கம் போன்ற பயக்கம், நித்திய ஆவியர்களை [நிலையாகப்] பீடித்தல் கூடுமானுல், நீங்கள் இனி அப்பரலோகத்தை யிழந்தவர்களே ஆவீர். பரமண்டலத்துப் பள்ளத்தாக்கிற் றூங்குவதுபோல இங்கு சுகமாக நீங்கள் நித்திரைசெய்வதனுல், உங்களுடையசத்தியெல்லாம் யுத்தத்தில் அடைந்த சோர்வு நீரும்படி இளைப்பாறுதற்கு இந்த இடத்தைதெரிந்துகொண்டீர்கள்போலும். அல்லது இந்த இழிந்த படுத்த நிலைமையிலே உங்களைச்செயித்தவனை வணக்கஞ்செய்யத் தீர்மானித்துக்கொண்டீர்களோ ? [செயலிழந்து கிடக்கின்றவர்களே, சொல்லுங்கள்] அந்த வெற்றியாளன், கேரூபியர் செரூபியரென்று இருவகைப்பட்ட தெய்வகணங்கள், தங்கள் ஆயுதங்களும் கொடிகளும் எங்கும் சிதறிக்கிடக்கத் தீக்கடல்மேலேபுரண்டுகொண்டு கிடப்பதை இப்போது பார்க்கின்றுன். அவனுடைய கடுவேகமுடைய

படைவீரர்கள் பரமண்டல வாசலினின்று பார்த்து இது நல்ல சமயமென்பதைத்தெரிந்து உடனே இங்கு இறங்கி இப்படி இழிவாகக் கிடக்கும் நம்மேலேறி மிதித்துத் துவைப்பார்கள். அதுவுமல்லாமல் நாம் இந்தக்கடற் பள்ளத்தில் அழுந்திக்கழியும்படி. இடிச்சங்கிலிகொண்டு நம்மைக்கட்டி யமிழ்த்துவார்கள். ஆதலால் சோர்வை யகற்றி விழியுங்கள் எழுங்கள் அல்லவெனின் என்றும் இப்போது விழுந்து கிடக்கின்றபடியே கிடப்பீர்கள்.

## சாத்தானால் எழுப்பப்பட்டுப் பறக்கலுற்ற தூதர்களின் தோற்றம்.

இவ்வாறு சாத்தான் கூறியவார்த்தைகளைக் கேட்ட உடனே அத்தூதர்கள், தாங்கள் காக்கவேண்டிய காவல் துறையில் தூங்கிக்கொண்டிருந்த சேவகர்கள் தாங்கள் அஞ்சுந்தலைவன் (அப்படி தூங்கிக்கொண்டிருப்பதை நேராகப்) பார்த்த உடனே தூக்கம் நீங்கியும் நீங்காமலு மிருக்கும்போதே திடுக்கிட்டெழுவதுபோல, நாணங்கொண்டு சிறகு விரித்துக் குதித்தெழுந்தார்கள். எழுந்தவர்கள் தாங்கள் அடைந்திருந்த தீயநிலைமையை அறியாதிருக்கவில்லை, அன்றியும் தங்களை வருத்துகின்றவேதனையையும் உணராதிருக்கவில்லை ஆயினும், எண்ணில்லாத அவர்கள் தங்கள் சேனபதி [கூவிச்சொல்லிய] சொல்லுக்குப்பணிந்து [பறந்து சென்று] நரகத்து உச்சியின் கீழே [தரைக்குமேலே] மேலும் கீழும் பக்கமுமாக எங்கும் தீச்சூழ ஆகாயத்தில் வட்டமிட்டுக் கூடினார்கள். அப்படிக் கூடியவர்கள், முன்பு எகிப்துதேசத்துக்குக் கெட்டகாலம் சம்பவித்திருந்தபோது மோசே (Moses) என்பவன் தன்கையிலிருந்த [அற்புதஞ்செய்யும்] வல்லமைபொருந்திய கோலை [எகிப்து தேசமாகிய] நிலத்தின்மேல் நீட்டி அழைத்தபோது வளைவாகப்பறந்து கீழ்காற்றோடு சேர்ந்து வந்து பாஷண்டன் ஆகியபார்வோனுடைய நாட்டின்மேலே இருண்ட இராத்திரிபோலத்தங்கி நீல் (Nile) நதித்தீரம் [ஆகிய எகிப்து (Egypt) தேசம்] முழுதும் இருளச்செய்த கருமேகம்போன்ற வெட்டுக்கிளிக்கூட்டத்தைத் தொகையில் ஒத்திருந்தார்கள். அவர்களுடைய பெரியதலைவன் ஈட்டியை உயர்த்தி அசைத்து அவர்கள் செல்லவேண்டிய திசையைக்குறிப்பித்துக்காட்ட அவர்கள் கந்தகக் கல்லாகிய தரைமேல் அசைவின்றி இறங்கி அங்குள்ள மைதானமுழுதும் நிறைந்துநின்றார்கள்.

### அவர்கள் தரையில் நின்றதோற்றம்.

குடி நெருங்கிய [இத்தலிக்கு Italy] வட பூமியின் பனிக்கட்டி நிறைந்த பெருவயிற்றிலிருந்து பிறந்த மக்களானவர்களும், ஒரு பெருவெள்ளம் போன்று தானியூப் (Danube) நதியையும் ரயின் (Rhine) நதியையும் தாண்டித் தெற்கு நோக்கிச்சென்று [ரோமராச்சியத்தைக்கடந்து] கிப்பிராற்றருக்கு (Gibraltar) தெற்கேயுள்ள ஆப்பிரிக்க (Africa) மணல் வனாந்தரம் வரையும் சென்று பெருகியவர்களும் ஆகிய மிலேச்சக் கூட்டம் எதுவும் ஒப்பின்றி அவர்கள் அங்கு கூட்டமாக நின்றார்கள்.

### அவர்கள தலைவர்கள தெய்வங்களாகப் பிற்காலத்தில் வணங்கப்பட்டது.

இவ்வாறு அத்தரையின்மேலே கூடிய படையின் பல பெரிய வகுப்புக்களினும் சிறிய வகுப்புககளினும் உள்ள தலைவர்கள், தம்வகுப்பினின்று தங்கள் பெரிய சேனபதி எங்கு நின்றானென்று தேடி அங்குவிரைந்து சென்றார்கள். அவர்கள் வடிவத்தில் தேவர்களுக்குச் சமானமானவர்களாகவும் மனிதருக்கு உயர்ந்தவர்களாகவும் இருந்தார்கள். ராசமகத்துவ முடையவர்களாகவும் முன் பரமண்டலத்தில் சிங்காதனரூடராகவும் இருந்தார்களாயினும் அப்பரமண்டலத்திலுள்ள தேவநாம அட்டவணைகளில் அவர்கள் பேர் அவர்கள் கலகஞ்செய்ததினிமித்தம் கிறுக்குண்டு அழிபட்டொழிந்ததனால் இப்போது அவர்களைப்பற்றி ஞாபகப்படுத்தக் கூடிய சாதனம் ஒன்றுமில்லை இன்னமும், ஏவாள் மக்களாகிய மனிதரிடத்து அவர்கள் புதுப்பெயர்பெறவுமில்லை. பின்னாளில் மனிதருடைய பத்தியைச் சோதித்தறியும்படி கடவுள் திருவுளஞ்செய்து அருளிய அநுமதியினால் அவர்கள் உலகெங்கும் அலைந்து வஞ்சனையினாலும் பொய்யினாலும் மனிதருள்ளே பெரும்பாலாரை மயக்கிக் கெட்டவழியிலே செலுத்தி, அவர்களுடைய சிருட்டிகராகிய கடவுளின் அடிமையைக் கைவிடச்செய்தும், அவர்களைப்படைத்த அக்கடவுளுடைய கண்ணுக்குப்புலப்படாத சோதிச்சொரூபத்தை அவர்கள் பலகாலங்களில் மிருகபேதத்தையுடைய விக்கிரகங்களாகத்தாபித்து அந்த விக்கிரகங்களுக்குப் பொன்னினால் ஆகிய ஆடம்பரத்துடன் உல்லாச மதச்சடங்குகளியற்றுவித்தும், பேய்க்கூட்டங்களைத் தெய்வங்களாக வணங்கச்செய்தும் வந்தகாலத்தில்

கிறிஸ்துமதம் வழங்காததேசங்களிலே பல நாமபேதங்களாலும் பல விக்கிரகங்களாலும் அவர்கள் மனிதருக்குத் தெரியலானார்கள்.

## அப்படைத்தலைவர்களின் பெயர் முதலியவிவரணம்.

வாக்கணங்கே! அக்காலத்தில் அப்படைத்தலைவர்கள் எவ்வெவ் பெயர்களினால் விளங்கினார்களென்றும், அவர்களது பெரிய சேனாதிபதி அழைக்க அக்கினிப்படுக்கையினின்றும் எழுந்து, [தம்போல் இராணுவத்தில் அந்தஸ்து அடைந்திராத] மற்றைய சாமானியதூதர் [மரியாதையோடு] ஒதுங்கித் தூர நிற்கவும், ஒருவர் பின் ஒருவராக தம் தம் அந்தஸ்தின் முறைமைப்படியே எவர் முதலும் எவர் கடையுமாகத்தம் தலைவனைநோக்கி அவன் நின்ற பாழ்ங்கரையிடத்துச் சார்ந்தார்களென்றும் சொல்வாயாக.

தாங்கள் விழுந்திருந்த நரகத்தினின்றும் வெளிப்பட்டு பூமியின்மேல் இரைதேடி அலையுங்காலத்திலே, நெடுங்காலங் கழிந்தபின், கடவுளுடைய ஆலயத்துக்கும் பலிபீடத்துக்கும் அருகே தங்கள் ஆலயத்தையும் பலிபீடத்தையும் அச்சமின்றித் தாபித்து, பலஸ்தினா [Palestine] வைச் சுற்றியுள்ள [புறமதச்] சாதியார்களால் வணங்கப்பெற்று, சீயோன் மலைமேல் [கட்டப்பட்டுள்ள தேவாலயத்தில் சுவர்ணத்தினால் செய்து எதிரெதிராகப் பக்கத்துக் கொன்றாகச் சிறகு விரித்து விளங்கும்] கெருபி [விக்கிரகங்] களின் மத்தியில் சுவர்ண கசிதமான கிருபாசனத்தின்மேல் [சோதிமயமேகமாய்] இடித்தொனிசெய்து கர்ச்சித்து வீற்றிருக்கும் எகோவாவின் (Jehova) சந்நிதிக் கெதிரிலேயே துணிந்து நின்று, அப்படி நின்றமட்டோடு திருத்திபடையாமல் சில சில காலங்களில் அவருடைய கருப்பக் கிரகத்தினுள்ளும் அருவருப்பான தங்கள் நிலயங்களை நாட்டி, தங்களுக்குச் செய்யப்படும் வெறுப்பும் அச்சமும் விளைக்கும் குரூரமான கிரியைகளால் அவருக்குப் பிரியமாக அனுட்டிக்கப்படும் பரிசுத்த கிரியைகளையும் பத்தி சிரத்தையோடு கொண்டாடப்படும் திருவிழாக்களையும் அசுசிப்படுத்தி, [பகிரங்கமாக அவருக்கு அவமதிசெய்யத்] துணிந்து அவருடைய ஒளிக்குமுன் தங்கள் இருளை எதிர்நிற்கச் செய்தவர்கள் அந்தத் தலைவர்களே.

## மோளோகு (Moloch.)

அவர்களுள் [சாத்தான் நின்ற கரையில்] முதல் வந்து சேர்ந்தவன் மோளோகு என்னும் பயங்கரமான அரசன். இவன் [பிறகா

லத்தில்] ஏனக்கிடப்பட்ட பிள்ளைகளாகிய நரபலிகளின் இரத்த நீரி லும், (அதன் எதிரே) வளர்த்த திவழியாகத் தன்னுடைய கொடிய பயங்கரமான விக்கிரகத்தினிடம் பெற்றோரால் செலுத்தப்பட்ட அப்பிள்ளைகள் கதறி அழுங் கூக்குரல் பேரிகை முழக்கத்திலும் பறை முழக்கத்திலும் அமிழ்ந்து கேளாதபடி அடக்கப்பட்டாலும், அழுகின்ற பெற்றோரது கண்ணீரிலும் தோய்ந்த கொடியோன். அம்மோனியர் இவனை [அவர்களுடைய பிரதானநகரம் ஆகிய] இரப் பாவிலும், (Rabba) அதைச்சூழ்ந்து நீர்வளம் படைத்த மைதானங்க ளிலும், [அவர்கள் ஆளுகைக்குட்பட்ட] அருகோப்பு (Argob) பாசான் (Basan) நாடுகளிலும் அவர்களுடைய இராச்சியத்தின் தெற்குக் கடைசி எல்லையாக ஓடும் அருநோ (Arnon) [நதியின் வடக்குத்] தீரத்திலும் வணங்கிவந்தார்கள். அஞ்சாமல் கடவுளுக்கு அவ்வளவு சமீபமான இடங்களில் வழிபடப்பெற்றதோடு மனரம்மி யம் அடையாமல், தன்னின்மேம்பட்ட விவேகியரில்லாத சாலோ மோனை மயக்கி, இறைவன் ஆலயத்துக்கு நேரெதிரே வசைப்பொற் றை (Opprobrious hill) யின்மேல் தனக்காலயம் கட்டுவித்து இன் னோம் (Hinnom) என்னும் இனிய பள்ளத்தாக்கினைத் தான் வாழும் சோலையாக்கினான். அக்காரணத்தினால் அந்த இன்னோம் [அவனுக் குப் பலி செலுத்துகையில் முழக்கப்படும், பேரிகையென்று எபிரேய பாஷையில் பொருள்படும் தோப்பு (Toph) என்னும் பதத்தடியாகப் பிறந்த] தோப்பேத்தென்று (Tophet) வழங்கப்பெற்றது. அன்றி யும் அது [பிலகாலஞ் சென்றபின்] நரகத்தின் மாதிரியாகக்கருதப் பட்டு க்கரிய [நரகமென்று எபிரேய பாஷையில் பொருள்படும்] கெகனு (Gehenna) எனவும் பெயர் பெற்றது.

## கேமோசு (Chemos.)

அவனுக்குப் பின்வந்தவன், [தெற்கே] ஆரோவோ (Aroar) நகரிலிருந்து [வடக்கே] நேபோ (Nebo) மலைவரையும் அபாரிம் (Abarim) மலைத்தொடரின் தெற்குக் கடைசிச்சாரின் காடுகள் வரையும், சீகோன் (Seon) என்னும் அரசன் ஆட்சிக்குள ளடங்கிய எஸ்போன் (Hesebon) ஒரோனயீம (Horonaim) என்ற பட்டணங் களிலும், இவைகளுக்கப்பால் திராட்சக்கொடிகள் மிகுந்த சிபிமா (Sibma) என்னும் நகரத்தை அடுத்த புஷ்பம்மலிந்த பள்ளத்தாக்கி லும், [கிழக்கு மேற்காக] எலியாலே (Eleale) நகரத்திருந்து [ஜலத் திலும் கரையிலும்] கீல் (Asphalt) மிகுந்து காணப்படும் உப்பேரி

(The Dead Sea) க்கரையையும், மோவாபி (Moabites) பயபத்தியோடு வழிபாடு செய்யப்பட்ட இழிந்த நிர்வாணியான காமோசு (Chemos) என்போன். [எகித்து தேசத்திலுள்ள] நீல் (Nile) நதித்தீரத்தினின்று [தங்கள் தேசத்துக்குப்] பிரயாணப்பட்டுவந்த இசரவேலரை, பின் அவர்களுக்குத் துக்ககரமான கேடுவிளைத்த மோகவிகாரக் கிரியைகளை, வழியிலிருந்த சித்தீம் (Sittim) நகரத்தில், தனக்குச் செய்யும்படி மயக்கியகாலத்தில் பேயோர் (Peor) என்று வேறொரு பெயரும் பெற்றான். அங்கிருந்தும் தன் காமச்சடங்குகளை, [நரபலி ஏற்றலினால்] மக்கட் கொலைஞனாகிய மோளோகின் சோலைக்கருகு உள்ள [முன்சொன்ன] நிந்தனை மலைவரையும், (விகாரம் விரோதத்துக்குக் கிட்டியதாக,) [காமத்தால் பகை சீக்கிரமாக உண்டாகும் என்னும் உண்மையை விளக்குவதுபோல] பரவச்செய்தான். இவ்வாறு பரவச்செய்தல், நல்ல அரசனாகிய யோசியா (Josiah) என்பவன் இருவரையும் நரகத்துக் கோட்டும்வரை நிகழ்ந்தது.

பாகாலிமும் (Baalim) அஷ்டரோத்தும் (Ashtaroth) வருதல்.

இவ்விருவரோடும் அங்குவந்தவர்கள் [இசரவேலருக்குக் கடவுள் கொடுப்பதாக வாக்களித்திருந்த நாட்டுக்கு ஓர்] எல்லையாக ஓடுகின்ற ஐப்பிராத்து (Euphrates) என்னும் [மிக நெடுங்காலத்துக்கு முந்திய சாதனங்களில் காணப்படும்] புராதன நாமத்தையுடைய ஆற்றுக்கும் சீரியா (Syria) தேசத்தை எகித்து (Egypt) தேயத்தினின்றும் பிரிக்கிற [பீசார் (Besor)] நதிக்கும் இடையே உள்ள தேசமெங்கும் பாகாலீம் (Baalim) என்றும் அஷ்டரோத்தென்றும் (Ashtaroth) கூட்டப் பொதுப்பெயர்களால் வழங்கப்பெற்ற இரண்டு கூட்டத்தார். அவர்களுள் முந்தியவர்கள் [அவராவார் பாகாலீம்] புருஷரும் பிந்தியவர்கள் [அவர் ஆவார் அஷ்டரோத்து] ஸ்திரிகளும் ஆனவர்கள். அவர்கள் இப்படி ஆண்வடிவம் பெண்வடிவம் எவ்வாறு அடைந்தார்களென்னில் சொல்லுவோம். தங்களுடைய தேகம், சூக்குமமானதாய், அவயவங்களாலும் சந்துகளாலும் கட்டுப்பட்டுத் தம் தொழில் சிறிதும் மட்டுப் படுதல் இல்லாததாய், [நமது மனம் எண்ணியபடி பறத்தல் முதலிய செய்ய] தடையாக விருக்கின்ற நம்முடைய மாமிச தேகம்போல் ஒடியும் தன்மையுடைய எலும்புகளை ஆதாரமாகக்கொண்டு செய்யப்படாததாய், பெரியதாக வேண்டினும் சிறியதாக வேண்டினும் பிரகாசமுடையதாக வேண்டினும் இருளுடையதாக வேண்டினும் எது விரும்பினும் அதுவாகி தனாயை

விட்டுக் காற்றில் உலாவித் திரியும் உபகாரமோ அபகாரமோ வேண்டிய வேண்டியவாறு செய்யவும் கலப்பற்றபொருள்களால் ஆக்கப்பட்டு, எவ்வடிவமும் ஆகும் தன்மையுடையதாய் இருப்பதனால் [வேண்டிய உருவமெடுக்கும் சத்தியுடையவர்களாயிருக்கிற] ஆவியர்கள் தங்களிஷ்டப்படியே ஆண் அல்லது பெண்ணுரு வெடுக்கவும் ஒரேகாலத்தில் இரண்டுருவும் எடுக்கவும் வல்லவர்கள். இந்த [பாகாலீம் அஷ்டரோத்து என்ற தேவ] கணங்களைத் தொழுவதற்காக, இசுரவேலர் தங்களுக்கு ஆதாரபலமாய் உயிர்வாழ்தன்மையோடு விளங்கும் கடவுளை பலதடவை கைவிட்டு, அவருடைய சன்மார்க்க நிலயமாகிய பலிபீடத்தைச் சேவை செய்தலொழிந்து, [அக்கணங்களைச்சார்ந்த] மிருகத்தன்மையுடைய [பைசாசத்] தெய்வங்களை யிழிவாகத் தாழ்ந்து வணங்கினார்கள். இப்படிச் செய்தநிமித்தம் அவர்கள், யுத்தத்தில் தலை தாழ்த்தப்பட்டு, [தங்களுக்குமுன்பு தோற்ற] இழிவான பகைவர்களின் ஈட்டிகளினால் வீழ்த்தப்பட்டனர். இந்தக்கணங்கள் மத்தியில் பெனிக்கியர்களால்(Phœnicians) அத்தராத்தி (Astarte)யென்றும் வானராக்கினி (Queen of heaven) யென்றும் அழைக்கப் பெற்றவளும் பிறைபோன்ற உருவங்கொண்ட கொம்புகளையுடையவளும் ஆகிய அத்தரோத்து (Astoreth) என்பவள் வந்தாள். அவளுடைய பிரகாசமான விக்கிரகத்துக்கு இராத்திரியில் நில வெறிக்கும்போது சீதோனிலுள்ள (Sidon) [பெனிக்கிய]கன்னியர்கள் நேர்த்திக்கடன் செலுத்தித் தோத்திரப்பாட்டுகள் பாடி வந்தார்கள். சீயோனிலும் (Sion) [இசுரவேலரால்] அவளுடைய புகழ், பாடப்பெற்று வணங்கப்பட்டாள். அங்கே உள்ள அருவருப்புப் பருவதத்தின்மேல், இயல்பாக நிறைந்த அறிவுடையான் ஆயினும் விக்கிரகபத்தியுடைய அழகிய மனைவியர்கள் வார்த்தைகேட்டு மயங்கி இழிவான விக்கிரகங்களுக்கு வணங்கிய மனைவியின் வசப்பட்ட [சாலோமோன் என்ற] அரசன் அவளுக்காக கட்டுவிக்கப்பட்ட ஆலயம் இருந்தது.

## தம்முசு (Thamuz.)

அவன் பின் தம்மூசுவந்தான். [இவன் யாரெனில் லிபனோன் மலையில் காட்டுப்பன்றியினால் கொல்லப்பட்ட காமதேவனையென்று கதைகளிற்கூறப்பட்டவனே] இவன் வருஷந்தோறும் [மேற்கூறிய] லிபனோன் (Lebonan) மலையில் அடைந்த காயமானது சீரியமாதர்களை உருகும்படி செய்ததனால், அவனுக்கு நேர்ந்ததைப்பற்றி

அவர்கள் விசனம் அடைந்து [அவனது விசன உற்சவதினமாகிய] ஒரு கோடைநாள் முழுதும் மோகனக்கண்ணிகள் பாடிப் புலம்பி அழுதுவந்தார்கள். [அக்காமதேவன் இறந்ததற்கு அழுதும், திரும்பி உயிர்த்தெழுந்ததற்காக சந்தோஷப்பட்டும் கொண்டாடும்] விசன உற்சவம் நிகழுங்காலத்தில் மெள்ளச்செல்லும் தன்மை யுடைய அடோனிசநதி அதன் உற்பத்தி ஸ்தானமாகிய லிபனோன் மலையி னின்றும், தம்மூசின் வருஷாந்தர காயத்தின் இரத்தம் கலந்ததென் றெண்ணும்படி, சிவந்த நிறத்தோடு கடல் நோக்கிச் சென்றது. இந்தமோகனசரித்திரம் சீயோனில் [இசரவேல்]மாதரையும் பீடித்து இவ்வித விரகதாபத்தை விளைக்க, அவர்கள் கடவுளுடைய கோவில் வாயிலிலேயே தம்மூசுக்காக மோகனப் புலம்பல் புலம்பிக் கொண் டிருப்பதை எசேக்கியேல் (Ezekiel) என்னும் தீர்க்கதரிசி தமது [கடவுள் அருளால் உண்டாகிய] தெய்வீக ஞானத்தினால் வழி காட்டப்பெற்று அன்னிய மதத்தை அநுசரித்த யூதாவின் (Judah) மனிதர்கள் துன்மார்க்கமான விக்கிரகாராதனஞ் செய்வதைத்[தீர்க்க தரிசனமாகப்] பார்த்தபோது கண்டார்.

## தாகோன். (Dagon)

[தம்மூசுக்குப்] பின்பு, தன்னாலயத்தில், யுத்தத்தில் பெலிஸ் தர் (Philistines) இசரவேலரிடத்திலிருந்து கவர்ந்து வைக் கப்பட்ட தெய்வப் பேழையால் (Ark) தலையும் கையும் தறிக் கப்பட்டுத் தன் பிரதிவிக்கிரகம் பங்கமுற்றுத் தன்னை வணங் குவோர்க்கு அவமானம் வருவித்ததனால் [சிபகுமரிகள் தம் மூசின் நிமித்தம் பாவனைவிசனம் அடைந்தது போலன்றி] உண் மையாகவே விசனம் அடைந்த ஒருவன் வந்தான். அவன்பேர் தா கோன். (Dagon) அவன் மேற்பாகம் மனிதரூபமும் கீழ்ப்பாகம் மச்சரூபமும் உள்ள சுபாவ விரோதமான தேகியாகிய சமுத்திரத் தெய்வம். [மேற் சொல்லியபடி குறைவடைந்தவனும் விரூபனும்-] ஆயினும் [பிலித்தியா நாட்டில் (Palestine)] அசோத்தேயில் (Azotus) ஓர் உன்னத ஸ்தானத்தில் தனக்கு ஆலயம் கட்டப்பெ ற்று [அந்தப்] பிலித்திய நாட்டில் காத்து (Gath) அஸ்கலோன் (Askalon) எக்கிரோன் (Accaron) [அந்நாட்டின் தெற்கு] எல்லை யான காசா (Gaza) ஆகிய இந்த நகரங்களில் பயத்தோடு வணங் கப்பட்டான்.

## ரிம்மோன். (Rimmon)

அவனுக்குப்பின் வந்தவன் ரிம்மோன் (Rimmon) இவன் ஆபனா (Abbana) பருபார் (Pharphar) என்னும் ஆறுகளின் [மத்தியமான] தீரத்திலுள்ள அழகிய மனோகரமான தமஸ்கு (Damascus) நகரத்தைத் தனக்கு வாசஸ்தலமாகக் கொண்டவன். இவனும் கடவுளுடைய ஆலய சேவைக்குத் துணிவாய் விரோதம் செய்தவன்.— தனது அடியாருள் [தன்னைக் கைவிட்டு இசரவேலரின் தேவனுக்கு அடிமையான நாகமான் (Naaman) என்னும்] குட்டரோகி ஒருவனை இழந்து [அவனுக்குப் பிரதியாக ஆகாசு (Ahaz) என்னும்] ஒரு அரசனைத் [தன் தொண்டனாக]ப்பெற்றான். தன்னைச் செயித்தும் [————யுத்தத்தில் அபசெயத்தினின்றும் தன்னால் தப்புவிக்கப் பெறாத தன் அடியார்களைச் செயித்தும்————] தன் மயக்கத்துக்குள்ளான அந்த ஆகாசு என்னும் அரசனைக் கடவுளது பலிபீடத்தைத் துறந்து அகற்றி அதற்குப்பதிலாகச் சிரியரது பலிபீடத்தின் மாதிரியாக நிருமித்த பலிபீடத்தை, நாட்டச்செய்தான். அவ்வாறு நாட்டுவித்தது எதற்காகவெனில், அப்பலிபீடத்தின்மேல் அவ்வரசன் தான் வெற்றிகொண்ட தெய்வங்களுக்கே [————தங்கள் தங்கள் அடியார்களைத் தோலாமலிருக்கும்படி செய்யமாட்டாதொழிந்த தெய்வங்களுக்கே————] தேவனுக்கு அருவருப்பான தகனபலிகளைச் செலுத்துதற்காகவே. இப்போது சொல்லியவர்களுக்குப் பின்பு, பூர்வத்தில் ஆசிரிசு (Osiris) ஐசிசு (Isis) ஓரசு (Orus) முதலான பிரபலமான பெயர்களோடு விளங்கித் தங்கள் மிருகத் தலைகளையுடைய விகாரமான ரூபங்களாலும் மாயாசாலங்களாலும், மதப்பைத்தியங்கொண்ட எகிப்தியரையும் அவர்கள் குருக்கள் மாரையும் மயக்கி மனுஷ வேடத்தை விரும்பாது மிருகவேடம் பூண்டு அலைந்து திரியும் தெய்வங்களை வணங்கும்படி செய்த ஒரு கூட்டம் வந்தது. எகிப்தியரன்றி, இசரவேலரும் இந்த மிருகவணக்கத் தொற்றுவியாதியி னின்றும் தப்பவில்லையென்பது, அவர்கள் எகித்தியரிடம் இரவலாக வாங்கியிருந்த தங்கத்தை ஓரேப்பில் (Oreb) ஆவின் கன்றாக உருவார்ப்பித்தபோது விளங்கியது. [தாவீதின் பெயரனாகிய ரெகொபெயாம் (Rehoboam) என்னும் அரசனுக்கு விரோதமாகக்] கலகஞ்செய்த [யெரொபெயாம் (Jeroboam) என்னும்] அரசன் [அக்கலகத்தினால் பெற்ற இராச்சியத்தின் வடதென்னெல்லைகளில் முறையே உள்ள] பெத்தேல் (Bethel) தாண் (Dan) என்னும் நகரங்களில் தன்னைச் சிருட்டித்த கடவுளைப் புல்

மேயும் மாடுபோல [பாவித்து அந்நகரங்க ளொவ்வொன்றுக்கும
ஒவ்வொன்றாக இரண்டு] விக்கிரகமாக்கி வைத்து, [மேற்கூறியபடி
இசுரவேலர் கடவுளை மிருக உருவாக்கும்] அந்தப்பாவத்தை இரட்
டிப்பாகச் செய்தான். வளப்பத்தையுடைய எகித்தினின்றும் இசுர
வேலர் படையோடு புறப்பட்ட இராத்திரியில், எகித்தியருடைய
முதற் பிறந்த பிள்ளைகளையும், அவர்களுடைய களைக்கும் கடவுளா
கிய மிருகங்களின் முதலீற்றுக் கன்றுகளையும் ஓரேதாக்காற் றாக்கி
சங்காரஞ்செய்த எகோவாவையே இவ்விதம் உருவாக்கினான் !

## பேலியாள். (Belial)

[தேவதூதர் பவனியில் முதல் வரும் கணத்துக்குச் சற்றுக்கு
றையச் சமமான கடைசியில் வருங்கணத்தை உடையவனாய்] கடை
சியாக வந்தவன் பேலியாள் (Belial) பரலோகத்தினின்றும் கீழே
விழுந்த ஆவிகளுள் இவனிலும் மிகுந்த மோகவிகார முள்ள ஆவி
யாவது, துன்மார்க்கத்தை [அதனால் அடையும் காமநுகர்ச்சி முத
லிய பலன்களுக்காக அன்றி] அத்துன்மார்க்கத்தின் நிமித்தமே
இச்சிக்கின்ற அவ்வளவு இழிவுள்ள ஆவியாவது இல்லை. இவனுக்
கென்று ஒரு ஆலயமுங் கட்டப்படவாது ஒரு பலிபீடத்திலும் தூப
ங்கொடுக்கப்படவாவது இல்லை. ஆயினும், தேவாலயத்தினுள்ளே
காமலீலைகளையும் [தேவனுக்குக் கொண்டுவந்த பலிகளைக் கொள்ளை
யிடும்] முரட்டுத் தொழில்களையுஞ் செய்தவர்களாகிய எலியின் (Eli)
குமாரர்போல கோவிற் பூசகர் நாஸ்திகராக மாறும்போது அப்படிமா
றும் ஆலயங்களிலும் அவ்வாலயத்துப் பலிபீடங்களிலும் இவனிலும்
அதிகமாக எந்தத்தெய்வம் அடுத்தடுத்து வாழ்கின்றது ? [இல்லையென்
றபடி] இராஜசபைகளிலும், அரமனைகளிலும் களியாட்டுக்களும் மூர்
க்கமோக கிருத்தியங்களும் செய்வதனால் உண்டாகும் பேரிரைச்சல்
உன்னதமான கோபுரங்களின் உச்சிக்குமேலேயும் போய்த் தொனிக்
கும் காமாதுர நகரங்களிலும் இவன் ஆட்சிசெய்கின்றான். இராக்கால
மானது தெருக்களில் இருளைப் பரப்புங்காலத்தில் [தங்கள் நடக்கை
யினால்] பேலியாளின் மக்கள் [என்று சொல்லத்தக்க மனிதர்கள்]
அகந்தை வெறியும் மதுபான வெறியும் ஒருங்கேகொண்டு அத்தெருக்
களில் உலாவித்திரிகின்றார்கள். அவர்களுடைய வரம்புகடந்த தீச்
செய்கைகளுக்கு, அச்செய்கைகள் நடந்த சோதோமின் (Sodom)
தெருக்களும், கிபியா (Gibeah) நகரத்தில் பின் சொல்லும் மானபங்க
மாகிய கேட்டினும் பெருங்கேடு விளையாமற் காக்கும் பொருட்டு

விருந்தோம்பும் வீட்டினின்று விருந்தாடியின் மனையாள் வெளியே தள்ளப்பட்டுத் துராகிருதத்துக் குள்ளாம்படி விடப்பட்ட இராத்திரியும் சாக்ஷிகள்.

## தைத்தன் (Titan) சனி (Saturn) யூப்பித்தர் (Jupiter.)

இது வரையும் கூடிய தெய்வங்கள் சாத்தானுடைய படைத்தலைவர்களுள் அந்தஸ்திலும் வல்லமையிலும் முதன்மைபெற்றவர்கள். மற்றவர்களும் பேர்பெற்றவர்களேயாயினும் அவர்கள் பேர்சொல்லப் புகுந்தால் பெருகும். கிரேக்க தெய்வங்கள் அவர்களைச் சேர்ந்தவர்களே. அத்தெய்வங்கள், [நோவா (Noah) வின்பேரன் ஆகும்] யாவானின் (Javan) சந்ததியாராகிய யவனரென்ற கிரேக்கரால் கடவுளரென்று வணங்கப்பெற்றாலும் [அவ்யவனர் ஆதியில் வணங்கிய தெய்வங்களாகிய] வானத்தையும் (Uranus) பூமியையும் (Gaia) [முறையே] தகப்பனும் தாயுமென்று பெருமையாகக் கொண்டதனால், அவ்விரு தெய்வங்களுக்கும் பின்னானவர்களென்று ஒத்துக் கொள்ளப்பட்டவர்களே. வானத்தின் முதற் புத்திரனாகிய தைத்தன் (Titan) எண்ணிறந்த பெருந்தேகிகளாகிய தைத்தியர் [இராக்கதர்] என்ற சந்ததிக் கூட்டத்தோடு அக்கிரேக்க தெய்வங்களுள் உள்ளவன். [அவன் சேஷ்ட புத்திரனதலால் தனக்குக் கிடைத்திருந்த இராச்சியாதி பத்தியமாகிய] சென்ம சுதந்தரத்தை தன் தம்பியாகிய சனி (Saturn) யால் பறித்துக்கொள்ளப்பட்டான். அச்சனியும் தனக்கு இரியாள் (Rhea) என்ற மனையாட்டியிடம் பிறந்த தன்னினும் பலசாலியாகிய யூப்பித்தரால் (Jupiter) [தன்னால் தன் தமையன் தைத்தன் அடைந்த] அந்தக்கதியை அடைந்தான் [இராச்சியம் பறிக்கப்பட்டான்] இவ்வாறு கொள்ளைகொண்ட இராச்சியத்தை யூப்பித்தர் ஆண்டுவந்தான். இந்தத் தேவர்களெல்லாம் [இப்போது காந்தியா (Candia) என்று சொல்லப்படும்] கிரீட்டிலும் (Crete) [விசேஷமாகக், அக்கிரீட்டிலுள்ள] ஐதா (Ida) விலும் ஆதியில் விளங்கினார்கள். அங்கிருந்து புறப்பட்டுக் குளிர்மிகு ஒலிம்பசு (Olympus) மலையின் பனிச்சிகரத்துக்குப்போய் அவர்களுடைய உச்சிவானமாகிய மத்திய வாயுமண்டலத்தில் வாழ்ந்தார்கள். அன்றியும் அவர்களுட் சிலர், தெல்பி (Delphi) நகர் இருக்கப்பெற்ற [பார்னசசு (Parnassus) என்ற] மலையின்மீதும் தொடனா(Dodona) என்னும் நகரத்திலும் [கிரேக்க ஜாதியாருள் ஒரு பகுதியாராகிய] தோரியரது (Doric) நாடு முழுவதும் வசித்தார்கள் மற்றவர்கள்

[புறத்தேசத்துக்குத் துரத்தப்பட்ட] கிழச்சனியோடு ஓடி ஆதரியாக் (Adria) கடல் தாண்டி இத்தலியிலும் பிராஞ்சு முதலிய கேல்ட்டிக்கு (Celtic) நாடுகளிலும் அப்பால் [உலகத்தின் மேற்கு] அந்தத்திலுள்ள [இங்கிலாந்து ஸ்கோத்துலாந்து அடங்கிய பிரித்தாணியா முதலிய] தீவுகளிலும் அலைந்து திரிந்தார்கள்.

## சாத்தான் தன் சைனியத்தை உற்சாகப்படுத்தித் தனது விருதுக் கொடியை உயர்த்தும்படி கட்டளையிடுதல்.

இவர்களெல்லாரும் இன்னும் அனேகரும் [சாத்தான் நின்ற இடம் நோக்கிவந்து] கூடினார்கள். அவர்கள் முகங்கள் [வெட்கத்தால்] கவிழ்ந்து [விசனத்தால்] வாட்டமுற்றுத் தோன்றின. ஆயினும் அவர்களுடைய தலைவன் நம்பிக்கையைக் கைவிடாதிருப்பதையும், அடைந்த நாசத்திலே தாங்கள் முழுதும் நசித்துப் போகாதிருப்பதையும் பார்த்ததனால் உண்டாகிய சொற்ப சந்தோஷம் அவர்கள் முகத்திலே [பிரகாசமானதாக இல்லாமல்] மங்கலாகத்தோன்றியது. அந்தத் தோற்றம், அவன் முகத்திலும் [ஏக்கமுற்ற நோக்கமும் பொலிவிழந்து தோன்றிய சந்தோஷ லேசமும் ஆகிய] அதேவிதத் தோற்றத்தைப் பிறப்பித்தது. ஆனால் அவன் [தன் சந்தோஷத்தை மிகத் தெளிவாகவாவது நெடுநேரமாகவாவது காட்டுதல் தகுதியன்றென்று அதை மறைத்து] தன் இயல்பான இறுமாந்த தோற்றத்தை மீட்டுக்கொண்டு, தோற்றத்தில் பயன் நிறைந்தவைகளாகவும் உண்மையில் பயனற்றவைகளாகவும் உள்ள ஆடம்பரமான வார்த்தைகளால் அவர்களுடைய தளர்வுற்ற தைரியத்தை இதமாகக் கிளப்பி நிலைநிறுத்தி அவர்கள் கொண்டிருந்த பயம் அகன்றோடும்படி செய்தான். பின்பு பேரொலி செய்யும் காளமும் சின்னமும் போர்த்தொனி முழக்கின தக்கணமே தன் பெருங்கொடி உயர்த்தப்பட வேண்டுமென்று உடனே கட்டளையிடுகின்றான். அந்தக் [கொடி பிடிக்கும்] கவுரவமானவேலை தனக்குரித்தென்று, ஆசாசில் (Azazel) என்ற ஒரு நெடுகவளர்ந்த கெருபி உரிமை கொண்டாடிப் பிரபை வீசும் கொடிக்கம்பத்தினின்றும் அந்த அரசக்கொடி [யின்சேலை] யை அவிழ்த்து விரித்து உயர்த்தினான். அக்கொடி பூரணமாக உயர்த்தப்பட்டபோது அது, இரத்தினம் ஒளிவிடும் தங்கம் ஆகிய இவற்றைக்கொண்டு சித்திரிக்கப்பட்ட, செராபிகள் [வசத்திலிருந்து போரில் வெற்றியின் அடையாளமாகப் பறித்த] விருதுகள் ஜெய சின்னங்களாகிய வைகளினால் விளங்கி [அல்லது இரத்தினங்களா

னும் ஒளிவிடும் தங்கத்தாலும் விளங்கியதன்றிச் (செமிக்கப்பட்ட) செராபிகளின் விருது ஜெய சின்னங்கள் ஆகியவைகளால் விளங்கிக்] காற்றில் [அலை அலைவதுபோல] அலைந்து விண்வீழ் கொள்ளி போல பிரகாசித்தது. இப்போது கூறியவைகள் நிகழுங் காலமெல்லாம் [நாதமுடைய] உலோகத்தாற் செய்யப்பட்ட காளம் ஊதப் பட்டுப் போர்முழக்கஞ் செய்து கொண்டிருந்தது [அவர்கள் சோர்வுற்றிருந்ததனால் அது நீங்கி மிகுந்த உற்சாகம் அடையும்படி கருதியே சாத்தான், அதற்கேற்ற வாத்தியமாகிய காளத்தை முழக்கும் படி கற்பித்தான். அது முழக்கப்பட்டுக் கொண்டிருக்கக், கொடி உயர்த்தப்பட்ட உடனே [அதனால்,—காளமுழக்கத்தால்—பெருக்கி கொண்டிருந்த உற்சாகம் நிறைந்து கதித்து மேலிட்டு] அந்தப்பெருஞ் சேனை முழுதும் ஆரவாரித்தது. அந்த ஆரவாரம் நரகத்தின் கவிந்த முகட்டைக் கிழித்து அதற்கப்பாலுள்ள [மூலப்பிரகிருதியாகிய] சமட்டி (Chaos) மூல இருள் (Old Night) ஆகிய இருவரும் ஆளும் இராச்சியத்தையும் திடுக்கிடச் செய்தது.

## படை அணிவகுத்து நிற்றல்.

அதன் பின் ஒளிவீசி அலைபோலலையும் பல்லாயிர பதாகைகள் ஒரு கணத்திலே உயர்த்தப்பட்டு அங்குள்ள இருளினூடு ஆகாயத்தில் விளங்கலாயின. அவைகளோடு கூடவே, ஒரு பெரிய நெருங்கிய ஈட்டிக்காடு தோன்றியது. அன்றியும் கூட்டமாய்த் திரண்ட தலைச் சிராக்களும், [ஒன்றன்பின் ஒன்றாகவும் பக்கவரிசையாகவும்] மிகவும் அடர்ச்சியாகவும் தொடர்ச்சியாகவும் வரிசைப்படுத்தப்பட்ட அளவற்ற கேடகங்களும் தோன்றின. உடனே அச்சேனை ஒழுங்காய் நெருங்கிய சதுரவ்யூகமாகி [முன் சோர்வு நீங்க முழக்கிய காள முழக்கத்தால் உண்டாகிய உற்சாகம் அடங்கவே உறுதிப்பாட்டுடனே முறையாகச் செல்லும்படி செய்வதற்கேற்ற] தோரியரது சங்கீத முறைப்படி ஊதப்பட்ட இனிய இசைக்குழல்கள் முழக்கும் [கவுரவமும் கம்பீரமுமான] கானத்துக் கிசைவாக அடிபெயர்த்து நடந்தது. அந்தக்காளம் எப்படிப் பட்டதென்றால், பூர்வீக வீரர்கள் யுத்தத்துக்கு ஆயத்தப்படுஞ்சமயத்தில் அவர்கள் வீரகுணத்தை உச்சஸ்தானம் அடையும்படி உயர்த்தி, மூர்க்காவேசத்தை விளைக்காமல், மரணபயத்தினாலும் புறங்காட்டி யோடவாவது இழிவாய்ப் பின் வாங்கவாவது செய்யாதபடி யுள்ள உறுதியும் [எண்ணித்துணியும்] துணிவும் உடைய பராக்கிரமத்தை உண்டாக்குவதாயிருந்தது.

அல்லாமலும் மனத்தில் உண்டாகிய குழப்பங்களை தன் கெம்பீர மான சுரத்தினால் மெள்ளத் தடைப்படுத்திச் சாந்தமாக்கவும், மனி தர்கள் மனங்களிலாயினும் தேவர்கள் மனங்களிலாயினும் உள்ள கவலை சந்தேகம் பயம் துக்கம் வேதனை ஆகிய இவைகளைத் துரத் தவும் சத்தியுடையதாயுமிருந்தது. இவ்வாறு அந்தச் சேனாவீரர் ஒருமித்து நெருங்கிக் கூடிய ஒற்றுமையினாலாகிய வலிமையைக் காட்டி, சலனமற்ற குறித்த எண்ணமுடையவர்களாகி, எரிநிலத் தின் மீது நடக்கும் வேதனையை உணராதபடி செய்யும் இனிமை யான குழலோசைக்குச் சரியாக அடி பெயர்த்து வைத்து, மௌ னத்தோடு நடந்து வந்தவர்கள், சாத்தனுடைய சமீபக்காட்சியில் அணுகின உடனே தங்கி நின்றார்கள். பகைவர் அஞ்சும்படி நீண்டு மின்னுகின்ற ஆயுதங்கள் நிறைந்து, [நீட்டிய ஈட்டிகளால் முள் ளம்பன்றி போலச்] சிலிர்த்த தங்கள் முன்னணியானது, [படைத் தலைவனது கட்டளைப்படி] ஒழுங்காக வைக்கப்பட்ட ஈட்டிகேட கங்களுடன் ஆயத்தமாக நிற்கும் பூர்வீக சேனாவீரர்போல நிற்க, தங்கள் பெருந்தலைவன் என்ன கட்டளையிடப்போகிறானென் றெ திர்பார்த்து நின்றார்கள். அவன் [படைகளின் பல அங்கங்களையும் பார்த்து] வழக்கப்பட்ட கண்களால் ஆயுதபாணிகளாய் நின்ற அவர்கள் அணிகளை ஊடுருவநோக்கி, அவர்கள் அணிவகுத்து நிற் கும் முறையையும் தேவர்கள்போல் அவர்களுக்குள்ள தோற்றத் தையும் வளர்ச்சியையும் அறியும்படி அச்சேனை முழுவதையும் பா ர்த்துக் கடைசியாக அவர்கள் தொகையை அளவிடுகின்றான். இப் போது, அவனுடையமனம் தருக்கடைந்து பூரித்துத் தனக்குள்ள வலியைச் சிந்தித்து [இணங்குந்தன்மை நீங்கிக்] கடினப்பட்டுத் தன்னுள்ளே மகிழ்ச்சி யடைகின்றது.

## படையின் பெருமை.

மனிதன் சிருட்டிக்கப்பட்ட காலந் தொடங்கி இதுவரையும் [இந்தப் பூமியின் கண்ணே] திரட்டப்பட்டுக் கூடிய எந்தச்சேனை யும், இந்தத் தேவசேனையின் பக்கத்தில் [இருப்பதாக] வைத்துப் பார்த்தால், அந்தச் சேனை கொக்குப்படையை யெதிர்த்து யுத்தஞ் செய் [தவர்களென்று சொல்லப்பட்ட மிகக்குறுகிய] குள்ளர்சேனை யிலும் பெரியதென்று மதிக்கப்பெறாது. [ஒரு சாதாரண சேனை முன் இக்குள்ளர்படை தோன்றும் தோற்றத்திற்கு, இந்தத் தேவ சேனைமுன் சிட்டிகாலமுதல் இதுவரையும் கூடிய எந்தப்பெரிய

சேனையும் தோன்றும் தோற்றம் அதிக மதிப்புடையதாகா தென்ற படி] அக்குள்ளராவார், இரண்டடி உயரமுடையவர்களாய், இமய மலைக் கப்பால் உள்ள பிரதேசத்தில் முட்டைத் தோடுகளால் அமைக்கப்பட்ட சிறு வீடுகளிலாயினும் (எலிவளைபோன்ற) தறைக் கீழுள்ள வளைகளிலாயினும் குடியிருந்து அறுப்புக்காலத்தில் கோடரிகளோடு வெளியேறி மரங்களை வெட்டுவதுபோல விளைந்த பயிர்ச்செடிகளை, அவற்றின் கதிர்க்குலைகளைக் கைப்பற்று நிமித்தம், வெட்டுவோரென்றும், தங்கள் சரீரபரிமாணத்துக்குத் தக்க பரிமாண முடைய மிருக வாகனங்கள் மேலேறிச் சென்று விளைந்த தானியத்தைக் கொள்ளை கொள்ள வருடந்தோறும் அறுப்புக்காலத்தில் வந்த கொக்குப்படைகளை யெதிர்த்து யுத்தஞ்செய்தோ ரென்றும், சொல்லப்பட்டவரே] [இத்தலிக்கருகான] பிலகராவில் (Phlegra) [ஒரு மைதானத்தில் யூப்பித்தர் (Jupiter) முதலிய தேவர்களை யெதிர்த்துப்] போர்செய்த இராக்கதர் சேனையுடனே, இருபக்கத்திலும் தேவர்கள் சேர்ந்து [அவ்வத் தேவர்கள் சார்ந்து நின்ற பக்கத்தாருக்குச் சகாயமாகச் சண்டைபிடித்து] உதவிசெய்த தீப துரோச யுத்தங்களில் (Wars against Thebes and Ilium) போர் புரிந்தவர்களின் கூட்டமும், பிரித்தானிய (British) ஆர்மோரிய (Armoric) பிரபுத்துவ வீரர்கள் [தன்னை நடுநாயகமாகக் கொண்டு] குழப்பெற்று விளங்கியவரும் யூதர் (Uther) குமாரனும் ஆன ஆர்தர் (Arthur) அரசனைப்பற்றிய கட்டுக்கதைகளிலும் கற்பித சரிதங்களிலும் சொல்லப்பட்ட பிரபலமான சேனைகளும், அவ்வரசன் காலந்தொடங்கி ஆப்பிரமாந்து (Asparamont) மாந்தல்பான் (Montalban) தாமஸ்கு (Damasco) மாராக்கோ (Morocco) திரபிசாந்து (Trebizond) என்ற நகரங்களில் குதிரையேறிச் செய்யும் சிலம்பப் போரில் கலந்து ஆண்மைகாட்டிய கிறிஸ்திய மகமதியர்களின் கூட்டம் யாவையும், சீரசார்லிமான் (Charlemagne) அரசன் தன் பிரபு வீரர்களனைவரோடும் யுத்தஞ்செய்து மடிந்த] வில்பானியதேசத்துக் கரையடுத்த நகரங்களுள் ஒன்றாகிய பொந்தராபியா (Fontarabia) புறத்திற்கு [அவ்வாறு மடிய இருந்த அவர்களோடு யுத்தஞ் செய்யும்படி] ஆபிரிக்காக் கரையிடத்ததாகிய பிசட்டா (Biserta) நகரத்திலிருந்து அனுப்பப்பட்டு வந்து போர்செய்த மாமதிய சேனையும் ஆகிய [பலகாலங்களிலும் பலதேசங்களிலும் கூடிய சேனைகளையும் வீரர் சங்கங்களையும் ஒன்றாகச் சேர்த்தாலும் அப்படிச் சேர்த்தகூட்டம் இந்தச் சேனையுடன் உவமித்தால் மிகச்சிறி

றாய் விடும். இவ்வாறாக, மனுஷ சௌரியம் எவ்வளவும் ஒப்பாகாத பெரும் பராக்கிரமம் உடையவர்களாயிருந்தும் அச்சேனைவீரர் தங்கள் தலைவனுக்குப் பயந்து அடக்கத்தோடு தாழ்மையாக நின்றார்கள்.

## சாத்தான் அவன் பரிவாரத் தேவர்கள் ஆகிய இவர்களுடைய வடிவ வருணனை.

சாத்தான் வடிவத்திலும் சாயலிலும் மற்றவர்களினும் மிகக் கெம்பீரமான உயர்ச்சியுடையவனாய் ஒரு கோபுரம்போல விளங்கி நின்றான். அவன், பழைய ஒளியை முழுதும் இழக்காதவனாய், முன், கண் கூசும்படி சொலித்துக் கொண்டிருந்த சோதியின் மிகுதி [கூசாது பார்க்கத்தக்க அளவு] குறைந்தவனும் ஆபத்தடைந்தவனும் ஆன ஒரு தேவர்கோனிலும் குறைவில்லாதவனாக விளங்கினான். அடிவானில் மூடுபனிமூட [அப்பனியால்] பிரகாசம் மலினமடைந்து அப்பனியூடு தோன்றும் உதயகாலத்துச் சூரியன்போலத் தோன்றினான். அன்றியும், சந்திரனுக்குப் பின்னே நின்று, [பூரண கிரகண மடையும்போது காலமல்லாத காலத்து மாலை நேரம் வந்ததுபோலப் பொழுது மயக்கமுண்டாக, பறவைகள் கலங்கிக் கூடுநோடி யடையவும்மிருகங்கள் வெருண்டுதங்கள்வழக்கமான இராத்தங்குமிடம் நாடிச் செல்லவும்]மழுக்கமடைந்து, அபசகுனமான கெடுகுறிகாட்டா நின்ற ஒளியைப் பூமியிலே [அக்கிரகணம் தோன்றாத பாதிப் பாகம்போகத் தோன்றுகின்ற] பாதிப் பாகத்திலே வாழும் மனிதர்கள்மேலே வீசி, அரசர்கள் தங்கள் இராச்சியத்தில் [அக்கிரகணத்தினால்] கலகம் விளையுமென்று கலங்கிக் கவலை கூரும்படி செய்கின்ற கிரகண காலத்துச் சூரியன் போலவும் தோன்றினான். அத்தேவதூத சிரேட்டன் இவ்வாறு மழுக்கமடைந்தும் மற்றெல்லாத் தூதரிலும் சிறந்த பிரகாசமுடையவனா யிருந்தான். ஆயினும் அவன் முகத்தில் இடி உற்ற ஆழ்ந்தழும்புகளிருந்தன. [தன் தோழருக்கு நேர்ந்த விபத்தை நினைந்து] வாட்டமுற்ற கன்னத்தில் கவலை குடியிருந்தது. ஆனால் அஞ்சாத ஆண்மையும் பழிவாங்கத் தருணம் பார்த்துக்கொண்டிருக்கும் பதற்றமற்ற அகங்காரமும் புருவப் பிரதேசத்தில் விளங்கிக்கொண்டிருந்தன. கண்கள் கொடூரமுடையவைகளாகத் தோன்றின; ஆயினும், அவன் [கூடக் கலகம் செய்த] தோழரோ என்னின் அன்று, [அவன் செய்த கலகத்தைப்] பின்பற்றி யொழுகிய பரிவாரத்தாரே என்று சொல்லுதற்குரியரும் இப்போதிருக்கும் நிலைமைக்கு மிகவும் வித்தியாசமான ஆனந்த வாழ்வில் முன் ஒரு காலம் வாழ்ந்தோரும்

எண்ணத்தில் பலகோடியரும் ஆகிய தேவர்கள் அவனுடைய தீவினையின் பொருட்டுப் பரமண்டலத்தை இழக்கும்படி தண்டிக்கப்பட்டும் அவன் செய்த கலகத்திற்காக நித்தியானந்த வாழ்க்கையைவிட்டு எந்நாளும் நீங்கும்படி துரத்தப்பட்டும் அவனுக்கு உண்மை நீங்காதவர்களாய்ப், பொலிவழிந்து நிறமாறியுள்ள நிலையினும், நிற்பதையும் இப்போது அவர்களுக்கு வைத்திருக்கப்பட்ட பங்கு துன்பமேயாக அத்துன்பத்தினின்றும் என்றும் நீங்காதபடி சிட்சிக்கப்பட்டிருப்பதையும் பார்த்து அக்கண்கள் [அவர்களுக்கு இந்தக்கதி தன் கலகத்தினால் நேர்ந்ததென்றும் தான் கலகஞ் செய்யாதிருந்தால் நேர்ந்திராதென்றும் அவன் முன்செய்த தற்கிரங்கித் தபிக்கும்] பச்சாத்தாபமும் [அவர்களுடைய துன்பநிலையைக்கண்டு அவன் தானும் துன்பமுற்றுத் தபிக்கும்] அனுதாபமும் தோன்றும்படி விளங்கின. அவர்கள் ஒளி மழுங்கி நின்ற நிலைமையில் எவ்வாறிருந்தார்களென்றால், [அவர்கள் உயர்ந்த வளர்ச்சி யுடையாராயிருப்பதுபோல] காடுகளிலாயினும் மலைகளிலாயினும் உன்னதமாக வளர்ந்தவைகளாய் [அவர்கள் மின்னினாற் கருக்குண்டு தேசழிந்தும் பூரண நாசம் அடையாததுபோல] மின்னலினால் [பசிய இலை முதலியவைகளை இழந்து] சேதமடைந்து மொட்டையாகியும முற்றும் அழிந்துபோகாத உச்சியை உடையவைகளாய் [அவர்கள் நின்ற, தீயினாற் கருக்குண்ட, பாழ்ந்தறைபோல, மின்னலினால் புல்லெல்லாந் தீந்துபோன] பாழ்வெளியில் நிற்கின்ற மரங்களை யொத்திருந்தார்கள். சாத்தான் இப்போது பேச முயன்றான். முயலவே, அவர்கள் [நேராகநின்ற] படை அணியின் இருபக்கமும் [வில்வளைவதுபோல] வளைந்து பாதிவிருத்தவடிவமாகி அவனையும் [முன்னமே அவர்கள் தூரநிற்க அவனிடம் வந்து சேர்ந்து நின்ற] அவர்கள் தலைவர்களையும் சூழ்ந்தார்கள். சூழ்ந்தவர்கள், அவன் சொல்வதைக் கேட்கும் அவாவினால் பேசாது மௌனமாக நின்றார்கள். அவன் மூன்று தடவை பேச முயன்றான். மூன்று தடவையும் [தன் கலகத்தால் நித்தியானந்தப் பெருவாழ்வை நீங்கி அதற்கு நேரெதிரான நிலைமை மேவி அந்நிலையிலும் தனக்கு உண்மை குறையாதவராய் நிற்கும் பலகோடி தேவர்களின் துக்ககரமான துர்த்தசையை நோக்கியுண்டாகும்] கண்ணீர் [மனிதர் கண்ணீர்போ லன்றி] தேவர்களுடைய தகுதிக்குப் பொருத்த முடையதாய், [அழுவது தக்கதன்றென்று] வெட்கத்தினால் அவன் தடுத்தும் அத்தடைக்குள் அடங்காமல் [துக்கமேலீட்டினால் உண்டாகிய பெருமூச்சோடு சேர்ந்து அவன் பேசவொட்டாமல் வா

க்குத்தடை செய்துகொண்டு] தெறித்து வீழ்ந்தது. பெருமூச் செறிதலினால் இடையிடையே தடைப்பட்ட வார்த்தைகள் கடைசியாக ஒரு வாறு வெளிப்படலாயின.

### சாத்தான், கடவுள் வலியை அறியாததினால் தோல்வி நேர்ந்ததென்றும் இனி வஞ்சனை செய்யல் வேண்டுமென்றும் கருத்து வெளிப்படப் பேசுதல்.

ஓ! என்றும் அழியாத பல்லாயிர ஆவியீரே! எல்லாம் வல்லானொருவனொழிய யாரும் நிகராகாத வலியீரே! நீங்கள் அன்று செய்த போரின் முடிவு, இந்த [த்தீக்கடலும் தீத்தரையுமான] இடத்தினாலும், சொல்லுதற் கருவருப்பான இந்தப் பயங்கரமான மாறுபட்டநிலைமையினாலும் விளங்குகிறபடி துக்கப்படத்தக்கதாயிருந்தாலும், அந்தப்போர் மகிமையற்றதன்று. ஆனால், [இப்போது என்முன் நிற்பதுபோல] இப்படி ஒருமித்துத் திரண்டு இவ்வளவு உறுதியாக நிற்கும் தேவசேனை எப்போதாயினும் தோல்வியடைதல் கூடுமென்று, முன்னைய தற்காலத்திய அனுபவங்களெல்லாவற்றையும் துணையாகக்கொண்டு ஆராய்ந்து எந்த மனோசத்திமான் தான் முன்னறிந்திருக்கக்கூடும். நாம் அபஜயமடைந்துள்ளோமன்றோ? ஆயினும் இவ்வேளையிலும், தாங்கள் [நரகமாகிய புறத்தேசத்துக் கோடும்படி] துரத்தப்பட்டதனால் வானநாடு*சூனியமாகச் செய்த திரளான இந்த வலியசேனைகளெல்லாம் [மேலிருந்து கீழ்விழுதல் மனிதர்க்குச் சுபாவமாயிருப்பதுபோலத் தேவர்க்குச் சுபாவமான கீழிருந்து மேலெழுதலாகிய] தங்கள் சுயசத்தியால் உயர்த்தப்பட்டுத் திரும்ப மேல் நோக்கிச் சென்று [பரமண்டலமாகிய] தங்கள் சுயஸ்தானத்தை மீட்டுக்கொள்ள மாட்டார்களென்று [யான் முன்னே கூறியபடி அபஜய மடைந்துள்ள இவ்வேளையிலும்] யாராயினும் நம்புதல் கூடுமோ ? பொது நன்மைக்கு விரோதமாக [என் சுயநன்மை கருதி] யான் கொண்டிருந்த எந்த நோக்கத்தினாலாயினும் எந்த அபாயத்துக்காவது நான் அஞ்சி விலகியதனாலாயினும் நமது காரியம் கெட

---

* தன் கலகத்தில் சேர்ந்தவர்கள் பரமண்டலத்துச் சேனையில் மூன்றிலொரு பகுதியே யென்று சாத்தானே இந்நூல் இரண்டாவது காண்டத்தில் கூறுகின்றான். அவ்வாறிருக்க இங்கு வானநாடு சூனியமாகச்செய்த என்றது பிரசங்கசாதுரியத்தினால் தன் சேனைப் பெருமையைப் பாராட்டக் கருதி என்றறிக.

வில்லை என்னும் உண்மைக்குச் சகல வானலோக சைனியமும் சாட்சியாகும். வானுலகத்தில் தனிக்கோல் செலுத்தும் அவன் [ஆதிகாலத்தில் செய்திருந்த மகத்துவமான செயல்களினால் உண்டாகிய பூர்வகியாதியினாலோ, பிரஜைகளின் சம்மதத்தினாலோ, முதலில்நியாயமாகவோ நியாயமின்றியோ கைப்பற்றிய இராசரிகத்தை நெடுங்காலமாக ஆண்டுவந்த] வழக்கத்தினாலோ ஆதரிக்கப்பெற்ற [இராச்சியானுபவமுடைய] வனாய், [இந்தப் பூர்வகியாதி முதலியவைகளையன்றி வேறு ஆதாரமொன்றும் இல்லாதவன்போன்று] கொஞ்சமுங் கவலையில்லாதவனாகத் தோன்றிச் சிங்காதனத்திலே வீற்றிருந்து, தனக்குள்ள சகலராஜ சம்ப்ரமமும் விளங்கும்படி செய்தும் தன் பலத்தை மறைத்து வைத்திருந்தான். அதனால் [அவன் பலத்தை அறியாமல்] நாம் அவனை வெல்ல முயன்று [நம்முடைய பதவியை யிழந்து] வீழ்ந்தோம். இனிமேல் அவன் வலியை அறிவோம்; நம்முடையபலமும் நமக்குத்தெரியும்; ஆதலால் நாமாகப்போர் தொடங்கமாட்டோம்; அவனால் போர் மூட்டப்பட்டால் அதற் கஞ்சிப்பின் வாங்கவுமாட்டோம். [கேடடைந்துள்ள தேகசத்தியினும் சிறந்தமனோசத்தியாகிய] நமது சிரேஷ்டாம்ஸம் [சேஷமாக] மிகுந்திருக்கிறது; அதனால் நாம்முன் தேகபலத்தினால் சாதிக்கமுடியாமற் போனகாரியத்தை இரகசியமாகவும் தந்திரமாகவும் முயற்சிசெய்து சூதினாலும் வஞ்சனையினாலும் சாதித்தல்கூடும். அப்படிச்செய்வதனால், [தோல்வி யடைந்து] முன்பு நாம்பட்டுத் தேர்ந்ததுபோல, அவனும் [தன்] பகையை [த்தேக] பலத்தால்மாத்திரம் வென்றவன் பாதிப்பகையே வென்றவன் என்னும் அநுபவ அறிவை நம்மிடத்திருந்து தெரிந்துகொள்வான்.

## ஒரு புதிய உலகத்தைப்பற்றிய வதந்தி ஒன்றுண்டு அதைப்பற்றி நாம்கலந்து பேசவேண்டும்.

பரவெளியில் புது உலகங்கள் உண்டாகலாம்: அவ்வகைப் புது உலக மொன்றை அவன் விரைவிற்படைத்து, அதில் அவனுடைய விசேஷ பிரியத்துக்கு இலக்காராய் [அப்படி இலக்கானதனால்] வானமைந்தரோடு ஒப்பாக அவன்தயை பெற்று வாழ்வோராய்த் தங்கும்படி [மனிதராகிய] ஒருஜாதியாரை [உண்டாக்கி] க்குடியேற்றக் கருதி யிருக்கிறானென்று பரமண்டலத்தில் ஒருபெரும் பிரஸ்தாபம் நிகழ்ந்தது: நம்முடைய முதற் பிரயாணமுயற்சி [அந்தப்புது உலகத்தின் விஷயமாக வேறு விசேடமானது யாதொன்றும்

செய்யமுடியாதாயினும்] அவ்விடம் எத்தன்மையதென்று அதனுள் நுழைந்து பார்க்க மாத்திரமாவது செய்யப்படும். அவ்விடமாவது வேறெவ்விடமாவது செல்வோம்; ஏனெனில் [எவ்விடமாயினும் செல்வோம்; என்கிறேன்] என்னில், இந்நரகக்குழிபரலோக ஆவிகளைச் சிறைவைத்திருக்குஞ் சத்தி ஒருக்காலும் உடையதன்று, இந்தப்பாதாள அந்தகாரம் அவர்களை நெடுங்காலம் மூடிவைத்திருத்தலும்கூடாமையே ஆனால் இந்த எண்ணங்களை [நம்முன் தலைவர்களாகியவர்கள்] எல்லாரும் சபைகூடி ஆலோசித்துத் தேர்ச்சிபெறச் செய்யவேண்டும்: நாம் சமாதானத்தைப் பற்றிய சகலநம்பிக்கையும் கைவிடவேண்டியதே, ஏனெனில் நம்முள்யார் கீழ்ப்படிந்திருக்கச் சம்மதிப்பார்கள்! ஆகையால் பகிரங்க யுத்தமாயினும் ஆகுக, அந்தரங்க யுத்தமாயினும் ஆகுக, யுத்தமே துணியக்கடவது.

சாத்தான் இவ்வாறு பேசினன். அவன்பேசியதை ஒப்புக்கொண்டு உறுதிப்படுத்தியதற்கடையாளமாக அநேககோடி பளபளப்பான வாள்கள் மிகவல்லவராகிய செருபியரின் தொடை [களின் அருகு தூங்கவிட்டிருந்த உறை] களினின்றும் உருவப்பட்டு [விசையாக உயர்த்தப்பட்டு]மேலேகுதித்தெழும்பின. அதனால் திடீரென்றுண்டாகிய பிரகாசம் நரகின்சுற்றிலும் நெடுந்தூரம் வியாபித்து விளக்கஞ்செய்தது. அவர்கள் மகோன்னத [னாகியதேவ] னைக்குறித்து [மனங்கொதித்து]க்கடுங்கோபங் கொண்டார்கள். கையில்சிக்கென்று இறுகப்பிடித்த ஆயுதங்களைத் தொனிக்கும் கேடகங்கள் மேற்றூக்கி யுத்த ஆரவாரம்செய்து [கடவுளைக் குறித்து அவர் இருக்குந்திசை ஆகிய] வான் முகட்டை நோக்கி ஆர்ப்பரித்துப் போருக்கழைத்தார்கள்.

### ஆலோசனைச் சபாமண்டபம் கட்ட மம்மோன் உலோகங்களைக்கண்டு பிடித்தல்.

[நரகத்தில் ஜலம்போல நிறைந்து அலைவீசும் நெருப்புக்கடலும் அதைச்சூழ்ந்துள்ள கட்டித் தீயினாலாகிய நிலமும் முன்னமே சொல்லப்பட்டிருந்தன. இப்போது, உச்சியில் அக்கினி உருகிய உலோகமுதலியவற்றைக் கக்கும் வாயை உடையதாய்அவ்வாறாகிய உலோகமுதலியவற்றின் பிரவாகத்தினால் ஆகியகிட்டத்தினால் மூடப்பட்டுப் பளபளப்பாயிருக்கும் சுற்றுப்பக்கங்களை யுடையதாய் உள்ள ஒரு அக்கினிமலை, அந்தநிலத்தில் இருப்பதாகச் சொல்லப்படுகின்றது.] அவர்களுக்குச் சமீபத்தில் ஒரு அக்கினிமலையிருந்தது. அதன்பயங்கர

ற்று நிரப்புந்துருத்தி உறுப்பும், அக்காற்று நிரம்பும் காற்றறை என்னும் உறுப்பும், அக்காற்றறையின்மேல் (அதிலிருந்து காற்றைப் பெற்று) தொனி விருத்தி செய்யும் உறுப்பும், அத்தொனி விருத்தி உறுப்பினின்று புகுந்தகாற்றினுல் தொனிக்கின்ற பலவகைப்பட்ட குழல்களும் உள்ள, கிறிஸ்தவ தேவாலயங்களில் உபயோகப்படுகின்ற] சுரமண்டலம் (Organ) என்னும் வாத்தியத்தில் [துருத்தி] ஒருதடவை ஊதுதலினுலாகி [த்தன்னிடம்நிரம்பி] யகாற்றைத் தொனிவிருத்திஉறுப்பானது பலவரிசைகளாய்உள்ள இசைக்குழல்களில் பரவச்செய்வது போல, மேற்கூறிய [தொனிவிருத்தி உறுப்பையொத்த] குழிகளி[ன்கூட்டத்தி] னின்றும் [காற்றுப் போன்ற] உருகிய உலோகத்தை ஆச்சரியகர மாகவும் தந்திரமாகவும் [பலவகைப்பட்ட குழல்களையொத்த] அந்த அச்சுக்களுட் செலுத்தி அவற்றினுள்ளே குழிவாயுள்ள ஒவ்வொருபாகமும் நிறையச் செய்தது.

### சருவைபராச மாளிகைவருணனை.

உடனே ஒருபிரமாண்டமான மாளிகை ஒரு [கிரேக்க] கோவில் மாதிரியாகக் கட்டப்பட்டு, இனியவாத்திய கோஷமும் பாடகரது தீங்குர லோலசையும், நிகழ, மண்ணினின்று ஆவி கிளம்புதல்போல [மற்றவேலைத் தலங்களில் இயல்பாகஉள்ள இரைச்சல் முதலியவையின்றி] விரைவாய்க் கிளம்பியது. அதில் [சூழநிறுத்தப் பட்டசுவரில் பாதி அகத்தும் பாதிபுறத்துமாகத் தோன்றும்] சுவரகத் தூண்களும், தங்கக்குறுக்கு விட்டம் மேலேவைத்துள்ள, தோரிய (Dorian) சிற்பமுறைப்படி வகுக்கப்பட்ட தூண்களும் இருந்தன. அன்றியும் அம்மாளிகையில் கபோதகமாவது சித்திரங்கள் செதுக்கப்பட்ட போதிகையாவது வைக்காதிருக்கவு மில்லை. முகடு சித்திரித்த தங்கத்தினுற் செய்திருந்து. அசிரியா (Assyria) எகிப்து (Egyp) என்னும் இரண்டு நாட்டாரும் செல்வத்திலும சம்பத்திலும் ஒருவருக் கொருவர் பிந்தாது எதிர்பாராட்டிக் கொண்டிருந்த காலத்தில், [முறையே அவர்கள் இராசதானிகளாகிய] பாபிலோன் (Babylon) கெயிரோ (Cairo) வென்ற நகரங்கள் முன்பின் என்று மடையாத உயர்ந்தநிலைமையடைந்திருந்த போது [வரிசையாக அவர்கள் தெய்வங்களாகிய] பிலசு (Belus) செராபிசு (Serapis) என்ற தேவர்கள், கோவில் கொள்ளும்படி நிருமிக்கப்பட்ட கட்டடங்களாவது, அவரவர்களுடைய அரசர்கள் வாசம்செய்யும்படி அமைத்த கட்டடங்களாவது இக்கட்டடத்தை யொத்த சிறப்புடைய வைகளல்ல. [மண்ணினின்றும்]

எழுந்து வளர்ந்து கொண்டிருந்த மாளிகை பூரண உயர்ச்சியடைதலும் ஸ்திரமாய் அசைவின்றி நின்றது. உடனே அதன் மடக்குக் கபாடங்கள் திறக்கப்பட்டு, சமமாகவும் மிருதுவாகவும் சமைத்த தளத்தையுடைய விசாலமான உட்கட்டுக்கள் தோன்றின; [அம்மாளிகையின்] வளைவான முகட்டினின்றும் பலவரிசையாக மந்திர வல்லபத்தினால் தூக்கப்பட்டு [ஒருவகைக்] கீற்கட்டியும் [மண்ணுள் உண்டாகும் ஒருவகை] மண்ணெண்ணெயும் முறையே பெய்யப்பட்டுச் சுவாலிக்கும் அகல்களும் [எண்ணிலும் உயரத்திலும் பிரகாசத்திலும்] நட்சத்திரங்கள் போன்றதீபங்களும், ஆகாயத்திலிருந்து பிரகாசிப்பதுபோல [அந்த உயர்ந்து வளைந்த முகட்டினின்றும்] பிரகாசித்தன. அங்குநின்ற கூட்டமானவர்களெல்லாரும் ஆச்சரிய பரவசராய்ப் படபடப்போடு அம்மாளிகையுள்ளே புகுந்து தொழிலை மெச்சுவார் சிலரும் தொழிலாளியை மெச்சுவார் சிலரும் ஆயினார். எவ்வெவ்வரசரினுமேம்பட்ட பரமவேந்த [னாகியதேவ]னால் ராஜாதிகார நிலையில் உயர்த்தி வைக்கப்பட்டுத், தத்தம் ஆதிக்கத்தில் சிலசில தேவதூத வகுப்பினரை வைத்தாளும் ஆட்சி கொடுக்கப்பெற்ற செங்கோல் தாங்கிய தேவதூதர்கள், அரசர்போற் கொலுவீற்றிருந்து வாழும்படி பரமண்டலத்தில் சமைக்கப்பட்டுள்ள, கோபுரங்களையுடைய, அநேக உயர்ந்த மாளிகைகளிலும் இம்மம்மோன் (Mammon) கைத்தொழில் [விசித்திரம்] விளங்கியது. புராதன கிரீசுதேசத்தில் [—பூர்வீக கிரேக்கருள்ளே—] இவன் பெயர் விளங்கினதன்றி [அக்கிரேக்கர்களால்] வழிபடவும் பெற்றான். [இத்தலியாகிய அசோனிய (Ausonian) நாட்டார் [இவனைத்தங்களுடைய அக்கினிக் கடவுளாகக்கொண்டு] இவனுக்கு மல்சிபர் (Mulciber) என்று பெயரிட்டார்கள். இவன் வானினின்றும் வீழ்ந்ததை, [கிரேக்கருக்கும் இத்தலி நாட்டாராகிய ரோமருக்கும் முதற்றெய்வமாகிய] யூப்பித்தர் (Jupiter) கோபித்து [கிரேக்க தேவர்கள் வாழ்ந்த சுவர்க்கத்தின்] பளிங்குக்கொத்தளச் சுவர் [மேற்படாது] தாண்டிக்குப்புறவிழும்படி எறிந்ததனால் இவன் உதயகாலம் தொடங்கி உச்சிநேரமளவும் மத்தியானந்தொட்டுப் பனி வீழும் மாலை வரையுமாக ஒரு கோடைநாள் முழுதும் விழாநின்று சூரியாத்தமனசமயத்தில் எரிநட்சத்திரம்போல விண்ணுச்சியிலிருந்து ஈஜிய (Aegaean) சமுத்திரத்தில் லெம்நாசு (Lemnos) த்தீவில் வீழ்ந்தானென்று அவர்கள் ஒரு கதையாகக் கூறுவதுண்டு. அவர்கள் உண்மையறியாது பிசகியே அவ்வாறு கூறினர்; ஏனெனில், [இவன்

வீழ்ந்ததாக அவர்கள் கூறும் காலத்துக்கு முன்சென்ற] நெடுங்கால த்துக்கு முன்பு [இவ்வுலகமே சிருட்டிக்கப்படுமுன்] இவன், கலகஞ் செய்த மற்றத் தேவதூதர் கூட்டத்தோடு வீழ்ந்தவன். இவன்பர மண்டலத்தில் உன்னதமான கோபுரங்களைக் கட்டியது இப்போது எவ்விதத்தினும் பிரயோசனமாக வில்லை. அன்றியும் இவன் [சிற்ப சாமர்த்தியத்தால் நிருமிக்கக்கூடிய] சகல யந்திரங்களின் உதவியினு லும் கீழே விழாமல் தப்பிக்கொள்ளச் சத்தியற்றவனாய்த் தன்னுடை ய முயற்சியுடைய கூட்டத்துடன் நரகத்திலும் கட்டடவேலை செய் யும்படி [பரமண்டலத்தினின்றும்] தலைகீழாகத் தள்ளப்பட்டான்.

## ஆலோசனைச்சபை கூட்டப்படுவதைக் குறித்து வள்ளுவர் எக்காளம் ஊதிப் பிரசித்தஞ்செய்தல்

வள்ளுவத்தொழிலாளராகிய தூதர்கள் தங்கள் அரசனாகிய சாத் தானது ஆக்கினையின்படி சேனையின் பல பகுதிகளிடமும் விரைந்து சென்று மதிப்பை உண்டாக்கும் ஆடம்பரத்தோடு [யாவரும் அறியும் படி] சின்னம் ஊதிச் சாத்தானுக்கும் அவன் பிரபுக்களுக்கும் சிறந்த [உறைவிடமாய்] ராஜதானியாகிய சருவபைசாசமாளிகையிலே மகத் துவமான ஆலோசனைச்சங்கம் ஒன்று அப்போதே கூட்டப்படுமென்று பிரசித்தப்படுத்தி ஒவ்வொரு சேனைப் பகுதியிலும் அந்தஸ்தினாலாவது [அந்த அந்தச் சேனைப் பகுதியிலுள்ள மற்றவர்கள் தெரிந்தெடுத்து நியமித்த] நியமனத்தினாலாவது அந்தச்சங்கத்தில் வீற்றிருக்க அரு கராயுள்ளோர் யாவரும் வரல்வேண்டுமென்று தெரிவித்த உடனே அவர்கள் அனேக நூற்றுவர் ஆயிரவரான பரிசனங்கள் அணிஅணி யாய்ச் சூழவந்தார்கள். விசாலமான தலைவாயில்கள் தோரணவாயில் கள் முதலிய பிரவேசிக்கக் கூடிய சகல இடங்களும் நெருக்குண் டன. அவைகளுள்ளும் சங்கங் கூடும் இடம் பரந்த சபாமண்டபமா னது, [ஐரோப்பிய கிறிஸ்து வீரர்களும் மகமதிய வீரர்களும் சமாதா னமாகச் சந்தித்து சிலம்பப் போர்செய்து வீரம் பாராட்டிய முன்னு ளில்] அஞ்சாத கிறிஸ்தவ வீரர்கள் ஆயுதந்தரித்துக் குதிரை மீதேறி ச்சாரிவந்து [செயித்தார் இன்னாரென்று தீர்மானிக்கும்படி] அக்கி ராசனத்திலிருக்கும் மகமதிய அரசன் எதிரிலேயே அந்த [அரசன் ஜாதியாராகிய] மகமதிய வீரருட் சிறந்தோரை [கூரிய ஆயுதங்களை உபயோகிக்கும்] பிராணாபாயமான தொந்த யுத்தமாவது [மழுங்கலா யுதங்களை யுபயோகிக்கும் அபாயமில்லாத] ஈட்டிப்போராவது செ

ய்யும்படி அறைகூவும் *இடமாய் வேலிகோலிய களரிகள்போல,—விசாலமுள்ளதேயாயினும், அச்சபாமண்டபத்தின் தளத்திலும் தளத்தின்மேலுள்ள வெளியிலும் தூதர்கள் ஒருவர் சிறகு ஒருவர் சிறகொடு உரைசிச் சரசரவென இரைய மொய்த்ததனால் விசேடமாக நெருக்குற்றிருந்தது. சூரியன் இடபராசியில் சஞ்சரிக்கும் வசந்தகாலத்தில் தேனீக்கள் எண்ணிறந்த குஞ்சுக் கூட்டங்களைத் தங்கள் தேன்கூட்டைச் சுற்றியும் உலாவும்படி திரள் திரளாக வெளியே செல்லவிட அக்குஞ்சுகள் புதுப்பனி தங்கிய புல்லிலும் பூக்களிலும் மாறி மாறித் திரிந்தும், [பின்னிய வைக்கோலினாற் செய்யப்பட்டுப் பலகையின்மேல் வைத்திருக்கும் தேன் கூடாகிய] வைக்கோற் கோட்டையைச் சூழ்ந்துள்ள புறநகரென்று சொல்லத்தக்க நூதனமாகப் பரிமளதைலமூட்டிய [அந்தப்] பலகையின் [மூடப்படாத பாகத்தின்] மேல் உலாவியும் தங்கள் இராச்சிய காரியங்களைக் கூடிப்பேசுதல் போல் இரைகின்றவைகள் நேராக அந்த ஆகாயவாசிகளாகிய தூதர் கூட்டம் கூடி நெருக்குண்டது.

### தூதர்களுள் தலைவர்கள் தவிர மற்றவர்கள் உருவத்தைச் சுருக்கிக் கொள்ளல்.

அப்படி நெருக்கம் உண்டானபோது திடீரென ஒரு குறி காட்டப்பட்டவுடனே கணநேரத்திற்குமுன்தான் பூமிபுத்திரராகிய இராக்கதரினும் பெருந்தேகிகளா யிருந்த அத்தூதர்கள் ஆச்சரியமாக, குள்ளருள்ளும் மிகக் குறுகிய குள்ளரைக்காட்டிலும் சிற்றுருவமைந்து ஒடுக்கமான இடத்தில் எண்ணிறந்து நெருங்கிக் கூடிநின்றார்கள். இப்படிக் குறுகி நின்றவர்கள் இமையமலைக் கப்பால் வசிக்கும் குறட் சாதியாரை நிகர்த்தார்கள். அன்றியும் தலைக்குமேலாக உள்ள சந்திரன்காண்போனாகித் தன் விமானத்தைப் பூமியருகு செலுத்தாநிற்க, காட்டுக் கருகேயாவது ஊற்றுக்கருகேயாவது நடுச்சாமத்தில் களியாட்டுச் செய்பவைகளாய் இரவில் நெடுநேரஞ் சென்று வீட்டுக்குத் திரும்பும் நாட்டுப்புறத்தானது பார்வையிலாயினும் மனோபாவனையிலாயினும் அவன் பயத்தோடு பார்க்கப்படுபவைகளாயுள்ள கூளிகளையொத்தார்கள். அக்கூளிகள் தங்கள் கூத்திலும் களிப்பிலுமே மனங்கவிந்தவைகளாய் உல்லாசமான பாட்டுக்களால் அவனைப் பரவசப்படுத்த அவன்நெஞ்சு ஏககாலத்தில் [அவைகளைக்கண்

* அறை கூவல்—போருக் கழைத்தல்.

டும் அவைகள் பாட்டுக்களைக்கேட்டும் முறையே உண்டாகிய] அச்சத்தினாலும் மகிழ்ச்சியினாலும் துடியாகி நிற்கும். இவ்வாறு சரீரபாரமற்ற ஆவியர்கள் தங்கள் பிரமாண்டமான ஆகிருதிகளை மிகவுஞ் சிறியவைகளாகச் சுருக்கியதனால், இப்போதும் முன்போலவே எண்ணிறந்தவர்களாயிருந்தாலும் அந்த நரக சபாமண்டபத்தின் மத்தியில் நெருக்கமில்லாமல் நின்றார்கள். சொரூபிய கெரூபிய மகா பிரபுக்களாகிய தலைவர்களோ, அம்மண்டபத்தின் மிகவும் உட்புறமான இடத்திலே [மற்றச் சாமானிய தூதர்களுக்குத் தங்கள் உருவம் தோன்றவும் சத்தம் கேளாதிருக்கவும் தக்க] ஒதுக்கான அந்தரங்கத்தானத்திலே தங்களுக்கு இயல்பாக உள்ள பரிமாணத்தோடு நெருங்கி நிறைந்து சபைகூடிப் பொன்னாதனங்களின் மேல் பல்லாயிர உப தேவர்களாய் ஆலோசனை நடாத்தும்படி வீற்றிருந்தார்கள். அப்படியிருந்தவர்கள் சற்றுநேரம் பேசாதமர்ந்திருந்தபின்பு, அவர்களைச் சபைகூடும்படி பிறப்பிக்கப்பட்ட [முன் வள்ளுவர்கள் பிரசித்தம் பண்ணிய] நிருபம் வாசிக்கப்பட்டு மகாலோசனை ஆரம்பித்தது.



# சுவர்க்க நீக்க வியாக்கியானங்கள்.

## I. சுவர்க்க நீக்கப் பொது வியாக்கியானங்கள்.

மில்ட்டனூர் 31-வயதுக்கும் 34-வயதுக்கும் இடையே (1639-42-வருஷ மத்தியில்) இந்நூலின் விஷயத்தைத் தொகுத்தெழுதிய தன்றி 4-வது காண்டத்தில் சாத்தான் சூரியனைநோக்கிக் கூறும் பாடலிற் சில பாகமும் எழுதியிருந்தார். ஆயினும் அவர் சரித்திரத்திற் கூறியிருக்கிற சுதேச கலகத்தால் 1658-வது வருடமளவும், இந்நூல் பாவேது நடைப்பட்டிருந்தது; அந்த வருடத்தில், தொடர்ந்தெழுத ஆரம்பிக்கப்பட்டு 1663-ம் வருடத்தில் முற்றுப் பெற்றது. ஆனல் அதைச் சீர்திருத்தி மறுபடியெழுதிச் சரியான பிரதிசெய்யவேண்டியிருந்தது. பூரணதசையில் 1665-ம் வருடத்தில் அது பார்வையிடத்தக்கதாயிற்று. பின்பு அதை மில்ட்டனூர் எல்வுட் (Ellwood) என்பவரிடம் கொடுத்துப்பார்க்கும்படி சொன்னூர். அவர் வாசித்துப் பார்த்தபின் மில்ட்டனை நோக்கி "சுவர்க்க நீக்கத்தைப்பற்றி மிகவும் சொல்லியிருக்கிறீரே, சுவர்க்க மீட்சி யைப்பற்றி யாது சொல்லப்போகிறீர்?" என்று கேட்டார். இப்படிக் கேட்ட 1665-ம் வருடத்தில் சுவர்க்க மீட்சி துவக்கப்பட்டிருக்கலாமென்று ஊகிக்கப்பட்டிருக்கிறது.

அக்காலத்தில் நூல்களைப் பார்வையிட்டுப் பிரசுரஞ்செய்வதற்கு அநுமதிகொடுக்கவும் கொடாது மறுக்கவும் ராஜாங்கத்தாரால் அளிக்கப்பட்ட அதிகாரத்தைக் கந்தர்புரி அத்தியக்ஷகுரு (Archbishop of Canterbury) வகித்திருந்தார். அவர் அவ்வேலையை ஒரு பிரதிநிதியைக்கொண்டு பார்த்துவந்தார். மில்ட்டனுருடைய மதக்கொள்கைகளுக்கும் துரைத்தனக்கொள்கைக்கும் மாறுன கொள்கைகளையுடைய (Tomkyns) என்பவர் அப்பிரதிநிதி வேலை பார்த்துவந்தார் அவர்,

“.....................அடிவானில் மூடுபனியமருங்காலை, [னன்றி,
அவ்வாறுடொளி குறைந்து தோன்றுதய ஞாயிறுபோல் அவிர்ந்தா
ஒவ்வாலோன் பின்னின்று மழுங்கியதுன் னிமித்தங்காட்டொளிகள்
குவ்வாணர் மிசைவீசி யரசரிராச் சியகலங் கூடுமென்று, [பாதிக்,
கெவ்வாகுலங் கொளச்செய்கிரகண சூரியன்போன்றும் விளங்கிறு
[றல்”

என்று சுவர்க்க நீக்க முதற்காண்டத்தில் வருவதை வாசித்தலும் கலங்கிநின்று அந்நூலைப் பிரசுரிக்க அநுமதி கொடுக்கலாமோ கூடாதோவென்று சந்தேகித்துத் தடுமாற்றங்கொண்டார். அவர் தியங்கியதற்குக் காரணம் அக்காலத்தில் அரசனைப்பற்றி இதனினுங் குறைந்த விசேடங்களைக் கூறியதற்கே அனேகர் தண்டனையடைந்திருந்ததே. ஆயினும் டாம்கின்ஸ் (Tomkyns) ஒருவாறு தேறி இந்நூல் ஒப்பேறவிடுத்தார்.

இவ்வாறு அநுமதிபெற்றபின் சாமுவேல் சிம்மன்ஸ் (Samuel Simmons) என்னும் புத்தகப் பிரசுரம் பண்ணுபவரிடம் இந்நூல் கொடுக்கப்பட்டது. இதன் பிரசுரத்தைப்பற்றி மில்ட்டனாரும் அவரும் செய்துகொண்ட உடன்படிக்கை இங்கிலாந்து தேசத்து பலபொருட்காட்சிச் சாலை (Museum) யில் பாதுகாத்து வைக்கப்பட்டு வித்தியாசம்பந்தவிநோதப் பொருள்களு ளொன்றாயிருக்கிறது. இதிலுள்ள விசேடம், அவ்வளவாக, ஒரு பெருங்கீர்த்திமானுடைய கைச்சாத்திருக்கிற தென்பதன்று; இந்தநூலின் தற்காலத்திய பிரக்கியாதிக்குச் சிறிதும் ஒவ்வாதவண்ணமாக, பிரசுர சுதந்தரம் பயனற்ற பாழ்ங் காகிதக் கிரயமீதியாக விலைமதிக்கப்பட்டிருப்பதே. அச்சுதந்தர விக்கிரயத்தினால் மில்ட்டனார் பெற்றதெல்லாம் பத்துப் பவுனே. இந்த ஒப்பந்தத்தில் அவர் அற்பலாபமடையும்படி நேர்ந்த தென்று சிலர் விசனமுறுகின்றது தகுதியாகவில்லை. அப்படிக் குறைந்த பிரயோசனமடைந்தது ஒருவாறு நன்மையாகவிருக்கிறது. ஆங்கிலேய பாஷையின் அதியுன்னத மகத்துவ சாதனமாக விளங்கும் கிரந்தம் வரிக்கொருபவுன் கொடுத்து வாங்கப்பட்ட தென்பதிலும் விலையற்றதென்பதே பெருமையுடையது.

## சுவர்க்க நீக்க மூலம்.

சுவர்க்க நீக்கத்துக்கு மூலம் பலரால் பலவாறாகக் கூறப்பட்டிருக்கிறது. உலகத்தில் தீமைவந்த வரலாறாகிய சுவர்க்க நீக்கத்தின்

விஷயத்தையே விஷயமாகக்கொண்டு பலதேசத்துப் பலகாலத்துப் பல பாஷா வித்துவான்களும் நூல்களியற்றி யிருக்கின்றனர். அந் நூல்களுக்கு மில்ட்டனுரைது சுவர்க்க நீக்க நூல் மிகவும் கடன்பட்டதென்று சொல்வார் சிலரே. அவர்கள் சுவர்க்க நீக்கக்கதை கிறிஸ்தியரது பொது உடைமையென்பதையும், மில்ட்டனுரது சாதுரியம் அவர் எடுத்துக்கொண்ட விஷயத்தினாலன்றி அவ்விஷயத்தை நிர்வகிக்கும் வல்லமையினாலும், அவரது கருத்துக்களாலன்றி அக்கருத்துக்களை உபயோகிக்கும் வகையினாலும் விளங்குவதையும் கருதுவார்களானால், அவ்வபிப்பிராயத்தைக் கையகல விடுவார்கள். சுவர்க்க நீக்கப் பரம்பொருளைக் கோவில் கொள்விக்கப் பல கவிச்சிற்பர்கள் பல கிரந்தாலயங்களியற்றினர். அவற்றுள் மில்ட்டனுரியற்றியதே சிறப்புடையதாக யாவராலும் போற்றப்பட்டது.

**சுவர்க்க நீக்கத்திற் காணப்படும் பாண்டித்தியமும் நவீனத்துவமும்.**

மில்ட்டனுர் சுவர்க்க நீக்கத்தைப்பாடத் தொடங்கியபோது பாலிய காலத்தில் வீட்டிலும் வித்தியாசாலையிலும் படித்த படிப்பும், பலதேச யாத்திரையும், துரைத்தனச் சீர்திருத்தம் சமயச் சீர்திருத்தங்களைப்பற்றிச் செய்த வாதப் பிரதி வாதங்களும், லத்தின் காரியதரிசி உத்தியோகமும், கிரகாச்சிரம தருமபரிபாலனமும் ஆகிய இவைகளிற் பயின்று நெடுங்காலம் உழைத்துப் பெற்றிருந்த கல்வியும் தேர்ச்சியும் அவருக்குக் கைகொடுத்து நின்றன. அன்றியும், சுவர்க்க நீக்கம் பாடப் பட்டுக்கொண்டிருந்தபோதும், பிரத்தியேகமான பல விஷயங்களைப்பற்றிப் பல பெருநூல்கள் எழுதினராதலால், அந்நூல்களுக்கு வேண்டியிருந்த நித்தப்படிப்பும் ஆராய்ச்சியும் கூட உதவியாயின. இக்காரணங்களால், சுவர்க்க நீக்கத்தின் மற்றப் பெருமைகளைப் பற்றிச் சிறிது சந்தேகமிருந்தாலும், அது, உலகத்தில் பெரும் பாண்டித்திய மமைந்த நூல்களுட் சிறந்த ஒன்றென்பதில் எவ்வளவும் சந்தேகமிருத்தல் கூடாமையானது. அது கிறிஸ்திய வேதசாரம் எங்குந் ததும்பப்பெற்று அவ்வேத முழுமையும் கொஞ்சங்குறைய அவருக்கு மனப்பாடமாயிருந்ததென்று காட்டுகின்றது. அதைப் பல அறிவும் நிறைந்த உயர்ந்தமனத்தின் மகத்துவ கற்பனசக்தியினல் நிருமிக்கப்பட்ட அதி பாண்டித்திய மமைந்த பெருங்காவிய மென்பதனால் அதன் சிறப்புப் பூரணமாக விளக்கப்பட்டதாகாது. அதன் முழுவிஷயத்தையும் பிண்டமாக நோக்கினும் அதன் ஒவ்வொருபாகத்தையும் சிறிது சிறிதாக நோக்கினு

ளும் பிறரியாவருக்குங் கடன்படாதவைகளாகக் கவியின் மனோத ருமங்கள் காணப்படுகின்றன வாயினும், அதிலே, தற்காலத்தும் முற் காலத்தும் சிறந்த சகல நூல்களிலும் உள்ள உயர்ந்த கருத்துக்களெ ல்லாம், (பிறன் இழைத்த நூலை நெய்வோன் பலசாய மேற்றிச் சித் திரவத்திரம் செய்வது போலவும், மற்றொருவன் நெய்தவத்திரத்தை தையற்றொழிலோன் பலவாறு வெட்டித்தைத்துப் பலவகைத் தை யலுடைகள் செய்வதுபோலவும்,) கவியின் வல்லபத்தினால் பலவாறு மனோகரமாகப் பரிணமிக்கப்பட்டு விளங்குகின்றன. புஸ்தகவாசிப் பும், பொருள்களை உற்று நோக்குதலும், வாசித்தவைகளையும் நோ க்கியவைகளையும் சிந்தித்தலும் ஆகிய மூன்றையும் சமமாகப் பிரயோ கித்து மில்ட்டனார் ஈட்டிவைத்திருந்த திரளான கருத்துக்களெல் லாம் அவரது கற்பனாசக்திக் குபயோகமாயின. அக்கருத்துக்கள் இன்ன இடத்திருந்து கிடைத்தனவென்று அவர் மனதறியாமலே அவைகளை வேண்டிய இடத்துபயோகப்படுத்தினார். அக்கருத்துக் கள், அவர் மனம் வேறு தாம் வேறென்பதின்றி அவர் மனத்தோடு ஐக்கியபட்டிருந்தன. ஊற்றினின்றும் நீரோடுவதுபோல, அவர் மனத்தினின்றும் பாட்டுகள் வெளிப்பட்டன. (சிலதத்துவ சாஸ் திரிகள் கூறுகிறபடி,) கடவுள் வெளியாகவுள்ள வேறு பொருள்க ளைக் கொண்டு செய்யாமல் தன்னினின்றே படைத்ததுபோல் மில் ட்டனார் தங்காவியத்தை வெளிப்பொருள் வேண்டாது தம்மனத்தி னின்றே சிருட்டித்தார். ஆன்றோர் பல காலத்தவர்களுடைய சிற ந்த கருத்துக்களையே உணவாக அருந்தி வளர்ந்த அவருடைய மன ச்சிலம்பி தன்னிலிருந்தே சுவர்க்க நீக்க நூலையிழைத்தது.

## நூல் விஷயம் தெரிந் தெடுத்தல்.

ஒரு பெருங்காவிய மியற்று நோக்கமே மில்ட்டனாருடைய சரி த்திரத்துக்கு மத்தியஸ்தானமாகவும், அச்சரித்திரத்தில் அடங்கிய பொருள்களைத் திறந்து காட்டும் திறவுகோலாகவுங் கருதலாம். கிரே க்கருள் ஹோமர் (Homer) என்றும், உரோமருள் வர்ஜில் (Vergil) என்றும் பெருங் கீர்த்தி படைத்திருந்த பூர்வீக காவிய கவிஞர்களோ டொாத்த கீர்த்தியுடைய வேண்டுமென்றும் தம் சுதேசத்திலும் கிறிஸ் து மதம் பரவிய மற்றச் சகல தேசங்களிலும் தாம் காவிய கவித்தலை வராக வேண்டுமென்றும் அவர் கொண்டிருந்த அவாவுக்குத் தக்கபடி காவியத்தின் விஷயஞ் சிறந்ததாகத் தெரிந்தெடுக்க வேண்டியிருந்த

து. அவ்விஷயம் திருத்திகரமா யிருந்தாலொழிய, கவியின் மனது கவனத் தொழிலை யின்பமாகக் கொண்டனுபவியாது. அவ்வின்ப அநுபவமே கவியின் மனோ சிருட்டிக்கு உயிரும் ஊக்கமுந்தரவல்லது. ஆதலின் அவ்விஷயம் கவியின் மனதுக்குவந்ததாகவு மிருப்பது ஆவசிகமாயிற்று. நூல் விஷயத்துக்கு, கேவலம், மனோபாவனையாற் சிருட்டிக்கும் பொருள்களும் கற்பித கதைகளும் கூடாதன வென்பதும் சாமெய்த்தாலும் சங்கதிகளும் மக்களும் மெய்யானவைகளாக வேண்டுமென்பதும் மில்டனுருடைய கொள்கைகள். அன்றி அவர், அச்சங்கதிகளும் மக்களும், சரித்திரங்களால் சகல குணகுண விசேடங்களுடன் விவரித்துக் கூறப்படாதவைகளாய், தந்நூலை வாசிப்போருட் பெரும் பாலாருக்குப் பொது உடைமையாகவும் சாதாரணமாக இனிமை பயப்பவைகளாகவும் இருக்கவேண்டு மென்றும் கருதினார். நெடுங்கால ஆராய்ச்சியின்மேல், இந்த இலக்கணங்களுடையது சுவர்க்கநீக்கமே யென்று துணியப்பட்டது. எபிரேய (Hebrew) வேதத்திலடங்கிய பல விசித்திரமான உபகதைகளிலும், மனிதன் பதவி யிழத்தல் (ஆகிய சுவர்க்க நீக்கம்) ஒரு யூத சரித்திரத்துக்குமில்லாத, சகலமுந் தன்னுளடக்கும் சமுதாய விசேடமுடையது. (பழைய ஏற்பாட்டில்) ஆதியாகமத்தின் முதற்பகுதி, மனிதனைப்பற்றிய கிறிஸ்திய மதக் கொள்கைகள் முழுதும் காலக்கிரமத்தில் உண்டாவதற்கு ஆதாரமான வைதிகக் கோட்பாட்டை நாடகரூபமாக விளக்குகின்றது. இந்த உலக நாடகத்தில், மேலேயுள்ள பரமண்டலமும், கீழே யுள்ள நரகமும், ஒளிநடு வாழுந்தேவர்களும் இருள்நடு வாழும் நரகர்களும், (நமது மனக்கண்ணுக்கு எதிரெதிராகக்கொண்டு வரப்பட்டு, அவ்விரண்டு எல்லையற்ற இடங்களுக்கும் நடுவே ஒரு சிறு பந்துபோலத் தூங்கும் நமது உலகத்தில் வாழுமாந்தர்களது விதியைத் தீர்மானிக்கும் நிமித்தம், போர்மூட்டப்படும் விசித்திரத்தைக் காணலாம். மஹாகாசத்தின் மொத்த விஸ்தீரணத்தோடு ஒப்பிட்டு நோக்குங்கால்,புலப்படுகின்ற இப்பூமியின் அதி அற்பமான சிற்றளவையும், அப்போர் முடிவினால் மனிதர்க்கு விளைந்த மகா முக்கியமான பெரும் பயன்களையும் நாம் எக்காலத்திலும் தெளிவாக நோக்கி வியக்கும்படி, மற்ற எந்தக் கவிஞருங் கையாளுதற்கசாத்தியமான இந்த அபாரவிஷயம் நமது கவியின் மனோசக்தியால் நன்குவசப்படுத்தி ஆளப்பட்டிருக்கிறது.

## பாஷை தேர்ந்தெடுத்தல்.

மில்டனார் பாலியகாலத்தியற்றிய பிரபந்தங்க ளனேகமெழுதப்பட்டிருக்கிற லத்தீன் பாஷையில் சுவர்க்க நீக்கத்தை எழுத வேண்டுமென்பது அவர் முதற்கொண்ட நோக்கம். அவ்வாறு செய்வதனால், தந்நூலை ஆங்கிலேய வித்துவான்களேயன்றி ஐரோப்பாகண்டத்துப் பல தேசங்களிலுமுள்ள பல பாஷா வித்துவான்களும் வாசிப்பார்களென்றெண்ணினார். அதிட்டானு கூலத்தினால் அவர் அவ்வாறு செய்யாதபடி, சில முகாந்திரங்களிருந்து தடுத்து இங்கிலீஷிலேயே யெழுதும்படிசெய்தன. அவற்றுள் ஒன்று, மெய்க்கவிஞனுயுள்ளோன் தன்தேசத்தாருக்குக் கவுரவமுண்டாக்கி அறிவு பயிற்றித் தன் தாய்மொழியை அலங்கரித்து வளப்படுத்த முயல்வதே சிறந்ததென்று சுதேசநேசத்தாலுண்டாகிய உறுதிப்பாடு. தந்நூலை இங்கிலீஷிலெழுதுவதினால், தமக்கு மற்றவகையால் பல தேச சமூகப் பிரக்கியாதி கிடைக்கக் கூடுமென்ற நம்பிக்கை முழுதும் கைவிடவேண்டியிருந்ததை அவர் பெரிதாகக் கருதவில்லை. அங்கிலேயத்திலும் சுயபாஷையிலும் ஒருங்கு தேர்ச்சியடைந்துள்ள இந்திய கல்விமான்கள், பிறர் உதவியின்றியே எப்பாஷையிற் சிறந்தவைகளையும் தம்பாஷையுடைமைகளாக்கும் ஆங்கிலேயர் பல நூற்றுவர் இருக்கவும், தம்பாஷை நூல்களை ஆங்கிலேய பாஷையில் மொழிபெயர்ப் போரைப்பின் பற்றுது. மில்டனார் இவ்வாறு செய்ததை ஞாபகத்தில் வைப்பாராயின், உதவி மிகவும் வேண்டுவனவாகிய சுதேச மொழிகள் பிரயோசனம் அடையும்.

## வானசாஸ்திரக் கோள்கைகள்.

சுவர்க்க நீக்க மெழுதப்பட்டகாலத்தில், நம்முடைய உலகத்தில் சூரியனைச் சுற்றிப் பூமியை யுள்ளிட்ட சகல கிரகங்களும் சஞ்சரிக்கின்றன வென்றும் சூரிய மத்திய சித்தாந்தமானது தேறக்கற்ற சிலரால் ஸ்தாபன உண்மையாக அங்கீகரிக்கப்பட்டும்; (ஒளியூடுருவும்) தெளிவான (கட்டியல்லாத) குழற்கோளங்கள் சந்திரன் முதலிய கிரகங்களையும் நட்சத்திரங்களையும் ஒவ்வொரு கிரகம் ஒவ்வொரு கோளத்திலும் நட்சத்திரங்களெல்லாம் ஒரு கோளத்திலுமாக தம்மிடத்துடையவைகளாய், ஒன்றன்பி ன்ஞென்ருய், நிலைபெயர்ச்சியற்ற பூமியை மண்டலாகாரமாகச் சூழ்ந்து சுழலுதலால் இராப்பகல் முதலிய தோற்றங்கள் நிகழ்கின்றன வென்று விவரிக்கும் பூமி மத்திய சித்தா

ந்தம் சாதாரண ஜனங்களால் நம்பப்பட்டிருந்தது. சாஸ்திர ஆராய்ச்சியையும் பாரம்பரியத்தையும் முறையே ஆதாரமாகக்கொண்ட இவ்விரு சித்தாந்தங்களும் அக்காலத்து ஜனங்கள் மனதில் எதிரெதிராகப் பிரசன்னமாக விருந்தது போலவே, சுவர்க்க நீக்கத்திலும் இருக்கின்றன. இவ்வாறு இருவகைச் சித்தாந்தத்துக்கும் இடங்கொடுக்கும் சுவர்க்க நீக்கத்தின் வானமண்டல விஸ்தீரணம் மஹாகாசத்துக்குக் குறைவுபட்டதன்று; அதன் காலம் நித்தியத்தினுஞ் சுருங்கியதன்று; இப்பெரிய பூமியும் உலகத்தில் ஒரு புள்ளிபோன்றிருக்கின்றது; உலகமும் எல்லையற்ற ஜோதிமண்டலத்தினின்று தூங்கும் ஒரு துளிபோன்றிருக்கின்றது. மானுட மகோன்னத மனோசக்தி கடக்கக்கூடாத எல்லைச் சுவர்களில் செட்டை தட்ட மில்டனது மானசப் பறவை பறந்தலாவினது.

## கவிஞர்க்குரிய கருத்துக்கள்.

ஆங்கிலேயப் பயிற்சியுடைய சில அறிந்துவிற்பன்னர்கள் நமது கவிவாணர்கள் இயற்கைப் பொருள்களையும் தோற்றங்களையும் (ஆங்கிலேய கவிஞருட் பெரும்பாலர் கூறுவதுபோல) அவைகள் உள்ளபடியே கூறவில்லை, யென்பதுபோல, மில்டன் மகாகவியும் இவ்வித குற்றமுடையாரெனக் கூறுவாரும் உண்டு. மில்டனுருடைய மனோபாவனைப்போக்கு பொதுவாகக் காணப்படுகிறபடி முதலாவதாகவும் அப்போக்கு சுவர்க்க நீக்கத்தில் தோன்றுகிறபடி இரண்டாவதாகவும் கூறப்படும்.

(1) தாவர சங்கமசாஸ்திரி (தான் ஆராய்தற்குரிய சராசரப்பொருள்களொவ்வொன்றையும் அறிய முயலும்போது) எவ்விதம் பார்க்கவும் கேட்கவுஞ் செய்வானோ அவ்விதம் பார்க்கவும் கேட்கவும் மில்டனுருக்குக் கண்ணுங் காது மிருக்கவில்லை. எந்தக்காலத்திலும், அவர் கண்ணிழக்கு முன்னுங்கூட, இயற்கைப் பொருள்களை உள்ளபடி உற்று நோக்கினவரல்லர். இயற்கையின் பொருள்களையும் அதன் வழிகளையும் நுட்பமாகவும் ஆர்வத்தோடும் கவனித்து நோக்கும்படியாக அப்பொருள்களிலும் வழிகளிலும் பிரீதிவைக்கும் இயல்பை அவர் எக்காலத்திலும் அடையவில்லை. குழந்தைப்பருவத்திலே வெளி நாடுகளில் வாசஞ்செய்தாலன்றி உண்டாகாத இயற்கையைப்பற்றிய அனுபவ உணர்ச்சி அவருக்கிருக்கவில்லை. அவர் வீட்டுக்ககத்தே யிருந்து பெறக்கூடிய நூலுணர்வுடையரா யிருந்தா

ரேயன்றி வெளிப்புறத்தே பலபொருள்களையும் உற்று நோக்கி உய்த்துணருஞ் சுபாவமுடையவராயிருக்கவில்லை. அவர் காலம் பெரும்பாலும் படிக்கும் அறையிற் கழிந்தது. வெளியே உலாவப் புறப்பட்டபோதும் படிப் பெண்ணங்களைக்கூடவே கொண்டுசென்றனர். அவர் இயற்கையை நோக்காதிருக்கவில்லை; ஆயின் நோக்கியபோது தாங்கற்ற நூல்கள் வாயிலாக நோக்கினார். இயற்கைத் தோற்றங்களை வெளியினின்றுங் கிரகித்தாராயினும், அப்படிக் கிரகித்தபோதெல்லாம், அவைகளை முன் எக்காலத்துப் புலவர்களும் எவ்வாறு அலங்கரித்து வருணித்திருக்கிறார்களோ அவ்வாறு (அந்த வருணனைப்படி) கிரகித்தார்.

அவர், இயற்கைப் பொருள்களை தாவரசங்கமசாஸ்திரி, நூலொழுங்கின்படி பார்ப்பதுபோல பாராதிருந்ததன்றி, அவைகளை நுட்பமாக உற்றுநோக்கும் மற்றவர்களைப்போல பார்க்கவுமில்லை. அவர் கவிஞர் கண்ணோடு இயற்கையின் முழுச்சொரூபத்தையும் பிண்டமாகப் பார்த்ததனாலுண்டாகிய பேரானந்தமானது, அதை (ப்பிரேத சோதனை செய்வார்போலச்) சேதித்துத் துண்டப் படுத்திப் பின்னமாகப் பார்க்க ஒட்டாதபடி செய்தது. இயற்கையின் உண்மைகளையும் தோற்றங்களையும் அவைகள் உள்ளபடி தெரிவிப்பது தம்வேலையென்று கருதாது அவைகளை புணர்ந்தானந்திக்குந் தன்மையுடையார் மனதிற்றோன்றும் வண்ணமே அறிவித்தார். அவர் பொருள்களையுந் தோற்றங்களையும் உள்ளபடி கூறவில்லை யென்பதில், உண்மை விரோதம் கூறப்பட்டதாகத் தோற்றினும், மனோபாவனையிற்றோன்றிய வண்ணங் கூறினாரென்பதில் விசேட உண்மை கூறப்பட்டதாக விளங்குகின்றது. தமயந்தியின் பேரழகை ஒரு சாதாரணமாதிடத்து அவள் காதலன் காண்பானாயின், கவிஞன் அவள் அழகை அவன் கண்டபடி கூறுவது, அவ்வழகை உள்ளபடி கூறுதலினுஞ் சிறந்த உண்மையுள்ளதென்பது தானே விளங்கும். மேற்கூறியவாறு கவிக்குற்றங் காணப்புகுவோர், கவியுண்மை வேறு இயற்கை உண்மை வேறு———செய்யுட் கடுத்த உண்மை வேறு இயல்பாக உள்ள உண்மை வேறு———என்பதை ஞாபகத்தில் நீங்காது வைத்தல் வேண்டும்.

(2) மிலட்டனார் சுவர்க்கநீக்க வாயிலாக நமக்குக்காட்டக் கருதிய உலகம் மனுஷர் சரித்தனுபவிக்கும் சடவுலகமன்று. அது கட

வுள், அவர் குமாரர், தேவதூதர்கள், பைசாசர்கள் ஆகிய இவர்கள் குடியேறப்பெற்ற சுபாவாதீதஉலகம். அது பாவ மரணத்தையும் ஸ்திரீ புருஷர்களாக உருவகிக்க இடங்கொடுப்பது. அதில் வசிக்கும் (ஆதாம் எவாள் ஆகிய) இரண்டு மக்களுங்கூட நம்முலகத்தில் இப்போது வழங்கும் வாழ்க்கை வழிகளுக்கிணங்கி நடக்கக்கடமைப் பட்டவர்களல்லரென்று யாவரும் ஒத்துக்கொள்வார்கள். கடவுள் முதலாகிய இவர்களை யெல்லாம் வரையறுத்த வடிவ இலக்கணங்களுடன் நமக்குக்காட்டியிருந்தால் அது ஆபாசமாயிருக்கும்.

சுவர்க்க நீக்கத்தின் உலகம், பரமண்டலம், நரகம், (பூதபௌதிகங்கள் ஒழுங்கும் உருவமுமின்றி நிறைந்த மூலவுலகாகிய) சமட்டி (Chaos) ஏதேன் தோட்டம் ஆகிய இவைகள் அடங்கி, நமது மனம் இனிது வாழும்படி மில்ட்டனார் மனோசக்தியாற் சிருட்டிக்கப்பட்ட மானசிக உலகம். நாடகக்கிரந்தங்கள் மட்டுமென்றி, எந்தக்கிரந்தங்களுமே மனமயக்கத்தை ஆதாரமாக உடையன. நொடிப்பொழுதாயினும் அம் மனமயக்கத்திற்றோன்றும் உலகை நாம் நம்பல் அவசியம். நாம் வாழும் இவ்வுண்மை யுலகத்தினின்று கவிகாட்டும் அவ்வுலகத்தில் பிரவேசித்தல் வேண்டும். அவ்வாறு பிரவேசிக்கச்செய்வது முக்கியமாகக் கவியின் வேலையாயினும், வாசிப்போர் அவருக்கு உதவிசெய்தல் வேண்டும். வாசிப்போரது பாவனாசக்தி கவிக்கு உதவிசெய்யப்போதிய ஊக்கமுடையதாயில்லாவிட்டால் கவியின் முயற்சிக்கு எதிரிடை செய்யாமலாவதிருத்தல் வேண்டும். நாம், ஒருக்கால், கவியினது ஆநந்த உலகத்திற் புகுந்தபின், நமது குணங் குற்றங் கண்டுபிடிக்குஞ் சத்திகளைப் பிரயோகித்துச் சோதனை செய்யவும் அங்கு நிகழும் சகலமும் அம்மாயா வுலகத்தின் சுபாவத்திற்குப் பொருந்தியிருக்கவேண்டுமென்று வற்புறுத்தவும் நமக்குப் பாத்தியமுண்டு. இதுவன்றி, அவ்விதவுலகம் இருத்தலே அசாத்தியமென்று ஆரம்பத்திலேயே ஆக்ஷேபித்தல் முறைமையன்று. எவர்களுக்குப் பாவனாசத்தி குறைந்திருக்கிறதோ அவர்கள் மேற்கூறியபடி கவிக்குதவிசெய்ய அசத்தர்களாயிருக்கிறார்கள். கவி தனக்குரிமையாகவேண்டுகிறபடி தங்கள் மனத்தை முதலில் ஒப்புவிக்க இசையாதவர்களே, சுவர்க்க நீக்கத்திற் குற்றங்கண்டுபிடிப்பவர்களிற் பெரும்பாலராக விருக்கிறார்கள். அவர்களுக்குப் பாவனாசக்தி குறைவாயிருக்கிறதேயன்றி, அவர்கள் எண்ணுகிறபடி குணங் குற்றங் கண்டுபிடிக்கும் வல்லபம் அதிகமாக விருக்கவில்லை. பாவனை செய்

யவல்ல மனோதருமமில்லாதவர்கள் நூல்களுள் குணங் குற்றம் நாடு தல் அத்திவாரமின்றி வீடுகட்டுதல் போலும், மற்றெந்த ஆங்கி லேய கவியிலும் அதிகமாக, தந்நூலின் மானத உலகத்தை, வாசிப் போர் மனக்கண்ணுக்கு உண்மையாகத் தோன்றும்படிசெய்தது, மில்டனாது பேராற்றலை விளக்குகின்றது. திட்டமான சாஸ்திர ஆராய்ச்சிகளாலும் சோதனைகளாலும் துணியப்பட்ட முடிவான உண்மைகளை ஜனங்கள் ஒப்புக்கொள்ளாதபடி தடுப்பது, ஆதியாக மத்திற் (Genesis) கூறியிருக்கும் பிரபஞ்சத்தோற்ற வரலாறன்று, சுவர்க்க நீக்கத்தின் ஏழாவது காண்டத்திற் கூறப்பட்டுள்ள அண்ட கோச விவரணமே யென்று உலகெங்கும் கீர்த்தி பரவப்பெற்ற ஹக்ஸ்லி (Huxley) மஹாபண்டிதர் முறையிட்டாரானால், மில்டனாது அபார கவி வன்மையைப்பற்றி நாம் கூறவேண்டியதுண்டோ?

## II. சுவர்க்க நீக்க முதற்காண்டச் சிறப்பு வியாக்கியானங்கள்.

முகவுரையில் சுவர்க்கநீக்கப் பெருங்காவியத்தின் சிறப்பெடுத்துக் கூறியபோது அதன் பன்னிரண்டு காண்டங்களுள்ளும் முதலிரண்டு காண்டங்களும் மிகச் சிறந்தவைகளென்று கூறப்பட்டிருக்கின்றன. அவ்விரண்டு காண்டங்களும் ஒன்றுக்கொன்று பிந்தாதவைகளாயினும் செய்யுட்டிரட்டுக்க ளெழுதுவோர் முதற்காண்டத்திலிருந்தே அருமையான பகுதிகளை யெடுத்தாளுகின்றனர். [முதற்காண்டம் 175-196 பாட்டுக்கள் விசேட அருமை யுடையவைகளாகப்பாராட்டப் பெற்றவை.]

தமிழறிந்தோருள் சிரமத்துக்குப் பின்னிடாது ஆராய்வோர் முதற்காண்டத்தை நன்கு மதித்துக்கொண்டாடுவாரென்பது நிச்சயமாயினும் அதிற் கூறப்பட்டுள்ள சில பெயரட்டவணைகள் வாசிப்போர் மனதிளைக்கும்படி நீண்டவைகளாகத் தோன்றலாம். சிறந்த ஆங்கிலேய மகா வித்துவானாகிய மக்காலே (Macaulay) பிரபு கூறியிருக்கின்ற (பின்வருவதை) நோக்கினால் அப்பெயரட்டவணைகள் இளைப்புண்டாக்குவனவாகத் தோன்றும் தோற்றம் நீங்கி விசேஷ இனிமையுடையவைகளாகக்காணப்படும். "மில்டனுருடைய நூல்

களில், அநேகமாக, கேவலம், பெயரட்டவணைகளான பாகங்களினும் அதிகச்சாதாரணமாகத் தெரியப்பட்டவைகளும் எடுத்துக்கூறப்பட்டவைகளும் ஆகிய பாகங்கள் இல்லை. அப்பெயர்கள் [சிலபெயர்கள் தவிர மற்ற] எல்லாம் மற்றப்பெயர்களினும் விசேஷத்தகுதியாயினும் இன்னோசையாயினும் உடையவைகளாயில்லை. ஆனால் அவைகள் மனதைக்கவர்ந்துகொள்ளும் சக்தியுடையவைகளாயிருக்கின்றன. அவைகள் ஒவ்வொன்றும், ஒன்றற்கொன்று நெருங்கிய சம்பந்தமுடைய பல கருத்துகளின் கோவையாகிய ஒரு நெடுந்சங்கிலியின் முதற்றொடராயிருக்கின்றது. [பாலப்பருவத்திலே அயலிடம்போயிருந்த] ஒருவன் தக்கவயதடைந்தபின் திரும்பிவந்து பார்க்கப்பட்ட அவனது குழந்தைப்பருவத்து வாசஸ்தலம்போலவும், அன்னியதேசத்தில் கேட்கலுற்ற சுதேசப் பாட்டுப்போலவும், அவைகள், தங்களுக்கு இயல்பாக உள்ள தன்மையோடு எவ்வளவும் சம்பந்தமில்லாத ஆனந்தத்தை நம்முடைய மனத்தில் உண்டாக்குகின்றன. அவற்றுள் ஒன்று நம்மைச்சரித்திர [த்திற் கூறப்பட்டுள்ள] காலங்களிலே நெடுங்காலத்திற்கு முந்திய காலத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கின்றது; மற்றொன்று ஒரு தூரதேசத்தின் நூதனக்காட்சிகள் [அத்தேசத்துச் சனங்களுள் வழங்கும் நடை உடை முதலிய] ஆசாரங்கள் ஆகிய இவற்றின் மத்தியில் கொண்டுவைக்கின்றது; வேறொன்று பாலப்பருவத்தில் மனனமாயிருந்த பூர்வ கிரந்தங்களின் அருமையானபாகங்கள் எல்லாவற்றையும், [நாம் படித்துக்கொண்டிருந்த] பள்ளிக்கூடத்தை, விடுமுறை நாள்கள் வெகுமதிகள் முதலியவைகளையும் நமது ஞாபகத்தில் உதயமாகும்படி செய்கின்றது; பின்னொன்று [சில நூற்றாண்டுகளுக்கு முன் ஐரோப்பாவில் விசேஷபிரபலம்பெற்று வீரதருமத்தை விசேடமாகப் பாராட்டிவந்த வீரர்கள் துரகாரூடராய் ஈட்டி கேடகத்தோடு செய்யும் தொந்த யுத்தத்தில், ஒருவரோடொருவர் பொருது விருது பெறமுயன்ற சிலம்பப் போர்க்களமாகிய] களரிகள், சித்திரங்கள் அமைந்த மாளிகைகள், [அவ்வீரர்கள் கருத்தைக் குறிப்பாகத் தெரிவிக்கும்படி கொடிகளில் சித்திரித்த] விசித்திர சின்னங்கள், பூதங்களும் பைசாசங்களும் சஞ்சரிக்கும் ஆரணியங்கள், [மாந்திரிகரது] மந்திரத்தினாற் பிடிக்கப்பட்ட உத்தியான வனங்கள், [தாங்கள் காதலுற்ற நாயகிகளை மனதுவத்தல் ஆகியவை காரணமாக] வீரர்கள் செய்யும் சாகச கிருத்தியங்கள், ஆபத்தினின்றும் தப்புவிக்கப்பெற்ற அரசிளங்குமாரிகள் தப்புவித்த வீரரை மகிழ்ந்து குறுநகையோடு நோக்கிச் சம்மானி

த்தல் ஆகிய, பூர்வீக வீரர்களைப்பற்றிய கற்பித கதைகள் கூறுகின்ற அற்புத விநோதக் காட்சிகளை நமக்கு முன் பிரத்தியட்சமாகக் கொண்டுவருகின்றது.'' இவ்வாறு பல இலக்கிய நூல்கள், சரித்திரங்கள், புராணங்கள், இதிகாசங்கள், கற்பித கதைகள் முதலியவற்றினின்று எடுத்தாளப்பெற்ற பெயர்த் தொகுதிகள் முதற்காண்டத்தில் அ௨, ௬௨, ௧௩, ௧0அ-௬, ௧௧௨-௧௪, ௧௨௩, ௧௩௪-௩௬, ௧௭௨-௪, ௧அ௫-அ, ௨௨௧-௨, ௨௬0-௨, ஆகிய பாட்டுக்களில் வருவதைக் காண்க.

134-66 ஆகியபாட்டுக்களில் வரும் கிரேக்கர் உரோமர் எகித்தியர் முதலாயினோருடைய தெய்வங்கள் சாத்தானோடு பாவஞ் செய்து நரகத்தில் தள்ளுண்ட பைசாசங்களாக மில்டனார் கற்பனுசத்தியால் அமைத்துக் கூறியிருப்பது வியந்து கொண்டாடப் பெற்றது.

சுவர்க்கநீக்கத்தில் காணப்படும் சில உவமானங்கள், உவமேயங்களின் அளவுக்கு மிகவும் மிஞ்சி, நிரம்பவும் நீளமானவைகளாயிருக்கின்றன வென்று அதைவாசிக்கும் நம்மவர்கள் மனதிற் றோன்றலாம். அவ்வாறேசில ஆங்கிலேய வித்பன்னர்களுக்குந் தோன்றி அவர்கள் குற்றம் பாராட்டியதை நோக்கி அடிஸன் (Addison) ஆசிரியர் அவ்வுவமானங்களை அவ்வளவு நீண்டவைகளாக எழுதியதில் மில்டனாருக்கிருந்த நோக்கத்தை விசதப்படுத்திக் கூறியிருக்கிறார். பின்வருவது அவர் கூறுவதன் சாரம்:— மில்டனார் பொருள்களுக்கும் மனிதர்களுக்கும் அவர்கள் செயல்களுக்கும் உவமானங் கூறப் புகுந்தபோது, அவ்வுவமானத்தினால் விளக்கிய உடனே அதை விட்டுவிடாமல் அதைக்கொண்டு மகத்துவமான மனக்காட்சிகளை உண்டாக்குகின்றார். அக்காட்சிகள் அனேக சமயங்களில் அவ்வுவமானஞ் சொல்வதற்குக் காரணமாயிருந்த சந்தர்ப்பங்களுக்கு அன்னியமாகவிருக்கின்றன. உவமேயத்துக்கும் உவமானத்துக்கும் உள்ள ஒற்றுமை அனேகமாக ஒருவரி அல்லது இரண்டு வரிவரைதான் நிகழ்கின்றது; அவர் அம்மட்டில் நின்றுவிடாமல், வீரகாவியத்தின் இயல்புக்குப் பொருந்தியதும் வாசிப்போர் மனத்தில்ஆனந்தம் பெருகச் செய்வதுமான மகத்துவமானதத்தோற்றங்கள் அல்லது இன்பமான எண்ணங்கள் உதயமாகும்வரை, அவ்வுவமானத்தாற் றோன்றிய கருத்துக்களைப் பின்பற்றிச் செல்கின்றார். பெருங்காவியங்களில் வரும் உவமானங்கள், உவமேயங்களை விளக்கு நிமித்தம்

மாத்திரம் பிரயோகிக்கப் படுகின்றனவல்ல; அவைகள் நூலின் முக்கிய விஷயத்தில் வருத்தமுண்டாகும்படியான அளவு அழுந்தும் வாசிப்போன் மனத்தை அடிக்கடி விடுவித்து, மனோகரமான மற்றக் காட்சிகளை நோக்கி ஆனந்திக்கும்படி செலுத்தி இந்திரியாக அயர்வுயிர்ப்பித்து உல்லாசப்படுத்தும் பொருட்டாகவும் உபயோகிக்கப் படுகின்றன. செய்யுளில் உவமான உவமேயத்தின் பாகங்கள் ஒன்றற்கொன்று அதிநுட்பமான பொருத்த முடையவைகளாக விருக்கவேண்டிய ஆவசிகம் இல்லை. உலகத்தில் சிறந்த பலகாவியங்களையும் ஆராய்வோமானால், மனோரஞ்சிதமான பலவிகற்ப வனப்புக்களுக்கிடங்கொடுக்கும் கதையானது அக்கதை கூறப்படும் காவியத்துக்கு உயிராயிருக்கின்றது. அதன் கிளைக்கதைகளத்தனையும் அத்தனை சிறுகதைகளாக விருக்கின்றன. அதன் உவமானங்களத்தனையும் அத்தனைசிறுகிளைக்கதைகளாகவும் உருவகங்களத்தனையும் அத்தனை சிற்றுவமானங்களாகவும் இருக்கின்றன. இப்போது கூறியகருத்துக்களை மனத்தில் வைத்துக்கொண்டு வாசிப்போர், சுவர்க்கநீக்கம் முதற்காண்டத்தில் கூறப்பட்டுள்ள கிரகண சூரியன், நித்திரைசெய்யும் [திமிங்கிலகிலம் போன்ற] லெவியதன், தேன் கூட்டைச் சுற்றி மொய்க்கும் தேனீக்கள், கூளிகளின் களியாட்டு ஆகிய உவமானங்களை நோக்குவார்களானால், அவற்றிலுள்ள பெருவனப்புக்கள் அவர்களுக்கு எளிதிற் புலப்படும்.

இதுவரை சுவர்க்க நீக்கம் முழுவதுக்கும் பொதுமையான இலக்கணங்களுள் விசேடமாக முதற்காண்டத்துக்குப் பொருத்தமாயுள்ளவற்றை எடுத்துக்காட்டினோம். இனிமுதற்காண்டத்துக்கே சிறப்பாக உள்ள வனப்புக்கள் கூறப்படுகின்றன. பின்வருவதுஆங்கிலேய பாஷையில் ஸ்டாபர்டு புரூக் (Stopford A. Brooke) என்பவர் கூறியிருப்பது.

**முதற் காண்டம்.**—நூல் விஷயம், மனிதன் ஆதியிற் கடவுளுக்குக் கீழ்ப்படியாமையினால் [அவன் வாழ்ந்து கொண்டிருந்த ஏதேன் தோட்டமாகிய] சுவர்க்கத்தை யிழந்தது. மில்டனார் அவ்விழவு எப்படி நேர்ந்ததென்று [தேவ ஆவியானாவினாவும்] வினாவுபவராக, அவ்விழவுக்குக் காரணத்தைத் தெரிவிக்கின்றார். அதன்மேல், சாத்தான் தான் அழிவடைந்தமையைக் கண்விழித்தறியும் சமயத்தில், அவன் நரகத்திலிருந்த நிலைமையை விவரித்தலோடு நூல் ஆரம்பிக்கின்றது. அதன் பாமண்டல மிழந்த கதை,மனிதன் சுவர்க்க மிழந்த

கதையையறிவதற்கு நம்முடைய மனத்தை ஆயத்தப்படுத்துகின்றது. அவன் தன் முழுப்படையையும் ஒன்ருகச் சேர்த்து, [முன் பரமண்டலத்தில் செய்த யுத்தத்தில்] பலம் பயன்படாததாயின தாலுல், சூதினுல் யுத்தம் நடத்தத் துணிந்து, அவர்கள் கவர்ந்து கொள்ளக்கூடிய ஒரு புதிய உலகத்தையும் அதைப்பற்றித் தான் பரமண்டலத்தில் கேள்வியுற்ற வதந்தியையும் பற்றிப்பேசி, நூதனமாகச் சிருட்டிக்கப்பட்ட பூமியில் எவ்வாறு தீமை பிரவேசிக்கும்படி செய்து கடவுளுக்கு வருத்தமுண்டாக்கலாமென்று தீர்மானிக்கும்படி நரகத்தில் திடீரென்று நிருமாணஞ் செய்யப்பட்ட சருவபைசாச மாளிகை (Pandemonium) யில் ஒரு ஆலோசனைச் சங்கங்கூட்டுகின்றான். இவ்விதமாக, இன்னதென்று திட்டமாகத் தெரியாவிலும் வரையறையின்றியும் குறிப்பாகக் கூறப்பட்டாலும், முக்கிய விஷயம், நம்முடைய மனதிற் பதிந்து ஆரம்பமுதல் [தேவனே மனிதனுக அம்] மனிதனே காவியத்தலைவனு யிருத்தல் வேண்டுமென்று நாம் எதிர்பார்க்கிறேம்.

ஆனல் அந்தவிதம் என்ன [ஆச்சரிய] விதமாயிருக்கின்றது! என்ன விசித்திரக் காட்சிகளூடு நாம் நடத்தப்பட்டுச்செல்கின்றேம். கவியின் கற்பனசக்தி எங்கும் அவரைக் கைவிடவில்லை. கதையினிமை, படிப்படியாக, நரகத்திற் சேனை திரட்டப்படுதலோடு தொடங்கிச், சாத்தான் அத்தியந்த சிந்தனையும் துக்கமும் அடைந்து * நிந்தாப்பிரசங்கம் செய்யுமளவும், மெல்லமெல்ல அதிகரித்துத் திரள்கின்றது. அவ்வினிமை, அடிவானத்தில் கிளம்பி வளர்ந்து உச்சிவானத்தில் வெடிக்கும் இடிமேகம்போலிருக்கின்றது. முதலில் நரகம் நிச்சத்தமாயிருக்கின்றது——பின்பு அழிவுற்ற பிரதம தேவதூதன் விழித்துச் சுற்றும் விசனத்தோடு பார்க்கின்றான். அவனுடைய இந்த ஒன்றியான வடிவத்தோற்றம் என்றும் நம்முடைய மனோபாவனையில் அவனைத் தனியாக விளங்கும்படி செய்கின்றது. அவன் பெயல்செபுவை அழைத்துப்பேசுகின்ற விசனமும் தருக்கும் கலந்த பேச்சுடனே காவியத்தின் உற்சாகம் துவக்கமாகின்றது. இருவரும் ஒன்றுசேர்ந்து [தாங்கள் முன்கிடந்த எரிகடலின்] எரிகரைக்குப்போகின்றார்கள். அங்கேஅவ்விருவருடைய வடிவங்களும் மில்ட்டனுடைய மனோபாவனையின் நிருமித சாதுரியத்தினுல் பிரத்தியட்சமாகத் தோன்றும்படி உருவகிரப்பட்டுப்பிரத்தியேகமாக

* நிந்தித்துப் பேசுதல்.

விளங்குகின்றன. மற்றவர்கள் பிரமையடைந்து தீக்கடலிற் புரண்டு கொண்டு கிடக்கின்றார்கள். இப்போது அவர்களை யெழுப்பும் சாத்தானுடைய கடோரமும் இகழ்ச்சியுமான வார்த்தைகளில் விசனங் குறைந்தும் சருக்கு அதிகரித்தும் காணப்படுகின்றது. முழுப்படையும் நரகமைதானத்தில் வட்டமிட்டுப் பறக்கும்போது, காவியத்தின் இனிமை ஆழமுடைத்தாகி நம்மனக் கண்ணுக்குக் காட்டப்படும் வியப்பான காட்சி பூரணப்படுகின்றது. நரகமும் நரகப் பிரதேசம் யாவற்றினுமுள்ள ஒளியும் இப்போது விழிப்படைகின்றன. தேவதூதர்களின் மனோகதி சாத்தான் மனோகதியை ஒத்திருக்கின்றது. அவர்கள் முதலில் மனக்குழப்ப முடையவர்களாய் விசனத்தினுலடியுண்டவர்களாயிருந்து பின்பு சிக்கிரம் ஒழுங்காக அணிவகுத்து நிற்கிறார்கள். [சாத்தானுடைய] பெருங் கொடிச்சுருட்டு விரித்து உயர்த்திப் பிடிக்கப்பட்ட உடனே அவர்கள் விசனம்மறைந்து சலனம்மாறிக் குறித்த எண்ணம் மேலிடுகின்றது; கோபம் ஒழிந்து திடமான வீரம் ஸ்திரப்படுகின்றது. அவர்கள் தங்களுடைய பல்லாயிர கேதனங்களையும் உயர்த்தித் தங்கள் தலைவனுடைய ஆஞ்ஞையை எதிர்நோக்கி நிற்கின்றார்கள். இப்போதுள்ள அற்புதக் காட்சியை நோக்குவோர் இதற்கதிகமாக மனோபாவனையை உயர்த்தல் கூடாமையானதென்று நினைப்பார். ஆனால், [அவர்கள்] இப்படி நினைக்கும் நிமிஷத்தில்தானே மில்ட்டனார் [மனோசக்தி,] கெம்பீரமாகக் கிளம்பி இந்தக்காண்டத்தில் ஒப்பற்ற சிலாக்கியமுடைய [சாத்தானது] பிரசங்கமும் [அவனதுவடிவக்] காட்சியும் நிகழும்படி நிருமி[த்தலைப்பார்]க்கின்றார் [ஆவார்]. கருவமும் துக்கமும் காம்பீரியமான உறுதிப்பாடும் சாத்தானுடைய வடிவத்திலும் வார்த்தைகளிலும் கலந்து விளங்குகின்றன. இவையெல்லாம், 'போர்' என்றவார்த்தை [சாத்தானால்] உச்சரிக்கப்பட்டு[ப்படைஞர்களுடைய] சுவாலிக்கின்ற பல கோடிவாள்கள் [உறையினின்று துள்ளி] வெளிக்குதிக்கும் வரை, படைஞர்களையும் அவர்கள் மனோநிலையையும் வருணிக்கும் வருணனையில் பிரதிபிம்பித்துச் சொலிக்க, கடைசியாக [இந்தக் காண்டத்தின்] உச்ச இனிமை பெறப்படுகின்றது. எங்கும் காட்சி மாண்பு, கதித்து விருத்தியாகும் கருத்து மாண்போடு தொடுத்து வளர்ந்திருக்கின்றது. இந்தக் காண்டம் தாவீதின் உத்கிருஷ்ட மேம்பாடுடைய சங்கீதங்களின் முறையை அநுசரித்துச் சமைக்கப்பட்டிருக்கின்றது. ஆரம்பத்தில் அதிவேகமுடைய மனோவிகாரமொன்று திடீரென்று தோன்றி வளர்ந்துயர்ந்து, மத்தியத்தில்

மூர்த்தன்னிய நிலைமையின் உச்சியை எட்டி அடைகின்றது ; பின்பு மெல்ல மறையத்துவங்கி, முடிவாகும்போது இங்கிதமான வனப்புக்களின் சின்னங்களைப்பொருந்தி, இறக்கத்தில், முக்கிய விஷயத்துக்குத் தூரமாகவேயாயினும் சம்பந்தமுடைய இனிய கிளைக்கருத்துக்களால் சாந்தம் அடைகின்றது. [இந்தக்காண்டத்தில்] உச்ச இனிமைக்கு முன்னிகழ்கின்றதும் படைத்தலைவர்கள் பின்பு பூமியில் வணங்கப்படுகிறபடியே அவர்களை வருணிக்கும் வருணனையுடங்கியதுமாகிய கிளைக்கதை, கதித்தோங்கிக்கொண்டிருந்த மனவெழுச்சியைப் பின்புகளைப்பின்றி உயர்த்தக்கூடிய அளவுக்குத் தணிக்க உதவுகின்றது. உச்ச இனிமையடைந்தபின், இறக்கம் ஆரம்பிக்கும்போது, சருவபைசாசமாளிகை கட்டும் கிளைக்கதை, நிகழ்ந்த சஞ்சலக் காட்சியைப்போக்கி, அதன் தானத்தை [வேறு இனிய காட்சியால்] நிரப்பி நரகத்தையே [வாழ்க்கைக்கு] எளிதாகவும் உற்சாககரமானதாகவும் செய்கிறது. கதை, வரவரத் துக்ககரம் குறைந்து சீக்கிரமாக இனியதாக்கப்பட்டிருக்கின்றது. மில்டனுரது கற்பனுசத்தியின் மனோகரமும் பாண்டித்தியமும் அமைந்த விநோதமுயற்சி அக்கதையைப் பல விகற்பமுடையதாக்குகின்றது. [உரோமபுரியில் சிற்பதொழில் சிறக்கவிளங்கும் விக்கிரகங்கள் பலவற்றையுடைய] சருவதேவாலயத்தைக் கண்ணுற்றோருடைய ஞாபகத்திற்றோன்றும் இன்பத்துடன் சிற்பவேலை [நமது மனக் கண்ணுக்குமுன்] கொண்டுவரப்படுகின்றது. சிறந்த பூர்வகதைகள் கவியின் சாதுரியத்துக்கு உதவிசெய்கின்றன. பனித்தரையில் சுறுசுறுப்புடையவைகளாய்ச் சரிக்கும் தேனீக்களையும் ஆரணியத்தில் விளையாடும் கூளிகளையும் பற்றிய இரண்டு உவமானங்களாலும் நரகத்தின் இருண்டவாயுவைவிட்டு நமது மனம் பூரணமாக வெளியே கொண்டுவரப்படுகின்றது. இந்தக்காட்சிகள் [முந்தியபாகத்தையறிவதில்] மிக அதிகமாக முயன்றிளைத்திருக்கும் நமது பாவனுசத்தி இளைப்பாறும்படி உதவுகின்றன. [இக்காட்சிகளைக்காட்டும்] கவியின்தொழில் இடிக்கின்றமேகம் நீங்கி யொழியும்போது மேற்குத்திசையில் இலேசான இனிய வருணங்களுடைய மேகங்கள் நிரம்பும்படி செய்கின்ற இயற்கை (Nature) யின் வேலையையே ஒத்திருக்கின்றது. ஆலோசனைச் சபையிற்கூடிய பெரிய பிரபுக்களை வருணிக்கும் சில கடைசிவரிகள் [மற்றவருணனைகளால் நிறுத்தப்பட்டிருந்த] நூல்விஷயத்தைச் சிலாக்கியமாக [நம்முன் நிகழும்படி] திரும்பக்கொண்டு வருகின்றன.

## தத்துவக்கோள்கைகள்.

மனிதனிடத்துள்ள எல்லாவற்றையும் ஆண்டு எல்லாவற்றை யும் வெளிப்படுத்தி அவன் நினைக்கும் யாவற்றுக்கும் திறவுகோலாகி அவன்பாலுள்ள எவற்றினும் உயர்ந்து ஆழமுடைத்தாய் முக்கிய மானவற்றுள் முக்கியமானது யாது? அது, ஐம்புலன்களுக்கும் விஷயமான தரிசனீய உலகத்துக்கும், எல்லையற்றதாய்க் காட்சிக்க மையாததாய் உருவற்றதாய் உள்ள மானசிக உலகத்துக்கும் உள்ள சம்பந்தம் அல்லது அசம்பந்தத்தை உணர்தலின் வகையேயன்றி வேறியாது? இந்த விஷயத்தைப்பற்றி அவன் நினைத்தல் அல்லது உணர்தலே, அவனுடைய தத்துவசாஸ்திரமாகவிருக்கிறது. இவ் விஷ யத்தைப்பற்றி யாதொன்றும் நினைக்கவேண்டாமென் றிருப்பானு யின், அவ்வாறிருத்தலே அவனுடைய தத்துவசாஸ்திரமாகின்றது. இவ்விஷயத்தைப்பற்றிக் கிரந்த கர்த்தாவின் அறியுள்ளாத கருத்துக் களை விளங்க உடைத்தாயிருப்பதினும் ஒரு கிரந்தம் வேறு என்ன அருமை உடைத்தாயிருத்தல் கூடும். சுவர்க்க நீக்கம், மனிதனுக்கு முக்கியமான விஷயங்களைப்பற்றி மில்ட்டனார் எவ்வாறு நினைத்தா ரென்றும் எவ்வாறு உலகத்தாருக்குப் போதிக்கக் கருதினரென்றும் பிற் காலத்தவர் அறியும்படி எழுதி வைத்த சாதனம் போன்றிருக்கி ன்றது. ஆனால் அந்த விஷயங்களைச் சாஸ்திரிகள் அவைகளின் யதார் த்த நிலைப்படி கூறுவது போலக் கவிஞர் கூறுவது பொருந்தாதாக லின் அவைகளை அறிகுறிகள் மூலமாக மில்ட்டனார் கூறுகின்றார்; ஆயினும தந்நூலிற் சிற்சில இடங்களில் அவ்வறிகுறிகளை, அவை எவ்வுண்மைகளை உணர்த்துகின்றனவோ அவ்வுண்மைகளாகவே கொண்டு விடலாகாதென்று வாசிப்போரை எச்சரிக்கின்றார்.

## காலதேச வர்த்தமானப் பெருமை.

இவ்வாறு அறிகுறிகளால் தான் சொல்லக்கருதிய விஷயங்களை வெளியிடும் சுவர்க்கநீக்கம் எவ்வளவு ஆச்சரியமானதாயிருக்கின்றது! சூரியாதி கிரகங்களுடன் நட்சத்திரங்களெல்லாம் அடங்கிய மனுஷ உலகம் பரமண்டலத்தினின்று ஒரு துளிபோலத் தூங்குகின்றது; பரமண்டலமோ படமூலமாக மனோபாவனைக் குறவியாக வடிவமு டையதாகக் காட்டப்பட்டதேயன்றி, உண்மை நோக்குமிடத்து, விருத்தமென்றும் சதுரமென்றும் வடிவு வரையறுக்கக் கூடாததாயி ருக்கின்றது; நரகம் அதிபாதாளத்திலே வைக்கபட்ட தாயினும்

அளவுபட்ட ஆழத்தே பரமண்டலத்தினின்றும் தூரத்தப்பட்டுள்ள ஆவியர்கள் (பூமியை அடைய மேல் நோக்கிச் செல்வாரும் திரும்பத் தன்பால் வந்து சேரக் கீழே தாழ்வாரும் ஆக)வாழும் இடமாயிருக்கின்றது, பரமண்டலத்துக்கும் நரகத்துக்கும் இடையே, கொந்தளித்து மனுஷிய உலகத்துச் சுற்றுச் சுவர்மேல் மோதிக்கொண்டு அச்சுவரை உடைத்துட் செல்லவாயினும், பரமண்டலத்தினின்று தங்கச் சங்கிலியால் சமநிலைப்படத் தூக்குண்டிருக்கும் அவ்வுலகத்தைச் சிறிதும் அசைக்கவாயினும் வலியற்றதாய் மனோபாவனாதீதமான இருண்ட மூலப்பிரகிருதி இருக்கின்றது. இதனிலும், உண்மையாக, எல்லா முக்கியப்பொருள்களையும் அதிகமாக உட்கொண்டமானதக்காட்சி எந்தக் கவியின் மனோபாவனையிலும் உதயமாயிருப்பதுண்டோ? வேறெந்தக் கவி அபாரவிஸ்தீரணத்தில் இதனோடு ஒப்பிடத் தகுதியுடைய அளவு இடத்தை காட்சிக்கினிய அறிகுறிப்பெரும்பொருள்களாலாயினும் எங்கும் நிகழும் தொடர்ச்சியான கதையினாலாயினும் நிரப்பியிருக்கின்றான்? கவிகூறும் கதை எங்கும் படர்ந்து நிகழ்வதும், கவி, வாசிப்போர் மனக்கண்ணின் எதிரில், என்றும் அழியாத நுட்பத்துடன் உருவகிர்ந்து மிகுந்த தெளிவோடு தோற்றுவித்திருக்கிற பிரமாண்ட கோளங்களடங்கியதுமாகிய அபார விஸ்தீரண முடைமையால் இந்நூலை மிஞ்சிய நூல் எக்காலத்தும் இருத்தல் கூடாது. இது நிற்க. கதையின் மாண்பு எவ்வளவு சிறந்ததாயிருக்கின்றது! ஓர் அத்தியக்ஷ தேவதூதன் பரமண்டலத்தில் கலகம் செய்து, அங்கிருந்து தூரத்துண்டு நரகத்தில்வீழ்ந்து, அதனினின்றும் மீண்டு கிளம்பி மனுஷிய அண்டத்தையடைந்து, அந்த அண்டத்தினுள்ளே நட்சத்திரங்கள் நிறைந்த வெளியூடு பறந்துசென்று கடைசியில் அவ்வண்டமத்தியமாக உள்ள பூமியைக் கைப்பற்றி, அதன் ஆரம்ப சரித்திரத்திலேயே (நன்மையோடு) தீமைகலந்து விளையும்படி செய்வதாகிய தீமைவந்த வரலாற்றை விவரிக்கும் கதையினும் அதிக மகத்துவமான கதையாயினும் அதிகப் பொருள் நிறைந்த கதையாயினும் எக்காலத்திலேனும் இருத்தல் கூடுமோ? கதை நிகழும் விஸ்தாரமான இடத்தையும் மனதைக்கவரும் கதை மகத்துவத்தையும் நோக்கில், இந்நூல் உலகத்தில் இவ்வளவு மதிப்பை யுண்டாக்கியிருப்பது ஆச்சரியமன்று. மில்ட்டனார் எதிலிருந்து தந்நூலுக்கு வேண்டிய சுருக்கப் பொருள்களைச் சிரத்தையோடும் எடுத்து யாவரும் பெருவியப் படையும்படி விஸ்தாரப்படுத்தினாரோ, அந்த விவிலிய நூலின் சுபாவமான சரித்திரம் இடம்

பெருது, மில்ட்டனுருடைய சாத்தானும் அவராற் கூறப்பட்டுள்ள சிருஷ்ட்டி விவரணமுமே, பிரித்தானியரது மனோபாவனையில் குடிகொண்டிருக்கின்றன.

## நூலினிமையின் நிலைப்பு.

வாசிப்போர் மனதைக் கவரும் சக்தி, சுவர்க்க நீக்கத்துக்கு என்றும் நிலையானதாயிருக்குமோ, இராதோ என்பதைப்பற்றிப் பல வியாக்கியான கர்த்தர்கள் தத்தம் அபிப்பிராயங்களை வெளியிட்டிருக்கின்றனர். அவற்றின் சாரம் பின்வருவது :—

சுவர்க்க நீக்கத்தின் மனோகரசக்தி, மில்ட்டனுர் காலத்திலும் அதற்குச் சற்றுப் பிந்தியகாலத்திலும் இருந்த அளவு இப்போதில்லை. அதற்குக் காரணம் இந்நூலை இப்போது அறிந்து நன்குமதிக்கும் பாண்டித்திய முடையார் தொகை குறைந்திருப்பதன்று. இந்நூலின் அருமை பெருமையை அளந்தறிதற்கேற்ற கல்வியாளர் அளவிறந்தாரிப்போதிருப்பதுபோல எக்காலத்தும் இருந்ததில்லை. வேறு யாதுகாரணத்தால் அம் மனம் வசிப்பிக்கும் ஆற்றல் குறைந்திருக்கிறதோவென்னில், கூறுவோம். முன்னமே கூறியபடி பொதுவாக ஜனங்களுள் மனோபாவனுசக்தி குறைந்திருப்பதொரு காரணம். இங்கிலீஷ் வழங்கும் தேசங்களிலே மில்ட்டனுர் காலத்திலே சுவர்க்கநீக்கத்தில் கூறப்படும் பிசாசுகளையும் தேவதூதர்களையும் பற்றிய நம்பிக்கை மில்ட்டனுரை யுள்ளிட்ட சகல ஜனங்களுக்கும் பூரணமாகவிருந்தது. அவ்விருகணங்களும் மனிதர்கண்களுக்கு எப்பொழுதும் பிரத்தியட்சப்படாவிட்டாலும் பூமியில் சஞ்சரித்து மனுஷகாரியங்களில் தலையிட்டு (ஊடாடி) அக்காரியங்களின் அநுகூலப்பிரதிகூலங்களுக்குக் காரணமாயிருந்தனவென்பது, அக்காலத்தவர் நம்பிக்கை. மேற்குறித்த தேசங்களில் இப்போது பிசாசுகளைப்பற்றிய நம்பிக்கை சர்வஜனங்களுள்ளும் அனேகமாக இறந்தொழிந்துபோய் விட்டது. தேவதூதர்களைப்பற்றிய நம்பிக்கையும் அந்த ஜனங்களுள் மேலானவர்களுள் அற்றுநீங்கிவிட்டது. சுவர்க்க நீக்கத்தில் எடுத்தாளப்படும் பூமித்தியசித்தாந்தத்தை யநுசரித்த ஞானசாஸ்திரக் கொள்கைகள், மில்ட்டனுர் காலத்திலேயே தலையெடுக்கத் தொடங்கிய சூரிய மத்திய சித்தாந்தக் கொள்கைகளுக்கு (அறிஞர்கள் மனத்தில்) இடங்கொடுக்கலாயின. மில்ட்டனுரும் அந்நூதனக்கொள்கைகளைச்சிறந்தவைகளாகக்கொண்டிருந்ததைச்சுவர்க்கநீக்கநூலிற் சில இடங்களில் வெளியிட்டிருக்கிருர். ஆயினும் தந்நூல்விஷயத்

னுக்குப் பழமையான பூமி மத்தியசித்தாந்தமே தக்கதென்று அதன் கொள்கைகளையே தந் நூற்கதை நிகழும் களனை விவரிப்பதில் உபயோகித்திருக்கின்றனர்.

தற்காலத்தில் சகல நாகரீகமடைந்த ஜாதியாருடைய ம[illegible]லும் பிரசன்னமாக விருக்கும் வானசாஸ்திரக்கொள்கைகள் [illegible] வருவன:— எத்திசையிலும் முடிவற்ற மஹாகாசம் அல்லது [illegible] வெளி, சுவர்க்கநீக்கத்திற் கூறப்படும் பரமண்டலம் மூலப்பிரகிருதி என்ற பகுப்புடையதன்று. அதில் இருள் மயமான மூலப்பிரகிருதி என்பது எங்கும் இல்லை; பூமியை மத்தியிற்கொண்டு சூரியன் சந்திரன் முதலியவை யடங்கி ஒளியூடுருவாத புறச்சுவருடைய மனுஷ்ய அண்டம் என்று கூறப்பட்டது, அப்படிப்பட்ட சுவரொன்றுமில்லாததாய்ப் பூமியை உள்ளிட்ட பல கிரகங்கள் சூழும் சூரியனை நடுவிலுடைய உலகம். ஒவ்வொன்று ஒரு சூரியன் அல்லது பல சூரியன்களை நடுநிலையாக உடைய இப்படிப்பட்ட உலகங்கள் (சுவர்க்க நீக்கம் கூறுவதுபோல ஒன்றுயில்லாமல்) எண்ணிறந்தவைகள் (தூரதிருட்டிக் கருவியால் நோக்குவோர்க்கு) எத்திசையிலும் முடிவின்றிக் காணப்படுகின்றன. நக்ஷத்திரமாகத் தோன்றுகின்றவை பெரும்பாலும் நமதுசூரியன்போன்ற சூரியன்களாக இருக்கின்றன. இந்தவான ஜோதிகளின் இடையே உள்ள வெளி, ஒளியூடுருவுந் தன்மையுடையதாயிருக்கிறது. ஒருநாள் இருபத்துநான்கு மணிகளாகவும், ஒரு மணி அறுபது நிமிஷங்களாகவும், ஒரு நிமிஷம் அறுபது விநாடிகளாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றனவன்றோ. அந்த விநாடி ஒன்றில் நிச்சயமான நியாயபூர்வமாயும் சோதனை மூலமாயும் யூரோப்பிய வானசாஸ்திரநிபுணர்கள், ஒளியானது சற்றுக் குறைய இரண்டுலட்சமயில் செல்வதாகக் கணித்திருக்கின்றனர். அப்படிப்பட்ட ஒளி, நமக்கு நக்ஷத்திரமாகத் தோன்றுகிற சில சூரியன்களிடத்திலிருந்து புறப்பட்டபின் நமது பூமியையடைய அனேக வருடங்கள் செல்கின்றனவென்பதும் நிச்சயித்தறியப்பட்டிருக்கிறது. அத்தகைய சூரியன்கள் நமது பூமியிலிருந்து எவ்வளவு தூரத்திலிருக்கின்றனவென்பதை நாம் பாவித்துக்கொள்ள வேண்டுமேயன்றிச் சொல்லியறியக்கூடாது. இவ்வளவுதூரங்களில் எந்தத் திசையிலும் சுவர்க்க நீக்கத்திற் கூறப்படும் மூலப்பிரகிருதிபோன்ற இருள்மயமான, ஒளி யூடுருவாத இடம் ஒன்றும் இல்லை.

**முற்றிற்று.**

# அரும்பத விளக்கம்.

| பாட்டு. | பதப்பொருள். | பாட்டு. | பதப்பொருள். |
|---|---|---|---|

## சிறப்புப்பாயிரம்.

க என்ற, இயன்ற; இறந்த, கழிந்த, சென்ற.
,, மூன்று கவிஞர், ஹோமர், வர்ஜில், மில்டடன்.
,, ஈன்ற, அக்கவிஞரைப்பெற்ற, அக்கவிஞர்கள் பிறப்பிடமாகிய.
,, ஆன்ற, அகன்ற.
உ இயற்கை, பிரகிருதி (Nature.)
,, அன்னதின்மிக்கது, ஹோமர், வர்ஜில் இருவரையும் பிறப்பித் ததனினு மேலானதை.
,, வல்லாதே, வல்லமையில்லாமல்.
,, மூன்றுவன், மூன்றுங்கவி ஆகிய மில்டடன்.
ச சிரல், மீன்கொத்திப் புள்
,, சிவண. போல.
,, திருமி, திரும்பி.
ரு உருண்ட, உருட்சியான.
எ அன, அப்படிப்பட்ட.
அ களன், இடம்.
,, விடயம், விஷயம்.
க கோல், அம்பு; நாண், வெட்கம்; கரி, யானை; அரி, சிங்கம்; பிழைப்பினும், (குறி) தப்பினும்; கரை, சொல்.
க பெட்டேன், விரும்பினேன்.
க0 வழுதி, பாண்டியன்; வளவன், சோழன்; செழியன், பாண்டியன்.
கக என்பெயரன், என்ற பெயரையுடையான்.
,, என்பெயரன், எனது பாட்டன்.
கஉ தனயன், குமாரன்.
,, என்தனையன், என்தன் ஐயன், எனது பிதா.
,, அர்ப்பிதம், உயர்ந்தோர்க்கு ஈயும் பொருள்.
,, சமர்ப்பித்தல், உயர்ந்தோர்க்கு ஈதல்.
கங மனக்கொள்வர், மனத்திற்கொள்வார்.
கச உரை, (மேலே) சொன்ன; ஆதவன், சூரியன்;
,, வெண்மதி, (1) வெண்மையான சந்திரன்; (2) மந்தமானபுத்தி.
,, பிரதிபலம், ஒருபொருளின் மேற்பட்ட ஒளிவேறொருபொருளின் மேற்பாய்வது (Reflction)
,, பெரியதாய வையகம், (1) பெரிதாகிய பூமி; (2) பெரியது ஆய் (ஆராய்) அவை (சபையார்) அகம் (மனம்) - பலவகைப்பட்ட பொருள்களுள் எவ்வெப்பொருள் அதனதன் வகையில் பெரியதென்று ஆலோசித் தறிகின்ற சபையார் மனத்தின்

பாட்டு. பதப்பொருள். பாட்டு. பதப்பொருள்.

கண்ணே.
கரு கவி, மில்ட்டன்.
,, முனி, அகத்தியர்; ஆக, ஆகவே, ஆதலால்.
,, கோட்டக்கது, கொள்ளத்தக்கது; உதனில், அதனில்.
,, கோதுகள் பொறுக்கென, குற்றங்களைப் பொறுக்க என்று.
கசு மன், அசைச்சொல்.
கஎ அன்னதே தகைய, அதேபோல.
,, கமை, பொறுமை.
,, மமர், மம்மர், மயக்கம்.

நூல்.

க பரன்பணி, தேவகற்பனை.
,, நுகர்ச்சி, உண்டல்.
,, மிருத்து, மரணம்.
,, தவிர் மரக் கனி, (தின்னக் கூடாதென்று) விலக்கிய மரத்தின் பழம்.
உ பிழைத்த, தவறிய.
ங பூதியச்சமட்டி, பூதங்கள் படைக்கப்படு முன்னிருந்த மூலப்பொருள்களின் கலப்பு, மூலப்பிரகிருதி (Chaos.)
,, போந்தவா, போந்தவாறு, வந்தவிதம்.
ச வாகீசாய், வாகீசையே, வாக்கணங்கே (Muse)
ரு ஆவயின், அவ்விடம்.
,, விலங்கல், மலை.
,, உவந்தனை, உவந்தவளாகி.
சு கத்தியம், வசனம். பத்தியம், பாட்டு.
எ புரிந்து, விரும்பி.
அ நிகழ்ந்த, நிகழ்ந்தவைகளை.
,, தெரித்தி, தெரியச்செய்.
,, சினை, முட்டை.
,, இறுத்த, தங்கிய.
கூ வயக்கியும், விளக்கியும்.
க௦ ஒக்கி, ஓங்குவித்து, உயர்த்தி.
,, தெரிக்கும், தெரிவிக்கும்.
கக உறப்பெறீஇயவர், மிகப்பெற்றவர்.
கஙு முற்றிய, (செய்து)முடித்த; கடக்குமா, கடக்குமாறு.
,, சொற்றி, சொல்வாய்.
,, ஆழ்பெற்றிய நிரயம், ஆழ்ந்த தன்மையுடைய நரகம்.
,, பிரான் உலோகம், பரமண்டலம்.
கச வருத்தனை, விருத்தி.
,, உரகம், பாம்பு.
கரு அடூஉ, அடுத்து.
,, பரற்பிழை, கடவுள்விஷயத்தில் தவறுசெய்த.
,, இரியுண், இரியுண்டு, துரட்டப்பட்டு.
கசு மருட்டு, மயக்கு.
கஎ கொன்னு, அச்சந்தரும்.
கஅ எத்தினும், எதனினும்.
ககூ பதிதப்போர், கடவுளுக்கு விரோதமான யுத்தம்.
உ௦ பாழிய, விசாலமுடைய.
,, ஒளிய, ஒளியை உடைய.
,, விசை கெழீஇ, வேகத்தோடு.

பாட்டு. பதப்பொருள்.

௨௦ அளற்று, நரகில்.
,, அரந்தை, துன்பம்.
௨௧ இறந்தகை, ஒடியுந் தன்மை.
,, என்றும் இல், எக்காலத்தும் இல்லாத.
,, கிளையாப்பு உறீஇ, விலங்கு பூட்டப்பட்டு.
,, தெறும், தண்டஞ் செய்யும்.
,, தோம் இழை, குற்றஞ் செய்.
௨௨ ஒன்பானே, ஒன்பது.
,, பிரிவிலன் என்றும் என். என்றும் பிரிதல் இல்லாதவன் என்னும்.
,, பேற்றன், பேறு உடையவன்.
௨௩ கோரம், பயங்கரமான.
,, கொட்புறீஇ, சுழலலுற்று.
௨௪ யாதனை, நரகத்திற் கொல்லாது வருத்தும்நோய்.
௨௫ பீழை, துன்பம்.
,, துருவி, தேடி.
௨௬ ஒவுபு, நீங்கி.
௨௭ கூர்க்கும், மிகும்.
,, ஏர்க்கும், எழும்.
,, சூர்த்துபு, சுழன்று.
௨௮ மெய்த்திட, உணர; அநர், துன்பம்.
௨௯ கழிய, மிகவும்; ஒலும், பொருந்தும்.
௩௦ இமிசை, துன்பம்.
,, அறஎரிந்தஅரு, முற்றும் எரிந்தொழியாத.
௩௧ இன்றெதிர்த்த, இன்றியெதிரத்த.

பாட்டு. பதப்பொருள்.

௩௬ இடக்குர், இடத்துக்கும்.
௩௭ பெட்பில், தன்மையினால்.
,, நிச்சத்தம், சத்தமின்மை.
௩௮ ஐய, அழகுடைய.
,, ஐயர், தேவர்.
,, மட்க, ஒளிமழுங்க.
௩௯ சவியின், ஒளியினால்.
௪௨ எறுழ், வலி.
௪௩ மைந்து, பலம்.
௪௪ பைதல், துன்பம்.
,, பசுங்கதிர், பொன்போலும் ஒளி.
,, திரிந்தும், வேறுபட்டும்.
௪௫ அநாயம், அநியாயம்.
௪௬ எற்றபோர், எதிர்த்த யுத்தம்.
௪௮ வாயும், வாய்த்த.
௪௯ பறந்தலை, யுத்தகளம்.
௫௦ கம்பம், அசைவு.
௫௨ காழ், வயிரம்,
௫௬ திவ்வியபம் ஆவகொண்டு, தெய்வத்தன்மையுடைய பொருள்களால்.
௫௮ துணிச்ச, துணித்த. கூர்மையுடைய.
௫௯ எமுற்று, இன்புற்று.
௬௦ தெம்மொழி, தன்மேம்பாடு உரைக்குமொழி.
,, பாடமைடன், மதப் பிரத்டன்.
௬௨ ஒல்கல், குறைதல்.
௬௪ செவணிய பொருந்திய.
,, என்ப, என்பவை.
௬௫ அதா அன்று, அதுவுமல்லாமல்.
,, தாழாது, தாமதியாது.
௬௭ மஞ்சு, வலிமை.

| பாட்டு. | பதப்பொருள். |
|---|---|
| ௬௮ | வேவினர், தூதர். |
| ,, | ஏயது, ஏவியது. |
| ௭௦ | மென்மை, மெலிவு, பலயீனம். |
| ௭௨ | நீயநின்று, நீயவற்றினின்று. |
| ,, | எய்துமா, எய்துமாறு. |
| ,, | ஏயொணாது, ஏய ஒண்ணாது. |
| ,, | நலன் நின்று, நலத்தினின்று. |
| ௭௪ | மறுவலும், மறுபடி |
| ௭௬ | இரைத்து, ச |
| ,, | சும்மை, ஒலி. |
| ௭௭ | அற்றம், சமயம். |
| ,, | இன்னே, இப்பொழுதே. |
| ௭௯ | உழிதரல், சுழலல். |
| ,, | சேறும், செல்வோம். செலீஇ, சென்று. |
| ,, | அயர்வுயிர்க்குநம், இளைப்பாறுவோம். |
| ௮௦ | உறந்து, உறும்படிசெய். |
| ௮௨ | சகன், தோழன். |
| ,, | தரங்கம், அலை. |
| ,, | சேந்த, சிவந்த. |
| ,, | ஆன்ற, அகன்ற. |
| ௮௩ | ஏற்ற, எதிர்த்த. |
| ௮௫ | செலவழுங்குதல், வழியிற் செல்லமாட்டாது வருந்தல். |
| ,, | பல்கால், பலதடவை. |
| ௮௬ | பாணித்தல், தாமதித்தல். |
| ,, | மண்ணை, பிசாசு. |
| ௮௭ | வல்லான், வல்லமையில்லான். |
| ௮௯ | மடி, மடங்கு. |
| ௯௦ | ஆற்றவும்பேராக்கை, மிகப்பெரியதேகம். |
| | ழ்ச்சியும் ஒருபாத்திரத்திலிருந்து வேறொருபாத்திரத்தில் வார்க்கப்படும் தன்மையும் உள்ளதீ. |
| ௯௨ | |
| ௯௩ | மேக்கு, மேல். |
| ௯௪ | கடுப்பு, வேகம், விரைவு. |
| ௯௭ | அற்று, அது. |
| ,, | ஊற்றம், வலி. |
| ௯௯ | பவர்க்கம், நரகம். |
| ,, | வல்லும், வல்லமையுடையது. |
| ௧௦௦ | யாங்கண், எவ்விடம்; எங்கு. |
| ,, | அழுக்கறுக்கும், பொறாமைகொள்ளும். |
| ,, | படைத்தானல்லான், படைத்திலன். |
| ௧௦௩ | கவற்சி, கவலல், கவலை. |
| ,, | இறைமை, அரசாட்சி. |
| ,, | நயத்தகும், நயக்கத்தகும், ஆசைப்படத்தக்கது. |
| ௧௦௨ | மனக்கு, மனத்துக்கு. |
| ,, | மாழாந்து, மயங்கி. |
| ௧௦௭ | கூளி, பேய். |
| ,, | சுவல், தோள்மேல். |
| ௧௦௮ | ஆனும், ஆயினும். |
| ,, | பங்கர், பள்ளத்தாக்கு. |
| ,, | தோன்றுவ, தோன்றுகின்றவைகளை. |
| ௧௦௯ | சேய்த்தின், தூரத்தில். |
| ,, | அணியவாக, சமீபமானவைகளாக. |
| ,, | தெரித்திடு, தெரிவிக்கிற. |

| பாட்டு. | பதப்பொருள். |
| --- | --- |
| கக௨ | காவணம், பந்தல். |
| ,, | இவுளி, குதிரை. |
| ககங | இவர், இசரவேலர்; அவர், பார்வோன் முதலோர். |
| ககஅ | அதாஅன்று, அதுவன்றி. |
| க௨0 | ஆனும், ஆயினும். |
| க௨க | பாடண்டன், மதப்பிரஷ்டன; மதன், கறுப்பு. |
| க௨௨ | குயின், மேகம். |
| க௨ங | வயின், (1) வயிறு; (2) இடம். |
| க௨ரு | கலாதி, கலகம். |
| கங0 | வீழும், விழுந்த. |
| ,, | வீழும், விரும்பும். |
| கங௨ | குறசிதம், அருவருப்பு. |
| கஙங | கிரீடியவர், கிறுத்தினவர். |
| கஙசு | செற்று, நெருங்கு. |
| கசங | ஒவ்வி, பொருந்தி. |
| கசசு | புரிந்தது, விரும்பியது. |
| ,, | மிசிரம், கலப்பு. |
| கசஎ | பரிணமித்தல், உருமாறுதல். |
| கருக | சிலேப்பத்திமை, விக்கிரகபத்தி. |
| கரு௨ | உடற்றி, வருத்தப்படுத்தி. |
| கருச | நிகேதனம், ஆலயம். |
| கருரு | கடவுள்ஞானம், தெய்வீகஞானம். |
| கருசு | பின்னற, பின்பு; தளி, ஆலயம்; வாயதல, வாயில். |
| கருஎ | உற்பாதம், இயல்புக்கு விரோதமானது. |
| கருக | தமக்கார், தமஸ்கு நகரத்தில் ஆர்ந்த. |
| கசுக | தப்பிமொ, தப்பிமொறு. |
| ,, | கைப்பிறைக்காம், இறைக்குக் கைப்பு ஆகிய. |
| கசுரு | முதல்மக்கள், தலைப்பிள்ளைகள். |
| கசுஎ | குடிகொண்மார், குடிகொள்வார். |
| கஎ௨ | இளவல், தம்பி. |
| கஎரு | நசியாமை, அழியாமை. |
| கஎஅ | உற்கை, விண்வீழ்கொள்ளி (Meteor). |
| ,, | மன்றமாதோ, அசைச்சொற்கள். |
| கஅ0 | எழுந்த, எழுந்தன. |
| கஅங | இறப்ப, மிக. |
| ககூ0 | பொருவு, ஒப்பு. |
| ககூக | ஆலோன், சந்திரன். |
| ,, | துன்னிமித்தம், அபசகுனம். |
| ,, | துவ்வாணர், பூமியில்வாழ்வோர். |
| ககூ௨ | கவுட்டேத்து, கன்னப்பிரதேசத்தில். |
| ,, | கவ்வை, துன்பம், கவலை. |
| ககூங | சகர், தோழர். |
| ,, | இழந்திமொ, இழந்திமொறு. |
| ,, | முறைபுரிய, தண்டிக்க. |
| ககூச | செறிசெய, தண்டிக்க. |
| ,, | பச்சாத்தாபம், கழிந்ததற்கிரங்கல், சென்றது நினைத்துவருந்தல் (Repentance.). |
| ,, | அநுதாபம், உடன்தபித்தல் (Sympathy). |
| ககூரு | நிற்ப, நிற்பவை. |
| ,, | கடுத்தனர், ஒத்தனர்; கோன், சாத்தான்; சிறை, பக்கம். |

| பாட்டு. | பதப்பொருள். |
|---|---|

ககூரு அறைவ, சொல்லப்படுபவைகளை.
,, உறை, துளிக்கின்ற.
,, பறைதல், சொல்லுதல்.
ககூஎ விழையா, ஒவ்வாத.
ககூஅ நாநாநுபவம், பலவகை அநுபவம்.
ககூகூ வெறிது, வெறுமையானது; வல்லுநர், வல்லவர்.
உ00 நயம், நன்மை.
உ0க அசைஇ, இருந்து.
உ0உ விளைததன்று, விளைத்தது.
உ0௩ அன்னன், அவன்.
,, வெள்ளிடை, வெளி (Space)
உ0ச வதந்தி, பிரஸ்தாபம் (Rumour.)
உ0ரு எற்று, எத்தன்மையானது.
,, அற்று, அது.
உ0எ செய்தன்று, செய்தது.
,, அறைகூவி, போருக்கழைத்து.
உ0கூ விந்தம், மலை.
,, தொழுதல், தோண்டுதல்.
உக0 அதர், வழி.
,, நேர்மை, (1) தேகநேர்மை, கிமிர்ச்சி; (2) மனநேர்மை, யோக்கியதை.
உகஉ இழைத்தல்செல்லா, செய்யமாட்டாத.
,, களியுறு, (1) பொன் இரத்தினம் முதலியவைவிளையும் இடம் பொருந்திய; (2) களிதலுற்ற.
உகரு அள்ளல், நரகம்.
உகசா நுரைவந்தீ, நீர்போல நெகிழ்ச்சியுள்ளதீ.
உகஅ நிரைய, வரிசையுடைய.
உஉ0 அமைந்த, அமைந்தன.
,, ஓவங்கள், சித்திரங்கள்.
உஉக கழுமலும், அமைந்த உடனே.
,, கம்பம், அசைவு.
உஉச நாற்றி, தூக்கி.
,, மீன், நட்சத்திரம்.
உஉரு அவாய், அவாவி, விரும்பி.
உஉஎ சுளித்து, கோபித்து.
உஉஅ அகப்பா, மதில்; பித்தி, சுவர்; உப்புறம், அப்புறம், அப்பால்.
,, நண்பகல், மத்தியானம்.
,, நீகாரம், பனி.
உ௩0 பயப்பட, பிரயோசனமாக.
உ௩க வள்ளுவவினைஞர், விளம்பரம்பண்ணுவோர்.
உ௩உ எய்க்கும், உணரும்.
உ௩ச நடவியதே, விசாலமுடையதே.
,, சாலாதே, அமையாமல்;
உ௩சா பலால இருல், வைக்கோலினால் செய்த தேன்கூடு; கலாம், கலகம்.
உ௩அ இன்னணம், இவ்வாறு.
உ௩கூ உட்கி, அஞ்சி.
உசக மந்தணம், இரகசியம்; மந்திரம், ஆலோசனை.
,, மூசற்று, மொய்த்து
,, மொழிநீத்தற்றார், மௌனமாக இருந்தார்கள்.

# பரிசோதன பத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨ | 21 | ஒரு | ஓர் |
| ௧௬ | 19 | சத்தளிந்து | சத்தளித்து |
| ௨௮ | 15 | சிங்காதானம் | சிங்காதனம் |
| ௨௯ | 4 | மண்டத்தில் | மண்டலத்தில் |
| ௩௪ | 13 | பமண்டல | பரமண்டல |
| ,, | 14 | ஒன்பது | ஒன்பது |
| ,, | 15 | மண்டத் | மண்டலத் |
| ௪௩ | 14 | லங்கரிக்க | லலங்கரிக்க |
| ௫௬ | 20 | நமேஸ்வரி | நரேசுவரி |
| ௫௯ | 16 | ஒரு | ஒரு |
| ௬௨ | 14 | வந்தவர் | வந்தர் |
| ,, | 20 | ஒ | ஓ |
| ௬௪ | 5 | சிங்காசெதனத் | சிங்காதனத் |
| ,, | 6 | வஞ்சனைபிறும் | வஞ்சனையிறேல் |
| ௭௫ | 9 | சிருடி | சிருட்டி |
| ௮௦ | 12 | சமாதன | சமாதான |
| ௮௧ | 27 | பரந்தது | பரந்து |
| ,, | 29 | மெள்ளமெள்ள | மெல்ல மெல்ல |
| ௮௩ | 23 | பொற்று | போற்று |
| ௮௭ | 6 | சோறி | சொற்றி |
| ௯௪ | 12 | துணிந்திடலாமரோ. | துணிந்திடலாமரோ" ,, |
| ௯௫ | 26 | நன்றெனலும் | நன்றெனலும் |
| ௯௬ | 1 | தொன்மை | "தொன்மை |
| ௯௭ | 26 | பொறி | பொரி |
| ௧௧௦ | 22 | அடோனி, ச | அடோனிச, |
| ௧௧௪ | 7 | இருந்த | சேர்ந்த |
| ௧௧௬ | 12 | கடைசியா | கடையாக |
| ௧௧௮ | 10 | நிறப | நிற்ப |
| ௧௧௯ | 22 | அசை இ | எய்தி |
| ௧௨௦ | 5 | விதமே அவன் எவன்வலி | விதம் அன்னன்ன வன்லி |
| ௧௩௪ | 13 | என்றென்னும் | என்றென்றும் |
| ௧௩௭ | 1 | நம்பிக்கையினின்மை | நம்பிக்கையின்மை |
| ,, | 6 | தீப்பொறி | தீப்பொரி |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௩௭ | 18 | சொல்லுகிறபடி, | சொல்லுகிறபடி) |
| ௧௪௧ | 8 | மண்டலத்தில் ஒடு | மண்டலத்தில் தூர திர்ஷ்டிக் கருவி வாயிலாகத் தோன்று |
| ,, | 9 | நிலங்கள் | நிலங்கள் நதிகள் |
| ,, | 24 | நிலமை | நிலைமை |
| ,, | 25 | விருட்சங்கள் | விருட்சங்களின் |
| ௧௪௪ | 8 | மிலேச்சச | மிலேச்சர் |
| ,, | 30 | மிருகபேத | மிருகரூப |
| ௧௪௫ | 14 | ஆலயத்துக்கு | ஆலயத்துக்கு |
| ௧௪௬ | 26 | ஆரோவோ | ஆரோவேர் |
| ௧௪௭ | 1 | மோவாபி | மோவாபியர் |
| ,, | 22 | அஷ்டரோத் | அஷ்டரோத் |
| ௧௪௮ | 1 | திரியும் | திரியவும் |
| ,, | 26 | மனைவியின் | மனைவியர் |
| ௧௫௦ | 3 | மாண் | மான |
| ௧௫௧ | 6 | கலைக்கும்கடவுளா | கலைக்கும் கடவுளரா |
| ௧௫௩ | 1 | ஆதரியா | ஆதிரியா |
| ,, | 32 | வசத்திலிரிந்து | வசத்திலிருந்து |
| ௧௫௪ | 29 | காளம் | கானம் |
| ௧௫௬ | 2 | படி] | படி. |
| ,, | 28 | ஸில்பானிய | ஸ்பானிய |
| ,, | 32 | மாமதிய | மகமதிய |
| ௧௫௯ | 26 | கருதி | கருதி] |
| ௧௬௦ | 3 | உண்டாகிய | உண்டாகிய] |
| ,, | 4 | முதலில் | [முதலில் |
| ௧௬௨ | 9 | ஒந்தாப | குந்தால் |
| ,, | 21 | தனத்தின் | தளத்தின் |
| ௧௬௩ | 2 | படியான) | படியான] |
| ,, | 9 | கைதொழிற்றி றத்துடன் | கைத்தொழிற்றிறத்துடன் |
| ,, | 15 | வெண்பதையும் கூடி இடைவிடா | வெண்பதையும் |
| ,, | 22 | திரவாக்கினி னயிது | திரவாக்கினியினது |
| ௧௬௫ | 23 | [இத்தலியாகிய | [இத்தலியாகிய] |
| ௧௬௬ | 26 | கிறிஸ்து | கிறிஸ்தவ |
| ,, | 32 | உபயோகிக்கிம் | உபயோகிக்கும் |
| ௧௬௮ | 2 | துடியாகி | துடியா |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கசுக | 20 | அதிகாரதிதை | அதிகாரத்தை |
| கஎஉ | 18 | கடவுள் | கடவுள் உலகத்தை |
| கஎரு | 7 | தாமெடுத்தாலும் | தாமெடுத்தாளும் |
| ,, | 8 | ளாக | ளாக இருக்க |
| ,, | 24 | வரப்பட்டு, | வரப்பட்டு) |
| கஎச | 26 | வென்றும் | வென்றும் |
| கஎஎ | 10 | பூவுலகாகிய | பூலோகலகாகிய |
| கஎசு | 33 | ஆகியவை | ஆகியவை |
| கஅ0 | 6 | [illegible] | [illegible] |
| ,, | ,, | [illegible] | [illegible] |
| ,, | 7 | [illegible] | [illegible] |
| ,, | 22 | விளக்கிய | விளக்குறித்தை விளக்கிய |
| கஅக | 10 | கொடுமெகும் | கொடுக்கும் |
| கஅரு | 30 | காட்சி. | காட்சி |